# ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸரின்
# ஹரிதாஸ த³ர்பண

## தமிழில் அர்த்த விளக்கங்களுடன் எழுதி வெளியிட்டவர்

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase
Bengaluru : 560078
https://jagannathakesava.blogspot.com
httis://dasa-sahitya.blogspot.com
Ph: 8904458276. haridasa.vijayam@gmail.com

# ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸரின் ஹரிதாஸ த$^{3}$ர்பண

## தமிழில் அர்த்த விளக்கங்களுடன்

ஸ்ரீஹரிவாயுகுருகளின் ஆசியுடன்
மார்ச் 10, 2023 பால்குண பகுள த்ருதீயை - ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகளின் ஆராதனை நாளன்று வெளியிடப்பட்டது.

## ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**வெளியிடுவோர்**
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase
Bengaluru : 560078
https://jagannathakesava.blogspot.com
httis://dasa-sahitya.blogspot.com
Ph: 8904458276. haridasa.vijayam@gmail.com

**இந்தப் புத்தகம் வெளிவருவதற்கு பொருளுதவி புரிந்த அனைத்து ஹரிபக்தர்களுக்கும் நன்றிகள்.**

## ஸ்ரீரமாகாந்த விட்டலதாசர்

20ம் நூற்றாண்டின் மிக முக்கியமான ஹரிதாசரான ஸ்ரீதந்தெ முத்து மோகன விட்டலதாசரின் சிஷ்யர்களில் ஒருவரே ஸ்ரீரமா காந்த விட்டலதாசர். குருகளிடமிருந்து தனது இள வயதிலேயே அங்கித உபதேசத்தைப் பெற்று, லௌகிகத்தில் ரெயில்வே பணியில் இருந்தாலும், ஹரிதாச சாகித்ய சேவைக்கு தம் வாழ்க்கையையே அர்ப்பணித்து, சம்சாரத்தின் சுக துக்கங்களில் ஈடுபடாமல், நிர்லிப்தராக இருந்து, வந்ததெல்லாம் ஸ்ரீஹரி கொடுத்தது என்று, சம-சித்தத்தினால் ஏற்றுக்கொண்ட ஸாதகர் ஸ்ரீரமாகாந்த விட்டலதாசர். ஸாதுகுலதிலக, கீர்த்தன சதுர - போன்ற விருதுகளை தாசர் பெற்றிருந்தார்.

ஸ்ரீரமாகாந்த விட்டலதாசர் 1906-1984ம் ஆண்டு வரையிலான தனது 78 ஆண்டுகள் வாழ்க்கையில், தாசர் எந்தவொரு புகழ், பெயர்களுக்கும் விருப்பமே பட்டதில்லை. யாருடைய தயவையும் விரும்பாமல் வாழ்ந்தவர். மௌனமாக ஹரிதியானம் செய்தவாறு, இலைமறை காய் போல, வாழ்க்கை நடத்தியவர். 'ஹெண்டரு மக்களு நின்ன தொண்டரெம்பவரு' என்னும் ஸ்ரீஜகன்னாததாசரின் வாக்கியத்தின்படி, தம் குடும்பத்தையே ஹரியின் கைங்கர்யத்தில் ஈடுபடுத்தியவர். கால நாமக பரமாத்மனின் மகிமையை புரிந்துகொண்டு ஒவ்வொரு நொடியையும் ஹரிசிந்தனையில், பயனுள்ளதாக ஆக்கிக்கொண்டவர். அத்துடன், தமது விலைமதிப்பற்ற ஆத்யாத்மிக அனுபவங்களை எழுதி, அடுத்த பரம்பரையினருக்கு மிகப்பெரிய உதவியை செய்தவர்.

**அங்கித உபதேசம்**

ரெயில்வே துறையில் வேலை பார்த்திருந்த கிருஷ்ணராயருக்கு, அடிக்கடி பணி மாறுதல் வந்துகொண்டிருந்தது. அவரும், அனைத்து ஊர்களுக்கும் சென்று, அங்கு அருகில் இருந்த அனைத்து புண்ணிய க்ஷேத்திரங்களை தரிசித்தவாறு, லௌகிக வாழ்க்கையை, தம் தார்மிக வாழ்க்கைக்கு ஏறும் படிக்கட்டுகளாக செய்து கொண்டார். கிருஷ்ண ராயருக்கு குரு தரிசன மற்றும் குரு உபதேசங்கள் ஆகியவை அவரது பாட்டி கேட்டுக்கொண்டதற்கு இணங்க ஆயிற்று.

அவர் பெங்களூரில் இருந்தபோது, தம் வீட்டிற்கு அவ்வப்போது வந்துகொண்டிருந்த 'பரமப்ரிய' தந்தெ முத்துமோகனதாசரின் அறிமுகம், பாட்டியின் மூலமாக ஆயிற்று. அந்த அறிமுகமே தொடர்ந்து கௌரவ, பக்திகளுக்கு வழி செய்து, கடைசியில் அவரிடம் அங்கித உபதேசம் பெறுவதாக ஆனது. தந்தெ முத்துமோகனதாசரே, கிருஷ்ணராயருக்கு ஸத்குருகளாகி, அவருடைய வாழ்க்கையின் கடைசி வரைக்கும், ஆபத்பாந்தவராகி, ஆத்யாத்ம பதத்தில் அவரை முன்னடத்தினார். அவருக்கு 'ரமாகாந்த விட்டலா' என்னும் அங்கிதத்தை அருளினார்.

தந்தெ முத்துமோகனதாசர், கிருஷ்ணராயரின் பாட்டி ருக்மிணி பாய் அவர்களுக்கு 'ஸீதாபதிவிட்டலா' என்னும் அங்கிதத்தைக் கொடுத்திருந்தார். அவருடைய தாயான பாரதி பாய் அவர்களுக்கு 'யாதவேந்திர விட்டலா', கிருஷ்ணராயரின் அக்காவான அம்பாபாய்க்கு 'கோபால கிருஷ்ண விட்டலா' என்னும் அங்கிதத்தைக் கொடுத்து ஆசிர்வதித்திருந்தார். கிருஷ்ண ராயருக்கு தமது அக்காவின் வாழ்க்கை ஒரு விதத்தில் உதாரணமாக இருந்து, ஹரிதாச பரம்பரையில் நுழைவதற்கு காரணமாக இருந்தது.

**தாச சாகித்ய சேவை**

அங்கிதோபதேசம் பெற்ற பிறகு, ரமாகாந்த தாசர், புடத்தில் இட்ட தங்கம் போல தூய்மையடைந்தார். குருகளின் தத்வ போதனையினால் அவருடைய வாழ்க்கை மிகப்பெரிய மாற்றத்தை அடைந்தது. குரு அனுக்கிரகமானது, அவருடைய அந்தரங்கத்தின் கதவியை திறக்கும் சாவி ஆயிற்று. ஹரிகுருகளின் குண சிந்தனை, நாமஸ்மரணை, ஆகியவை, தாசருக்கு நித்ய ஷ்வாஸோச்ச்வாஸத்தைப் போல சகஜமான செயல்கள் ஆயிற்று. குருகள் உபதேசித்த அங்கித நாமத்தின் நிரந்தர ஜபமானது, பிம்பமூர்த்தியின் பாத த்வயங்களில் நிர்மலமான பக்தியை உருவாக்கியது. தாசர் தம்முடைய உடல், மனம், செல்வம் என அனைத்தையும் உலக நாயகனான ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்து, தாச சாகித்ய சேவையை தொடங்கினார்.

மத்வ நவமி, ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் ஆராதனை, ஸ்ரீபுரந்தரதாசரின் புண்ய தினம் ஆகிய தினங்களை, மிகுந்த சிரத்தையுடன் கொண்டாடினார். குருகள் நிறுவிய தாஸகூட சபா நடவடிக்கைகளின் பங்கேற்பது மட்டுமல்லாமல், ஒவ்வொரு ஆண்டும் தேவராயன துர்காவில் நடந்துவரும் ஸ்ரீ நரசிம்ம ஸ்வாமி ரதோத்ஸவத்தில் பங்குபெற்று, நர்த்தன சேவை ஆகியவற்றை செய்து, தேக மோகத்தை வென்றார்.

ஹரிதாச சாகித்யத்தின் அத்யயனத்தினால் தாசரின் மனம் அத்யாத்ம உலகத்திலேயே சஞ்சரிக்கத் துவங்கியது. சஜ்ஜனர்களின் சகவாசமானது, வாழ்க்கையின் கஷ்டங்களை தைரியமாக எதிர்த்து நிற்கச் செய்து, சாதனையின் மார்க்கத்தில் நிரந்தரமாக அவரை இருக்கச் செய்தது. ஹரிகுருகளின் கருணா விசேஷத்தினால் அந்தரங்கத்தில் வந்த சிந்தனைகள் அனைத்தும், லயபத்தமான பாடல்கள் ஆயிற்று. குருகள் அருளிய 'ரமாகாந்த விட்டலா' என்னும் அங்கிதத்தில் அனேக கிருதிகளை தாசர் இயற்றினார். காவிய லட்சணங்களால் கூடிய அவருடைய பக்தி பரிதமான கிருதிகளை, குருகளான தந்தெ முத்துமோகன தாசர் அவ்வப்போது பார்த்து அவரை பாராட்டி வந்தார்.

இதனால், ரமாகாந்த தாசர் மகிழ்ந்து, 1938ல் ஹரிதாச தர்பண என்னும் கிருதியை பாமினி ஷட்பதியில் இயற்றி, அங்கிதம் கொடுத்த தம் குருகளின் பாதங்களில் சமர்ப்பித்தார். 137 நுடிகளைக் கொண்ட, ஹரிதாச கோஷ என்றே புகழ்பெற்ற ஹரிதாச தர்பணத்தை, தந்தெ முத்துமோகன தாசர் முழுமையாக படித்து மகிழ்ந்ததோடு மட்டுமல்லாமல், தாம் நடத்தி வந்த 'பரமார்த்த சந்திரோதய' என்னும் தார்மிக மாத பத்திரிக்கையில் அதனை வெளியிட்டு சிஷ்யரை பாராட்டினார்.

தாஸதர்மத்தின் கோஷத்தைப் (அகராதி) போல இருக்கும், தத்வங்கள் நிறைந்த 'ஹரிதாஸ தர்பண' என்னும் இந்தக் கிருதியில், பகவந்தனின் காருண்ய, த்வைத தத்வபோதனை, ஹரிதாஸரின் ஆசரணை, தாஸ தீக்ஷை, குருபக்தி ஆகியவை மிகவும் அழகான, எளிமையான நடையில் வர்ணிக்கப்பட்டுள்ளன. தேடினாலும் தோஷங்கள் இல்லாதது இந்த கிருதியின் விசேஷம்.

இதிலிருந்து, ஹரிகுருகளின் அருட்பார்வை கிருதிகாரரின் மேல் எவ்வளவு இருக்கிறது என்பது தெளிவாக தெரிகிறது. மிகவும் ஆழமானது என்று சொல்லப்படும் பல சாஸ்திர விஷயங்களையும், தாசர் எத்தகைய பாமரருக்கும் புரியுமாறு மிகவும் சுவாரசியமாக இங்கு நிரூபணம் செய்திருக்கிறார். கஷ்டமான பிரச்னைகளுக்கும் சுலபமான பரிகாரங்களை குறிப்பிட்டிருக்கிறார் என்பதை பார்க்கலாம்.

இத்தகைய சிறந்ததான ஹரிதாஸ தர்பண என்னும் கிருதியை எனக்கு பாடம் எடுத்த எனது அங்கிதோபதேச குருவான ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாஸருக்கு என் சாஷ்டாங்க நமஸ்காரங்கள். இதில் வந்த சந்தேகங்களை பரிகரிக்க உதவிய ஹரிதாஸினி திருமதி. ஜெயம்மா, பெங்களூரு அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகள். ஹரிதாஸ ஸாகித்யத்தின் இந்த அற்புத கிருதியை, அனைத்து ஹரிபக்தர்களும் படிக்க வேண்டும் என்பது என் சிறிய வேண்டுகோள்.

இந்தப் புத்தகத்தை என் குர்வந்தர்கத பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீஜகன்னாத கேசவனுக்கு அர்ப்பிக்கிறேன். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**
**பெங்களூரு**
**08-02-2023**

# ஹரிதாஸ த$^{3}$ர்பண

## இயற்றியவர்: ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்

**(1906-1984)**

## இவரது குரு: பரமப்ரிய சுப்பராய தாஸர்

## (ஸ்ரீதந்தெ முத்துமோகன தாஸர்)

## தமிழில் அர்த்த விளக்கங்களுடன்

**ஸ்ரீமனோஹர ஸுகு$^{3}$ண ஸுந்த$^{3}$ர**
**ஸ்வாமி வேதா$^{3}$தீத விக்ரம**
**காமிதப்ரத$^{3}$ தாமரஸப$^{4}$வ தி$^{3}$விஜக$^{3}$ண ஸேவ்ய |**
**ஸாம கா$^{3}$னவிலோல ப$^{4}$குதர**
**ஸ்தோ$^{1}$ம பா$^{4}$ந்த$^{3}$வ ப்ரேம முனிமன**
**தா$^{4}$ம மங்க$^{3}$ளவித்து ஸுஜனர ஸலஹு நீ ஸதத ||1**

ஸ்ரீமனோஹர - ஸ்ரீ லட்சுமியின் தலைவன்; ஸுகுண - நற்குணங்கள் நிரம்பியவன்; ஸுந்தர - அழகானவன்; ஸ்வாமி - அனைவருக்கும் தலைவன்; வேதாதீத - வேதங்கள் மூலமாக அறியப்படுபவன்; விக்ரம - வீரன்; காமிதப்ரத - விருப்பங்களை நிறைவேற்றுபவன்; தாமரஸபவ - தாமரையில் பிறந்த பிரம்மதேவர்; திவிஜகண - தேவதைகளின் கூட்டத்தால்; ஸேவ்ய - வணங்கப்படுபவன்; ஸாம கானவிலோல - ஸாம கானத்தை விரும்புபவன்; பகுதர ஸ்தோம - பக்தர்களால் புகழப்படுபவன்; பாந்தவ - அவர்களின் உறவினன்; ப்ரேம - அவர்களை விரும்புபவன்; முனிமன தாம - முனிவர்களின் மனங்களில் நிலைத்திருப்பவன்; ஸுஜனர - சஜ்ஜனர்களை; மங்களவித்து - மங்களங்களைக் கொடுத்து; நீ ஸதத - நீ எப்போதும்; ஸலஹு - அருள்வாயாக.

ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர், ஹரிதாஸ தர்பண கிருதியை துவக்கும் விதமாக, இந்த பத்யத்தை, மங்களாசரண பத்யமாக இயற்றியிருக்கிறார். ஸ்ரீஹரியின் அனந்தானந்த நற்குணங்களில் சிலவற்றை இங்கு குறிப்பிட்டு, வணங்கி, அனைவருக்கும் (இந்த

கிருதியை சரியாக செய்து முடிக்கவும்) மங்களத்தை அருளுமாறு வேண்டிக் கொள்கிறார்.

ஸ்ரீலட்சுமியின் தலைவனே, நற்குணங்கள் நிரம்பியவனே, அழகானவனே, அனைவருக்கும் தலைவனே, வேதங்கள் மூலமாக அறியப்படுபவனே**, வீரனே, (பக்தர்களின்) விருப்பங்களை நிறைவேற்றுபவனே, தாமரையில் பிறந்த பிரம்மதேவர் மற்றும் தேவதைகளின் கூட்டத்தினால் வணங்கப்படுபவனே, ஸாம கானத்தை விரும்புபவனே, பக்தர்களால் புகழப்படுபவனே, அவர்களின் உறவினனே, பக்தர்களை விரும்புபவனே, முனிவர்களின் மனங்களில் நிலைத்திருப்பவனே, ஸஜ்ஜனர்களுக்கு மங்களங்களைக் கொடுத்து, நீ எப்போதும் அருள்வாயாக.

ஹரிநாமதி$^3$ந்த$^3$லி த$^1$த்$^1$வேஷ மொத$^3$லாத$^3$
ஸுரரெல்ல வஷவாகி$^3$ இருதிப்பரோ

ஹரி நாமத்தைக் கொண்டாடினால், தத்வாபிமானி தேவதைகளே முதலான அனைத்து தேவதைகளும் நம் வசத்தில் இருப்பார்கள் - என்று நாம ப்ரஷம்ஸன ஸுளாதியில் ஸ்ரீவிஜயதாஸர் கூறுகிறார். இதன்படி இங்கு செய்திருக்கும் மங்களாசரணத்தினால், அத்தகைய தத்வாபிமானி தேவதைகளின் அருளையும் சேர்த்தே வேண்டியிருக்கிறார் ஸ்ரீதாஸர் என்று நினைக்க வேண்டும்.

ஸ்ருதி த$^1$திகளபி$^4$மானி லகுமி
ஸ்துதிக$^3$ளிகெ$^3$ கோ$^3$சரிஸத$^3$ப்ரதி
ஹத மஹைஸ்வர்யாத்யகி$^2$ள ஸத்$^3$கு$^3$ண கணாம்போ$^4$தி$^3$ |
ப்ரதிதி$^3$வஸ தன்னங்க்$^4$ரி ஸேவா
ரத மஹாத்மரு மாடு$^3$தி$^1$ஹ ஸம்
ஸ்துதிகெ$^3$ வஷனாகு$^3$வனிவன காருண்யகேனெம்பே$^3$ ||(2-3)

ஸ்ரீஹரியை - (ஸத்குண கணாம்போதி) ஸத்குணங்களின் கடல் - என்று ஹரிகதாம்ருத ஸாரத்தில் போற்றுகிறார் ஸ்ரீஜகன்னாததாஸர். இத்தகைய மகானுபாவன், தன் பாதங்களை வணங்குபவர்களான மகாத்மர்கள் செய்யும் ஸ்தோத்திரத்திற்கு வசமாகிறான் என்றால், இவனின் கருணையை நான் என்னவென்று சொல்லி வர்ணிப்பேன்?.

**எரகி$^{3}$ ஶ்ரீஹரி பாத$^{3}$கமலகெ**
**மருத பா$^{4}$ரதியரனு நமிஸுத**
**வரமதிய நீடெ$^{3}$ந்து$^{3}$ மனத$^{3}$பி$^{4}$மானிகெரகு$^{3}$வெனு |**
**கரிமுக$^{2}$ன ஸத்க்ருபெய பே$^{3}$டு$^{3}$த**
**பரம ஶ்ரீகு$^{3}$ருசரண ப$^{3}$லதி$^{3}$ம்**
**ப$^{3}$ரெயலெத்னவகெ$^{3}$ய்வெனீ ப்ராக்ருதத$^{3}$ பத்$^{3}$யக$^{3}$ள ||2**

ஶ்ரீஹரி பாதகமலகெ - ஶ்ரீஹரியின் பாத கமலங்களை; எரகி - வணங்கி; மருத பாரதியரனு - பாரதிதேவி, முக்யபிராணர்களை; நமிஸுத - வணங்கியவாறு; வரமதிய நீடெந்து - நற்புத்தியைக் அருளுங்கள் என்று; மனதபிமானிகெ - மனதிற்கு அபிமானியானவரை (ருத்ரதேவரை); எரகுவேனு - வணங்குகிறேன்; கரிமுகன ஸத்க்ருபெய பேடுத - கணபதியின் நல்லருளை வேண்டியவாறு; பரம ஶ்ரீகுருசரண பலதிம் - சிறந்தவரான குருகளின் பாதங்களின் அருளால்; ஈ ப்ராக்ருதத பத்யகள - இந்த பேசுமொழியிலான பத்யங்களை; பரெயலு - எழுதுவதற்கு; எத்னவகெய்வனு - எழுத முயல்கிறேன்.

ஶ்ரீஹரியை வணங்கியபின், தாரதம்யத்தின்படி தேவதைகளை சுருக்கமாக வணங்கி, கிரந்தத்தை துவக்குகிறார் ஶ்ரீதாஸர்.

ஶ்ரீஹரியின் பாத கமலங்களை வணங்கி, பாரதிதேவி முக்யபிராணர்களை வணங்கியவாறு, நற்புத்தியை அருளுங்கள் என்று மனோபிமானியான ருத்ரதேவரை வணங்குகிறேன். பின், கணபதியின் நல்லருளை வேண்டியவாறு, சிறந்தவரான குருகளின் பாதங்களின் அருளால், பேசுமொழியில் உள்ள இந்த பத்யங்களை எழுத முயல்கிறேன்.

ஶ்ரீஹரிவாயுகுருகளின் அருளை வேண்டியவாறு, விக்னங்களை தடுப்பவரான விக்னேஷ்வரனையும், தாரதம்யத்தின்படி சுருக்கமாக வணங்கியவாறு, அடுத்த ப்ராக்ருத (கன்னட) மொழியின் சிறப்புகளை அடுத்த பத்யங்களில் விளக்கத் துவங்குகிறார் ஶ்ரீரமா காந்த விட்டல தாஸர்.

**ப்ராணபதி ஸர்வோத்தமத்வத$^{3}$**
**ஞான உதி$^{3}$ஸலு தா$^{3}$ஸ போ$^{3}$தெ$^{4}$யு**
**கா$^{3}$னரூபதி$^{3}$ மனெய மாதினொளிரலு குந்தே$^{3}$னு |**

**ஞானிக3ளிக3பி4மதவு ப3ரித3பி4**
**மானதி3ம் ஜரியுவரு அக்ஞரு**
**ஜாணரிகெ3 ஸன்மார்க்க3தா3யக முகுதி காணிஸலு ||3**

ப்ராணபதி ஸர்வோத்தமத்வத - (பிராணதேவரின் ஸ்வாமியான) ஹரியின் ஸர்வோத்தமத்வத்தின்; ஞான உதிஸலு - ஞானத்தைக் கொடுப்பதற்காக; தாஸ போதெயு - தாஸ ஸாகித்யமானது; கானரூபதி - பாடல் (ஸாகித்ய) வடிவத்தில்; மனெய மனெயொளிரலு - அனைத்து வீடுகளிலும் பரவியிருக்க; குந்தேனு - என்ன பிரச்னை? (எதுவுமில்லை); ஞானிகளிகபிமதவு - (இந்த ஹரிதாஸ ஸாகித்யமானது) ஞானிகளுக்கு பிடித்தமானது (சம்மதமானது) ; அக்ஞரு - அஞ்ஞானிகள் (இதனை); பரிதபிமானதிம் - வெறுப்புடன்; ஜரியுவரு - புறக்கணிப்பார்கள்; ஜாணரிகெ - அறிவாளிகளுக்கு; முகுதி காணிஸலு - முக்தியை அடைவதற்கான; ஸன்மார்க்கதாயக - நல்வழியைக் காட்டுவதாக (இது இருக்கிறது).

ஹரிதாஸ ஸாகித்யத்தின் அறிமுகமாக தொடங்கும் பத்யம் இது. ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை இங்கு விளக்கத் தொடங்குகிறார் ஸ்ரீதாஸர்.

பிராணதேவரின் ஸ்வாமியான ஹரியின் ஸர்வோத்தமத்வத்தைப் பற்றிய ஞானத்தைக் கொடுப்பதற்காகவே, ஹரிதாஸ ஸாகித்யமானது, அனைத்து வீடுகளிலும், ஸாகித்ய (பாடல்) வடிவத்தில் பரவியிருக்கிறது. இத்தகைய ஹரிதாஸ ஸாகித்யமானது, ஞானிகளுக்கு சம்மதமானதாகும். அஞ்ஞானிகள் இதனை வெறுப்புடன் புறக்கணிப்பார்கள். அறிவாளிகளுக்கு, முக்தியை அடைவதற்கான, நல்வழியைக் காட்டுவதாக இது இருக்கிறது.

கலுஷ வசனக3ளாதொ3டெ3யு பா3
ம்பொ3ளெய பெ1த்தன பாத3மஹிமா
ஜலதி3 பொக்குத3ரிந்த3 மாண்த3பரெ மஹிஸுரரு ||(2-2)

இந்த கிரந்தம், சம்ஸ்கிருத மொழியில் இல்லாமல், பேசுமொழியில் இருந்தாலும், ஸ்ரீபகவந்தனின் பாத சரித்திரத்தைப் பற்றி பேசுவதால், ஞானிகள் இதனை ஏற்றுக் கொள்ளாமல் இருப்பார்களா? -- என்று

ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதசாரத்தில் கூறியிருக்கும் கருத்தை ஒட்டியே இந்த பத்யத்தின் அர்த்தமும் இருக்கிறது.

ஹரிதாஸ ஸாகித்யம் முக்தியை அடைவதற்கான நல்வழியைக் காட்டுகிறது என்னும் விஷயத்தை ஸ்ரீவாதிராஜ குருஸார்வபௌமர் தன்னுடைய தத்வஸார (வைகுண்ட வர்ணனெ) என்னும் கிரந்தத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

கன்னடி³யொளு தோர்ப்பந்தெ பூர்ணப்ரக்ஞர மத
து³ன்னத தத்வ ஸாரவனு
கன்னடி³ஸி ப³ண்ணிஸித³ வாதி³ராஜமுனிய
பி³ன்னபவென்னல மன்னிபுது³ ||(தத்வஸார)

ஸர்வக்ஞரின் (ஸ்ரீமத்வாசார்யரின்) சித்தாந்தத்தின், சிறந்த தத்வங்களின் சாரத்தை. (எளிமையான) கன்னடத்தில் தெளிவாக புரியுமாறு. (சம்ஸ்கிருதத்திலிருந்து) கன்னட மொழியில் மொழிபெயர்த்து. வர்ணிக்கும் நான் (வாதிராஜர்) கூறும் அனைத்தையும், (முக்கிய தத்வங்களின் நிரூபணையை), விடாமல் பின்பற்றவும். பகவந்தனின் மற்றும் பகவத் பக்தரின் சிறப்புகளை, குணகானங்களுடன் பாடுவது, புண்ணியத்தைக் கொடுக்கிறது. பாடுவதும், கேட்பதும் பக்திபூர்வகமாக இருந்தால், காதிற்கு இனிமை. மனதிற்கு மகிழ்ச்சி மட்டுமல்ல, ஆத்ம உத்தாரகமே ஆகிறது -- என்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

**பண்டி³தரு யதிவர்யரெல்லரு**
**ஹிண்டு³ஶாஸ்த்ர ரஹஸ்யதத்வவ**
**தொண்ட³ரிகெ³ போ⁴திஸலு ப்ராக்ருதவன்னே ப³ளிஸுவரு |**
**கண்ட³ரித³ரொளு ஞான முக்²ய வி**
**தண்ட³ வாத³வு வ்யர்த்த² ஹட கை**
**கொண்டு³ ப³ளலுவுத³ல்ல ஸம்ஸ்க்ருதவெம்ப³ ஸட³க³ரதி³ ||4**

பண்டிதரு - பண்டிதர்கள்; யதிவர்யரெல்லரு - யதிகள் அனைவரும்; ஹிண்டுஷாஸ்த்ர - சாஸ்திர கூட்டங்களின்; ரஹஸ்ய தத்வவ - ரகசிய தத்வங்களை; தொண்டரிகெ போதிஸலு - (ஹரி பக்தர்களுக்கு) தங்கள் சிஷ்யர்களுக்கு போதிப்பதற்கு; ப்ராக்ருதவன்னே பளிஸுவரு - பேசுமொழியையே பயன்படுத்துகின்றனர்; இதரொளு - இதில்

(பேசுமொழியில்); ஞான முக்ய கண்டரு - ஞானமே (ஞானத்தை போதிப்பதே) முக்கியம் என்று கண்டனர்; ஹட கைகொண்டு - பிடிவாதமாக; ஸம்ஸ்க்ருதவெம்ப - ஸம்ஸ்க்ருதத்தை; ஸடகரதி - உற்சாகமாக (சொல்கிறேன் என்று); பளலுவுதல்ல - அவர்கள் கஷ்டப்படுவது இல்லை. விதண்டவாதவு வ்யர்த்த - (இத்தகைய) தேவையற்ற வாதம் வீணே.

பேசுமொழியின் (கன்னடத்தின்) சிறப்பு மற்றும், அதன் மூலமாக சொல்லப்படும் விஷயங்களின் ஸாரமே முக்கியம் என்பதாக இந்த பத்தியில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

பண்டிதர்கள், யதிகள் என அனைவரும், சாஸ்திரங்களை, அவற்றில் உள்ள ரகசிய தத்வங்களை, ஹரி பக்தர்களுக்கு / தங்கள் சிஷ்யர்களுக்கு போதிப்பதற்கு, பேசுமொழியையே பயன்படுத்துகின்றனர். இப்படியாக, இதில் மொழி முக்கியம் அல்ல, சொல்லப்படும் விஷயமே (ஞானம்) முக்கியம் என்பதை அவர்கள் அறிந்திருக்கின்றனர். மாறாக, அனைவரிடமும் நான் சம்ஸ்கிருதத்தில்தான் விஷயங்களை விளக்குவேன் என்று அவர்கள் பிடிவாதமாக இருப்பதில்லை. அப்படி பிடிவாதம் செய்வதும் வீணே.

ஸ்ரீலட்சுமி நாராயண முனிகள் அவரது பூஜையை மிகவும் விஸ்தாரமாக செய்து முடித்து பின்னர் கன்னடத்தில் கீர்த்தனைகளை இயற்றி, அவற்றை பகவந்தனுக்கு சமர்ப்பித்து பாடினார். இந்த வேலையானது அன்றைய காலகட்டத்திற்கு பெரிய புரட்சி என்றே சொல்லலாம். சன்யாசியானவர், காலில் கெஜ்ஜெ (சலங்கை) கட்டிக் கொண்டு, தம்பூரி மீட்டியவாறு, சேவாரூபமாக கீர்த்தனைகளை ஆடிப்பாடியவாறு இருந்தார் என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன. தூய்மையான இந்த ஹரிபக்தியின் வெளிப்பாடே, கன்னட ஹரிதாஸ சாகித்யம் நன்கு வளர்வதற்கு முதற்படியாயிற்று எனலாம்.

ஸ்ரீவாதிராஜர், தத்வஸார கிரந்தத்தின் பல்லவியில் இந்த விஷயத்தைக் கூறியிருக்கிறார்.

இது³ புண்யகதெ² லோகக்கிது³ முகுதிய பத²
இத³ கேளுவவனெ க்ருதார்த்த² || பல்லவி

இந்த கிரந்தத்தின் விஷயம், நித்யஸுக ஸாதனத்தின் நிரூபணம் ஆகும். இந்த சிந்தனை, அஞ்ஞான நிலையில் இருக்கும் ஸஜ்ஜனர்களுக்கு மோட்ச மார்க்கத்தைக் காட்ட வல்லது. இதனை கேட்டு, நிஷ்டையைப் பெறுபவன், தன் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொண்டவன் ஆகிறான்.

**புண்ட³லீககெ³ ஒலித³ விட்டலன**
**க²ண்ட³கு³ண கொண்டா³டெ³ ப³ளஸுவ**
**தண்ட³ தண்ட³த³ பா⁴ஷெயாத³ரு மான்ய ஸஜ்ஜனகெ |**
**புண்ட³ரீகத³ளாயதாக்ஷன**
**கண்டு³ பொக³ளத³ லோகவார்த்தெய**
**ப4ண்டு³ மாதின பா⁴ஷெ உத்தமவாத³ரு த்யாஜ்ய ||5**

புண்டலீககெ ஒலித விட்டலன - புண்டலீகனுக்கு தரிசனம் அளித்த விட்டலனின்; கண்டகுண - ஏதாவது ஒரு குணத்தையாவது; கொண்டாடெ - கொண்டாடுவதற்கு; பளஸுவ - பயன்படுத்தப்படும்; தண்டதண்டத - எந்தவொரு பிரதேசத்தின் (நாட்டின் பகுதியின்); பாஷெயாதரு - மொழியானாலும், ஸஜ்ஜனகெ - சஜ்ஜனர்களுக்கு; மான்ய - அது மரியாதைக்குரிய மொழியே ஆகும்; புண்டரீக தளாயதாக்ஷன - தாமரைக் கண்ணனான பகவந்தனை; கண்டு பொகளத - போற்றிப் புகழாத; லோகவார்த்தெய - நாடக வசனங்களான; பண்டு மாதின - கேலிப் பேச்சுக்களைக் கொண்ட; பாஷெ - மொழி; உத்தமவாதரு - அது மிகச் சிறந்ததாகவே இருந்தாலும்; த்யாஜ்ய - அதனை புறக்கணிப்பார்கள்.

மொழி முக்கியம் இல்லை; சொல்லப்படும் விஷயமே முக்கியம் என்னும் விஷயத்தை திரும்ப இந்த பத்யத்தில் வலியுறுத்துகிறார் ஸ்ரீதாஸர்.

புண்டலீகனுக்கு தரிசனம் அளித்த விட்டலனின் ஏதோவொரு குணத்தையாவது சொல்லி கொண்டாடுவதற்கு பயன்படுத்தப்படும் மொழியானது, அது நாட்டின் எந்தவொரு பகுதியில் பயன்படுத்தப்படும் பேசுமொழியாக இருந்தாலும் பரவாயில்லை. கற்றறிந்த சஜ்ஜனர்கள் அதற்கு (அந்த பேசுமொழிக்கு) மான்யதை கொடுப்பார்கள். மாறாக, அந்த தாமரைக் கண்ணனை போற்றிப் புகழாமல், வெறும் நாடக வசனங்களாக / கேலிப் பேச்சுகளைக் கொண்ட மொழியானது, அது

உத்தமமான மொழியாகவே இருந்தாலும், அந்த ஸஜ்ஜனர்கள் அதனை புறக்கணிப்பார்கள்.

இதே கருத்தினை, ஸ்ரீஸ்ரீத விட்டலதாஸர், தனது ஹரிகதாம்ருதசாரத்தின் பல ஸ்ருதியின் ஒரு பத்யத்தில் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

ப்ராக்ருதோக்திகளெந்து பரிதெ ம
ஹா க்ருதக்னரு ஜரிவரல்லதெ
ஸ்வீக்ருதவெ மாடதலெ பிடுவரெ சுஜனராதவரு |
ஸ்ரீக்ருதீபதியமல குணகளு
ஈ க்ருதியொளுண்டாத பளிகிது
ப்ராக்ருதவெ சம்ஸ்க்ருதத சடகரவேனு சுகுணரிகெ ||5

இந்த கிரந்தமானது, ப்ராக்ருத கிரந்தம் என்று திட்டும், மஹா க்ருதக்னர்கள் (இந்த கிரந்தத்தால் பயன் பெற்றவர்கள்) சிலர் இருந்தாலும், ஸுஜனர்கள் இதனை ஏற்றுக் கொள்ளாமல் விடமாட்டார்கள். அப்ராக்ருதமான பரமாத்மனை வர்ணிக்கும் இந்த கிரந்தத்தை ப்ராக்ருதம் என்று எப்படி சொல்லமுடியும்?.

**தே³வபா⁴ஷெய ஸர்வமான்யதெ**
**கா³வகாலகு குந்து³ ப³ரது³ ப**
**ராவரேஶன ஞான போ³தி⁴ஸெ தே³ஶபா⁴ஷெயனு |**
**கோவித³ரு ஸத்ஸாத⁴னா பர**
**ஜீவிக³ளனுத்³த⁴ரிஸலோஸுக³**
**பா⁴வதி³ந்த³லி ப³ளஸி வெக்³க³ளிஸித³ரு ஜக³த³ல்லி ||6**

பராவரேஷன - உத்தமரான ரமா பிரம்மாதிகளுக்கும், நீசரான கலி முதலானவர்களுக்கும் ஈசனான (தலைவனான) ஸ்ரீபரமாத்மனின்; ஞான போதிஸெ - ஞானத்தை போதிப்பதற்காக; ஸத்ஸாதனா பர - சாதனைகளை செய்ய வேண்டும் என்று அதில் ஈடுபட்டிருக்கும்; ஜீவகளனு - ஜீவர்களை; உத்தரிஸலோஸுக - உத்தரிப்பதற்காக; தேஷபாஷெயனு - நாட்டில் உள்ள பிற மொழிகளை; கோவிதரு - பண்டிதர்கள்; பாவதிந்தலி - மிகுந்த மகிழ்ச்சியுடன்; வெக்களிஸிதரு - அதிகமாக பளஸி - பயன்படுத்தினர்; ஜகதல்லி - உலகத்தில்; தேவபாஷெய - தேவபாஷையான சம்ஸ்கிருதத்தின்;

ஸர்வமான்யதெகெ - சிறப்புத்தன்மைக்கு; ஆவகாலகு - எந்த காலத்திலும்; குந்து பரது - எவ்வித குறைகளும் வராது.

கன்னடத்தின் கிருதிகளைப் பற்றிய சிறப்புகளை தொடர்ந்து இந்த பத்யத்திலும் தொடர்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

உத்தமர்களான ரமா பிரம்மாதிகளுக்கும் மற்றும் நீசரான கலி முதலானவர்களுக்கும் தலைவனான ஸ்ரீபரமாத்மனைப் பற்றிய ஞானத்தை போதிப்பதற்காக; மற்றும், ஸாதனைகளை செய்ய வேண்டும் என்று அதற்கான வழிகளில் ஈடுபட்டிருக்கும் ஜீவர்களை அருள்வதற்காக, நாட்டில் உள்ள பல்வேறு பேசுமொழிகளை பண்டிதர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் பயன்படுத்தினர். (இப்படி பேசுமொழிகளை பயன்படுத்துவதால்), தேவபாஷையான சம்ஸ்கிருதத்தின் சிறப்பிற்கு, எந்த காலத்திலும், எவ்வித குறைகளும் வராது.

ஸ்ரீஸ்ரீபாதராஜர், ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜரே முதலான பல்வேறு யதிஸ்ரேஷ்டர்கள், யதார்த்த ஞானத்தை போதிப்பதற்காக மற்றும் ஞான பக்தி வைராக்கியங்களின் சிறப்புகள் பாமர மக்களுக்கும் புரிய வேண்டும் என்பதற்காக, பேசுமொழியான கன்னடத்தில் கிருதி, பத, பத்யங்களை இயற்றி, ஸ்ரீபுரந்தரதாஸர் முதலான ஹரிதாஸர் களையும் இப்படியாக தொடரும்படி ஊக்குவித்தனர். இப்படி ஸத்விஷயங்களை கன்னடத்தில் சொல்வதால், சம்ஸ்கிருதத்திற்கு எவ்வித பிரச்னைகளும் வராது என்று அவர்களுக்கு தெரிந்திருக்கும் அல்லவா? இதையே ஸ்ரீதாஸரும் இந்த பத்யத்தில் மேலும் தெளிவுபடுத்துகிறார்.

**ஸுலித$^{3}$ கத$^{3}$ளித$^{3}$ ப$^{2}$லத$^{3}$ தெரத$^{3}$லி**
**ஒலிது$^{3}$ எம்மய ஹிரிய தா$^{3}$ஸரு**
**லலித கன்னட$^{3}$த$^{3}$ல்லி தத்வவனொரெது$^{3}$ பேளிரலு |**
**ஸுலப$^{4}$த$^{3}$ல்லி கு$^{3}$ருமுக$^{2}$தி$^{3}$ ஞானவ**
**க$^{3}$ளிஸி திளியதெ$^{3}$ ப$^{3}$ரிதெ$^{3}$ கஷ்டதி$^{3}$**
**ஹலுப$^{3}$ல்யாதகெ இக்ஷுத$^{3}$ண்ட$^{3}$த ரஸவ ப$^{3}$யஸுத்த ||7**

எம்மய - எங்கள்; ஹிரிய தாஸரு - முன்னோர்களான தாஸர்கள்; ஒலிது - வந்து; ஸுலித கதளித பலத தெரதலி - உரித்த வாழைப்

பழத்தைப் போல; லலித கன்னடதல்லி - அழகான கன்னடத்தில்; தத்வவனொரெது - தத்வங்களை விளக்கி; பேளிரலு - சொல்லியிருக்கையில்; (அதை பயன்படுத்தி) ஸுலபதல்லி - மிகச் சுலபமாக; குருமுகதி - ஒரு குருவிடமிருந்து; ஞானவ களிஸி திளியதே - ஞானத்தை வேண்டி தெரிந்து கொள்ளாமல்; இஷுதண்டத ரஸவ - கரும்புச்சாறினை; பயஸுத்த - விரும்பியவாறு; பரிதெ கஷ்டதி - மிகவும் கஷ்டப்பட்டு; ஹலுபல்யாதகெ - புலம்புவது எதற்கு?.

சுலபமாக கிடைக்கும் விஷயத்தை விட்டு, கிடைக்கக் கடினமானவற்றை தேடிச் சென்று, பின் புலம்புவது ஏன் என்பதை ஒரு அழகான உதாரணத்துடன் இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

எங்களின் முன்னோர்களான தாஸர்கள், தத்வங்களை, உரித்த வாழைப்பழத்தைப் போல அழகான கன்னடத்தில், விளக்கிச் சொல்லியிருக்கையில், (அதன் மூலமாக) ஒரு குருவிடமிருந்து மிகவும் சுலபமாக ஞானத்தை வேண்டிப் பெற்றுத் தெரிந்து கொள்ளாமல், மிகவும் தேடிச் சென்று, கரும்புச்சாற்றினைப் பெறுவதற்கு ஏன் கஷ்டப்பட வேண்டும் என்கிறார்.

ஹரிதாஸ ஸாகித்யமானது நமது பேசுமொழியில், எளிதாக கிடைக்ககூடிய வாழைப்பழத்தைப் போல, அருகிலேயே இருக்கையில், ஒரு தக்க குருவிடமிருந்து அதனை கற்று, ஞானத்தைப் பெற்று தெரிந்து கொள்ளாமல், எளிதாக கிடைக்காத கரும்புச்சாற்றினை தேடிச் சென்றுவிட்டு, பின் ஏன் புலம்ப வேண்டும் என்று கேட்டு, இதன் மூலம் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை விளக்குகிறார்.
சம்ஸ்கிருத கிரந்தங்களில் இருக்கும் தத்வ சித்தாந்த ரகசியங்களையே, ஹரிதாஸர்கள் தங்கள் பத, பத்யங்களில் எளிய கன்னடத்தில் விளக்கி நமக்கு புரியவைத்திருக்கிறார்கள். இப்படி எளிமையான வழி இருக்கும்போது ஏன் கஷ்டப்பட வேண்டும் என்று சொல்கிறார் ஸ்ரீதாஸர். (இதனால், சம்ஸ்கிருதத்தில் இருப்பதான சர்வமூல கிரந்தங்கள் மற்றும் இதர கிரந்தங்களை படிக்கத் தேவையில்லை என்று ஸ்ரீதாஸர் சொல்வதாக நினைக்கக்கூடாது).

உதாரணத்திற்கு, ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில் ஸ்ரீமதாசார்யர் இயற்றியிருக்கும் ஒரு ஸ்லோகத்தை பார்ப்போம்.

ஹ்ருதி ரூபம் முகே நாம நைவேத்யமுதரே ஹரே: |
பாதோதகம் ச நிர்மால்யம் மஸ்தகே யஸ்ய ஸூசௌச்யுத: ||

இதையே ஸ்ரீஜகன்னாததாஸர், தனது ‘பலவிது பாள்துதக்கே’ என்னும் கிருதியில் கீழ்க்கண்டவாறு விளக்கியிருக்கிறார். சம்ஸ்கிருதம் அறியாதவர்களுக்கு இது மிகவும் எளிமையாக புரியக்கூடிய வகையில் இருக்கிறது என்பதையே ஸ்ரீதாஸர் சொல்ல வருவதாக நினைக்க வேண்டும்.

ஹ்ருத3யதி3 ரூபவு வத3னதி3 நாமவு உத3ரதி3 நைவேத்3யவு ஷிரதி3
பத3ஜல நிர்மால்யவனே த4ரிஸி கோ1வித3ர ஸத3ன ஹெக்க3த3வ
கா1யுவுதே3 |7|

குருவானவர், நமது கை பிடித்து, மிகவும் அன்புடன் யதார்த்த ஞானத்தைப் போதிப்பதற்காக காத்திருக்கிறார். இத்தகைய குருவின் கருணையை நான் எப்படி வர்ணிப்பேன்? -- என்றார் ஸ்ரீஸ்ரீத விட்டலதாஸர், தனது ஹரிகதாம்ருதஸார - பல ஸ்ருதியில். அது பின்வருமாறு.

யாமயாமகெ படிசுவவர ஸு
தாமஸக கைபிடியலோஸுக
ப்ரேமதிந்தலி பேள்த குருகாருண்யகேனெம்பே ||2

**க4னமஹிம தா நிந்து ப்ரேரிஸி**
**அனுனயதொ3ளீக்ருதிய ப3ரெஸிரெ**
**எணிஸலாக3து3 இத3கெ யதிக3ண ப்ராஸதோ3ஷக3ள |**
**வினியதி3ம் பி3ன்னயிஸி பே3டு3வெ**
**கு3ணயுதரு ஸம்பன்ன ப4க்தரு**
**ஜனனி அணுக3ன நுடி3கெ3 ஸுகி2ஸுவ தெரதி3 ஆலிபுது3 ||8**

கனமஹிம - சர்வோத்தமனான ஸ்ரீஹரி; தா நிந்து ப்ரேரிஸி - தானே இருந்து தீர்மானித்து; அனுனயதொளு - நடத்தியதால்; ஈ க்ருதிய பரெஸிரெ - இந்த கிருதியை எழுதியிருக்கிறேன்; யதிகண - யதிகள், கற்றறிந்தவர்கள்; இதகே - இந்த கிருதியில்; ப்ராஸதோஷகள - எதுகை மோனை தோஷங்களை; எணிஸலாகது - கவனத்தில் கொள்ளக் கூடாது; வினியதிம் - பக்தி மரியாதையுடன்; பின்னயிஸி பேடுவெ -

வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்; குணயுதரு - நற்குணங்களைக் கொண்டவர்கள்; ஸம்பன்ன பக்தரு - சிறந்த பக்தர்கள்; ஜனனி - தாயானவள்; அணுகன நுடிகெ - தன் குழந்தையின் மழலைப் பேச்சுக்கு; ஸுகிஸுவ தெரதி - மகிழ்வதைப் போல; ஆலிபுது - (இந்த கிருதிக்கும்) ஆதரவு அளிக்கட்டும்.

இப்படிப்பட்ட சிறப்புகளைக் கொண்ட பேசுமொழியில், இத்தகைய கிருதியை இயற்றவிருக்கிறேன். இதற்கு அனைவரும் ஆதரவு அளிக்கட்டும் என்று இந்த பத்யத்தில் வேண்டிக் கொள்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸர்வோத்தமனான ஸ்ரீஹரி, எனக்குள் தானே நின்று நடத்தியதால், இந்த கிருதியை எழுதியிருக்கிறேன். யதிகள், கற்றறிந்த ஞானிகள் ஆகியோர் இந்த கிருதியில் ஏதேனும் எதுகை மோனை தோஷங்கள் இருந்தால், அவற்றை கவனத்தில் கொள்ளக்கூடாது என பக்தி மரியாதையுடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். தாயானவள், தன் குழந்தையின் மழலைப் பேச்சுக்கு மகிழ்வதைப் போல, நற்குணங்களைக் கொண்டவர்கள், சிறந்த பக்தர்கள் ஆகியோர், இந்த கிருதிக்கு தங்களின் ஆதரவினைக் கொடுக்கட்டும்.

இதே உதாரணத்தை ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதசாரத்தில் பயன்படுத்தியிருப்பதை பார்த்திருக்கிறோம்.

பாலகன கலபாஷெ ஜனனியு
கேளி சுகபடுவந்தெ லகுமி
லோல பகுதரு மாடுதிஹ சம்ஸ்துதிகெ ஹிக்குவனு |
குழந்தையின் மழலைச் சொற்களை பெற்ற தாய் கேட்டு மகிழ்வதைப் போல, பக்தர்கள் செய்யும் ஸ்தோத்திரத்திற்கு ஸ்ரீஹரி மகிழ்கிறான்.

அஸுபதி ஸ்ரீரமணகெ$^3$ ஸம
ர்ப்பிஸிதெ$^3$ ஸஜ்ஜனரித$^3$னு ஸந்தோ
ஷிஸலி தோ$^3$ஷக$^3$ளெணிஸத$^3$லெ காருண்யத$^3$லி நித்ய ||
(ப்ருஹத் தாரதம்ய ஸந்தி #54)

ப்ராணபதியான ஸ்ரீமன் நாராயணனுக்கு (இந்த கிரந்தமான ஹரிகதாம்ருதஸாரத்தை) சமர்ப்பித்தேன். அறிஞர்கள், இதில் உள்ள

தோஷங்களை கவனிக்காமல், கருணையுடன் தினம்தோறும் இதைப் பார்த்து மகிழட்டும்.

ஸ்ரீஜகன்னாத தாஸர் கூறியிருப்பதைப் போலவே, நம் ஸ்ரீதாஸரும் -- அப்படிப்பட்ட கருணாளுவான ஸ்ரீஹரியே எனக்குள் நின்று இந்த கிருதியை எழுதவைத்திருக்கிறான். ஆகவே, கற்றறிந்தவர்கள் இவற்றில் எதுகை, மோனை போன்ற தோஷங்கள் ஏதேனும் இருந்தால் அவற்றை கவனித்தில் கொள்ளாமல், இதில் உள்ள விஷயத்தை மட்டும் படித்து அறிந்து கொள்ள வேண்டும் - என்று பிரார்த்திக்கிறார்.

**த்ரிவித4 ஜீவர ஸ்ருஜிஸெ நரஹரி**
**க1வித3 த்ரயிகு3ணப3த்3த4ராகு3த**
**ப4வத3 ப3ந்த4ன காலமஹிமெகெ3 தாவு ஔளகா3கி3 |**
**தவகதி3ந்த3லி யோக்3யஜீவரு**
**ப4வணெயலி மிகெ3 நொந்து3 ஸ்ரீ ஹரி**
**அவதரிஸி கலியுக3தி3 தமகி3ன்னெந்து1 க3தி எனுத ||9**

நரஹரி - ஸ்ரீஹரி; த்ரிவித ஜீவர ஸ்ருஜிஸெ - மூன்று வித ஜீவர்களை; ஸ்ருஜிஸெ - படைத்து; கவித - அருளினான்; த்ரயிகுண பத்தராகுத - இந்த மூன்று வித குணங்களுக்கு கட்டுப்பட்டு; காலமஹிமெகெ - காலக்கிரமத்தில்; பவத பந்தன - சம்சார சுழற்சியில்; தாவு ஔளகாகி - தாங்கள் சிக்கிக்கொண்டு; தவகதிந்தலி - மிகுந்த கவலையுடன்; பவணெயலி - தங்கள் வாழ்க்கையில் (இருக்க); யோக்யஜீவரு - இவர்களில் யோக்ய ஜீவர்கள்; மிகெ நொந்து - மிகவும் நொந்து; கலியுகதி - இந்த கலியுகத்தில்; ஸ்ரீஹரி அவதரிஸி - ஸ்ரீஹரி (எப்போது) அவதரித்து; தமகின்னெந்து கதி எனுத - தமக்கு என்ன கதி என்றவாறு (அடுத்த பத்யத்தில் தொடர்கிறது).

இந்த மற்றும் அடுத்த ஸ்லோகங்களில், ஸ்ரீமன் மத்வாசார்யரின் அவதாரம் நடந்த காலகட்டத்தில், இருந்த ஆன்மீக மக்களின் நிலையை சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று வித ஜீவர்களை ஸ்ரீஹரி படைத்து அருளினான். இவர்கள் அவரவர்களின் குணங்களுக்கேற்ப, சம்சார சுழற்சியில் சிக்கிக் கொண்டு, மிகுந்த கவலையில்

வாடிவந்தனர். இவர்களில் யோக்ய ஜீவர்கள், மிகவும் அதிகமாக நொந்து, இந்த கலியுகத்தில் ஸ்ரீஹரி எப்போது அவதரிப்பான்?. நமக்கு இதிலிருந்து மீள என்ன கதி? என்று சிந்திக்கத் துவங்கினர்.

ஸ்ரீமத்வ விஜயத்தில் இந்த சந்தர்ப்பம் இவ்வாறு வர்ணிக்கப்பட்டுள்ளது.

விக்ஞான பானுமதி கால பலேன லீனே
துர்பாஷ்ய சந்தமஸ சந்ததிதோ ஜனேந்தே |
மார்காத்சதாம் ஸ்கலதி கின்ன ஹ்ருதோ முகுந்தம்
தேவாஸ்சதுர்முக முகா: ஷரணம் ப்ரஜக்மு: || (2-1)

உலகத்தில் சஜ்ஜனர்களின் ஞானம் என்னும் சூரியன், கலியின் பிரபாவத்தாலும், துர்பாஷ்யங்களின் துர்போதனைகளாலும் அஸ்தமனம் ஆகி, அஞ்ஞானம் என்னும் இருள் சூழ்ந்து, அவர்கள் தர்மத்தின் வழியிலிருந்து பிறழத் தொடங்கினர். சுக்ஞானம் பிறந்து, அவர்கள் தர்மத்தின் வழியில் திரும்பவேண்டும் என்று பிரம்மாதி தேவதைகள் முகுந்தனை வேண்டினர்.

இதையே ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர், தனது ‘மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ’ கிரந்தத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார். நிஜமதிய தினகரனு முளுகலு - உண்மையான அறிவு என்னும் சூரியன் மூழ்கத் தொடங்கியது.

ஸ்ரீஜகன்னாததாஸரும், ஸ்ரீமத்வர் அவதாரம் நடப்பதற்கு முன் இருந்த சூழ்நிலையை ஹரிகதாம்ருதஸாரத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.
க்ஷிதியொளகெ மணிமந்தமொதலா
ததிதுராத்மரு ஒந்ததிக விம்
ஷதி குபாஷ்யவ ரசிஸெ நடுமனெயெம்ப பிராம்மணன || (1-8).

இந்த பத்யத்தின் கருத்து, அடுத்த பத்யத்திலும் தொடர்கிறது.

**தொளலுதிரெ பூ$^{4}$தளகெ$^{1}$ இளித$^{3}$ரு**
**ஜலஜனாப$^{4}$ன ப்ரீதிபாதரு**
**பொளெவ வர மத்$^{4}$வாபி$^{4}$தா$^{4}$னதி$^{3}$ ஸுஜனபோஷகரு |**
**கலுஷ வர்ஜித ஸுகு$^{3}$ணபூர்ணன**
**வலிஸி மோக்ஷவ படெ$^{3}$வ ஸுபத$^{4}$தி$^{3}$**

**ப³லித¹ கலியந்த⁴வனு களெத³ரு தத்வதீ³ப்தியலி ||10**

தொளலுதிரெ - சிந்தித்துக் கொண்டிருக்க; ஜலஜனாபன ப்ரீதிபாதரு - ஸ்ரீஹரிக்கு மிகவும் பிடித்தவரானவர்; பொளெவ - ஒளிர்பவரான; வர - சிறந்தவரான; ஸுஜனபோஷகரு - சஜ்ஜனர்களை காப்பவரான - மத்வாபிதானதி - மத்வ என்னும் பெயரில்; பூதளகெ இளிதரு - இந்த பூமிக்கு இறங்கினார்; கலுஷ வர்ஜித - தோஷங்கள் அற்றவரான; ஸுகுணபூர்ணன - நற்குணங்கள் நிறைந்தவரான (ஸ்ரீஹரியை); வலிஸி - மகிழ்வித்து, தரிசனம் செய்து ; மோக்ஷவ படெவ ஸுபததி - மோட்சத்தை அடையும் வழியில்; பலித - சென்றார்; தத்வதீப்தியலி - (தன்னுடைய சர்வமூலங்கள் என்னும்) தத்வ கிரந்தங்களின் ஒளியில்; கலியந்தவனு - கலி என்னும் இருளை; களெதரு - நீக்கினார்.

ஸ்ரீமத்வ அவதாரம் இங்கு சொல்லப்பட்டுள்ளது.

(யோக்ய ஜீவர்கள்) இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருக்க, ஸ்ரீஹரிக்கு மிகவும் பிடித்தமானவரான, ஒளிர்பவரான, சிறந்தவரான, ஸஜ்ஜனர்களை காப்பவரான வாயுதேவர், மத்வ என்னும் பெயரில் இந்த பூமிக்கு வந்து இறங்கினார். தோஷங்கள் அற்றவரான, நற்குணங்கள் நிறைந்தவரான ஸ்ரீஹரியை மகிழ்வித்து, தரிசனம் செய்து, மோட்சத்தை அடையும் வழியில் சென்றார். தன்னுடைய ஸர்வமூலங்கள் என்னும் தத்வ கிரந்தங்களின் ஒளியில், கலி என்னும் இருளை நீக்கினார்.

ஸ்ரீமத்வரின் அவதார சந்தர்ப்பத்தை, ஸ்ரீஸ்ரீபாதராஜர், மத்வ நாமாவில் இவ்வாறு கூறுகிறார்.

ஞானி தா பவமான பூதளதொளுத்பவிஸி
மானநிதி மத்வாக்ய நெந்தெனிஸித ||23

ஹரிகதாம்ருதஸாரத்தில், ஸ்ரீஜகன்னாததாஸர் இதனை இவ்வாறு விளக்கியுள்ளார்.

சதிய ஜடரதொளவதரிஸி பா
ரதிரமண மத்வாபிதானதி
சதுரதஷ லோகதொலி மெரெதப்ரதிமகொந்திசுவெ ||8

மணிமந்தன் முதற்கொண்டு தமோ யோக்யரான தைத்யர்கள் பூமியில் பிறந்து, பிரம்மசூத்திரத்திற்கு 21 குபாஷ்யங்களை இயற்ற, பாரதிபதியான வாயுதேவர், மத்யகேஹ பட்டர் என்னும் பிராமணரின் மனைவியின் வயிற்றில் பிறந்த குழந்தையின் தேகத்தில் பிரவேசித்து, மத்வாசார்யர் என்னும் பெயரால் 14 உலகங்களிலும் புகழடைந்தார். ஒப்புமை இல்லாத (அவரை) வணங்குகிறேன்.

மத்வ விஜய ஸார ஸங்க்ரஹத்தில், ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர் ஸ்ரீமத்வாவதாரத்தை விளக்கும் விதம் இவ்வாறு:

நிஜமதிய தி3னகரனு முளுக3லு அஜிதனாக்3ஞெய படெ3த3 மருதனு
ருஜுதபக3ளாசரிஸி பரம விஷுத்3த4ராகித்3த3 |
ஸஜனஷேக2ர மத்4யகே3ஹ த்3விஜவரன ஸதியுத3ரத3லி தா
பி3ஜயகெ3ய்த3னு ஹொரகெ3ட3ஹி பே3ரொந்த3னாக்ஷணதி3 ||5

உண்மையான அறிவு என்னும் சூரியன் மூழ்கத் தொடங்க, ஸ்ரீஹரியின் ஆணையைப் பெற்ற ஸ்ரீவாயுதேவர், ஜப தபங்களை சரிவர செய்து, பரம தூய்மையானவராக இருந்த, சஜ்ஜனர்களில் சிறந்தவரான, மத்யகேஹ என்னும் பிராமண ஸ்ரேஷ்டரின் மனைவியின் வயிற்றில், அந்த சமயத்தில் அந்த கர்ப்பத்தில் இருந்த வேறொரு ஜீவனை வெளியே இழுத்து, தான் அங்கு உள்ளே பிரவேசித்தார்.

இவ்வாறு அவதரித்த ஸ்ரீமத்வர், மாயையில் / அஞ்ஞானத்தில் மூழ்கியிருந்த மக்களை, ஸத்மார்க்கத்தில் வழிநடத்துவதற்காக, ஸர்வமூல கிரந்தங்களை இயற்றினார் என்று கூறி, இதையே அடுத்த பத்யத்திலும் தொடர்கிறார், ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**மூருத3ஶமத்தேளு க்3ரந்த2தி3**
**தோரிரலு கம்ஸாரி மஹிமெய**
**ஸார க்3ரஹிஸலஶக்யவாயிது காலக்ரமதி3ந்த3 |**
**ஸாரி களுஹிஸலாக3 தி3விஜரு**
**பே3ரெ பே3ரவதரிஸி ப3ந்து3 வி**
**ஸ்தாரகெ3ய்து3பதே3ஶவீயுத மாட்3த3ருபகார ||11**

மூருதஷமத்தேளு க்ரந்ததி - (தன்னுடைய) 37 கிரந்தங்களால்; கம்ஸாரி மஹிமெய - கம்சாரியான கிருஷ்ணனின் மகிமையை;

தோரிரலு - நிர்ணயம் செய்தார்; காலக்ரமதிந்த - காலகிரமத்தினால்; ஸார க்ரஹிஸலு - அதனுடைய ஸாரத்தை (உண்மையான விளக்கத்தை) புரிந்து கொள்வதற்கு; அஷக்யவாயிது - முடியாததாக ஆயிற்று; ஸாரி களுஹிஸலாக - ஸ்வாமி அனுப்பியவாறு, அப்போது; திவிஜரு - தேவதைகள்; பேரெ பேரவதரிஸி பந்து - பலர் தனித்தனியாக அவதரித்து வந்து; விஸ்தாரகெய்து - (அந்த நிர்ணய கிரந்தங்களை) மேலும் விளக்கியவாறு; உபதேஷவீயுத - உபதேசம் செய்து; உபகார - மிகப்பெரிய உதவியை; மாட்தரு - செய்தனர்.

ஸ்ரீமத்வரின் அவதாரம், பின் அவருடைய பரம்பரையில் வந்த யதிகள் அவர்கள் இயற்றிய கிரந்தங்கள் என மத்வ சித்தாந்த கிரந்தங்களைப் பற்றிய விஷயத்தை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீமதாசார்யர், தனது 37 கிரந்தங்களால் (ஸர்வமூல கிரந்தங்களால்), கம்ஸாரியான கிருஷ்ணனின் மகிமையை நிர்ணயம் செய்தார். (ஹரி ஸர்வோத்தமத்வத்தை நிறுவினார்). ஆனால், அவருக்குப் பிறகு, காலக்கிரமத்தில், அந்த கிரந்தங்களின் ஸாரத்தை, அதில் உள்ள தத்வ ரகசியங்களை புரிந்து கொள்வதற்கு முடியாமல் போனது. அந்த சமயத்தில், ஸ்ரீஹரி அனுப்பியவாறு, பல தேவதைகள், தனித்தனியாக அவதரித்து வந்து, அந்த நிர்ணய கிரந்தங்களை மேலும் விளக்குவதற்காக, டீகை, டிப்பணிகள் ஆகியவற்றை இயற்றி, மக்களுக்கு மிகப்பெரிய உதவியை செய்தனர்.

ஸ்ரீமதாசார்யரின் மகிமையைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதசாரத்தில் இவ்வாறு கூறுகிறார்.

ஏகவிம்ஷதி மதப்ரவர்த்தக கா
குமாய்க[3]ள குஹகயுக்தி நி
ராகரிஸி ஸர்வோத்தமனு ஹரியெந்து[3] ஸ்தா[2]பிஸித[3] |
ஸ்ரீகளத்ரனஸத[3]ன த்[3]விஜப பி
நாகிஸன்னுத மஹிம பரம க்ரு
பாகடாக்ஷதி[3] நோடு[3] மத்[4]வாசார்ய கு[3]ருவர்ய || (கல்ப ஸாதன #1)

ஸௌர, சாக்த, காணபத்ய முதலான 21 மதங்களின் தவறான வாதங்களை நிராகரித்து 'ஏகவிம்ஷதி குபாஷ்ய தூஷகம்' என்னும் மத்வ விஜயத்தின் வாக்கியத்தைப் போல, பிரம்ம சூத்திரத்திற்கு 22ம்

பாஷ்யத்தை இயற்றி, ஹரி சர்வோத்தமன் என்று நிர்ணயம் செய்த, கருட, சேஷ ருத்ராதிகளால் வணங்கப்படும் மகிமை உள்ள, குரு ஸ்ரேஷ்டர் ஸ்ரீமன் மத்வாசார்யர் - என்று போற்றுகிறார்.

இந்த ஸர்வமூல கிரந்தங்களை இயற்றுவது, உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ணனின் பிரதிஷ்டை செய்து ஹரி ஸர்வோத்தமத்வத்தை நிறுவியது போன்ற விஷயங்களை, ஸ்ரீவித்யா பிரஸன்ன தீர்த்தர், தனது மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ கிரந்தத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

குமததொ3ளு மதிலீனரச்யுத ப்ரமதிக3ள மதிரோக3 தொலகி3ஸி
விமலமதியனு கருணிஸலு ப3லு ஷாஷ்வதவதா3ய்து |
அமிதஸூந்த3ரமூர்த்தி கோ3குல ரமணனனு ஸ்தா2பிஸுவ யக்3ஞவ
க்ரமதி3 நடெ3ஸலனுக்3ஞ்யெயித்த1ரு ||36

மாயாவாத மத தத்வங்களில் மனம் மயங்கியிருந்த அச்யுத ப்ரேக்ஷரின் அஞ்ஞானங்களை நீக்கி, தெளிவான அறிவை அருளினார் ஸ்ரீமதாசார்யர். அந்த ஞானம் அவரில் நிரந்தரமாக தங்கியது. மிகவும் அழகான மூர்த்தியான ஸ்ரீகிருஷ்ணனை நிறுவும் வேள்வியை முறையே செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்.

ஸ்ரீமதாசார்யரைத் தொடர்ந்து, ஸ்ரீஹரியின் ஆணைப்படியே, பல தேவதைகள், தனித்தனியாக இந்த உலகிற்கு வந்து, ஆசார்யரின் கிரந்தங்கள் மக்களிடையே மேலும் தெளிவாக போய்ச் சேரவேண்டும் என்பதற்காக, பல டீகை, டிப்பணிகளை இயற்றினர். இது அவர்கள் நமக்குச் செய்த மிகப்பெரிய உதவி என்று சொல்லி, அத்தகையவர்கள் யார் என்பதை அடுத்த பத்யத்தில் விவரிக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**மத்4வராயர பா4வ ப4ல்ல ப்ர**
**ஸித்3த4 யதி ஜயதீர்த்த2வர்யரு**
**உத்3த4ரிப ஸ்ரீ ந்யாயஸுதெ4யனு ஜக3கெ நீடி3த3ரு |**
**ஸத்க3திகெ3 ஸ்ரீபாத3ராஜரு**
**தித்3தி3 தோரலு முந்தெ3 ஹாதி3ய**
**ப4த்ரகெ3ய்த3ரு வ்யாஸராயரு ஸோதெ3 கு3ருவரரு ||12**

மத்வராயர - ஸ்ரீமதாசார்யரின்; பாவ பல்ல - சிந்தனைகளை அறிந்த; ப்ரஸித்த யதி - புகழ்பெற்ற யதியான; ஜயதீர்த்தவர்யரு - ஸ்ரீடீகாராயரான ஸ்ரீஜயதீர்த்தர்; உத்தரிப - நம்மை மேம்படுத்தும்; ஸ்ரீ ந்யாயஸுதெயனு - ஸ்ரீமன் நியாயஸுதாவை; ஜககெ நீடிதரு - உலகிற்குக் கொடுத்தார்; ஸ்ரீபாதராஜரு - ஸ்ரீபாதராஜர்; ஸத்கதிகெ - மோட்சத்திற்கான வழியை; தித்தி தோரலு - சரியாகக் காட்ட; முந்தெ ஹாதிய - முன்னர், அதே வழியை; பத்ரகெய்தரு - அப்படியே பின்பற்றினர்; வ்யாஸராயரு ஸோதெ குருவரு - அவருடைய சிஷ்யர்களான ஸ்ரீவ்யாஸராயர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் இருவரும்.

ஸ்ரீஹரியின் ஆணையால், பூமிக்கு வந்து ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களுக்கு பாஷ்ய, டீகை, டிப்பணிகள் இயற்றிய யதிகளின் விவரங்களை இந்த பத்யத்தில் சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீமதாசார்யரின் சிந்தனைகளை அறிந்த புகழ்பெற்ற யதிகளான ஸ்ரீடீகாராயரான ஸ்ரீஜயதீர்த்தர், நம்மை மேம்படுத்தும், ஸ்ரீமன் நியாயஸுதாவை இந்த உலகிற்குக் கொடுத்தார். மோட்சத்திற்கான வழியை ஸ்ரீபாதராஜர் சரியாகக் காட்ட, அடுத்து அதே வழியை, ஸ்ரீவ்யாஸராஜர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் இருவரும் அப்படியே பின்பற்றினர்.

* ஸ்ரீமதாசார்யரின் பல கிரந்தங்களுக்கு டீகை எழுதி, டீகாராயர் என்றே பெயர் பெற்ற ஸ்ரீஜயதீர்த்தர், இந்திரனின் அவதாரமாக கருதப்படுகிறார்.

* வாக்வஜ்ர என்னும் கிரந்தத்தை இயற்றிய ஸ்ரீஸ்ரீபாதராயர், த்ருவராயரின் அம்சமாகக் கருதப்படுகிறார்.

* வ்யாஸத்ரய கிரந்தங்களை இயற்றிய ஸ்ரீவ்யாஸராயர், பிரகலாத ராயரின் அவதாரமாகக் கருதப்படுகிறார்.

* ருக்மிணீஷ விஜய, ஸரஸபாரதி விலாஸ, பல உபநிஷத் பாஷ்யங்களுக்கு டீகை என பற்பல அற்புத கிரந்தஙளை இயற்றிய ஸ்ரீவாதிராஜர்.

என மத்வ யதி பரம்பரையின் சில குறிப்பிட்ட யதிகளைப் பற்றி மட்டும் விளக்கியிருக்கும் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர். இத்தகைய யதிஸ்ரேஷ்டர்கள் மத்வ சித்தாந்தத்தை சிறப்பாக முன்னெடுத்துச் சென்றாலும், மக்களிடையே இருந்த நிலைமையைப் பற்றி அடுத்த பத்யத்தில் விளக்குகிறார்.

**பேளலோஸவே கலிய பா3தெ4யு**
**லோலராத3ரு கெலரு லௌகிக**
**ஜாலத3லி பாண்டி3த்யமத3த3லி கெலரு மெய்மரெது3 ।**
**தாளுதஹம்மதி ஷீலராத3ரு**
**கீளுக3தியனு மனகெ1 தாரதெ3**
**மூலதத்வவனொகெ3து3 பி3ஸட1ரு காலவஸராகி3 ।।13**

கலிய பாதெயு - கலியின் தொந்தரவை; பேளலொஷவெ - விளக்க முடியுமா?; கெலரு - சிலர்; லௌகிக ஜாலதலி - லௌகிக விஷயங்களில்; லோலராதரு - மயங்கி ஈடுபட்டனர்; கெலரு - வேறு சிலர்; பாண்டித்ய மததலி - தங்களின் பாண்டித்யத்தின் கர்வத்தில்; மெய்மரெது - மெய் மறந்து; தாளுத - இருந்தவாறு; அஹம்மதி ஷீலராதரு - நான் சொல்வதே சரி என்று சொல்லத் துவங்கினர்; கீளுகதியனு மனகெ தாரதெ - தாங்கள் செல்லப் போகும் நரகத்தைப் பற்றி எண்ணாமல்; காலவஷராகி - கலி காலத்திற்கு வசப்பட்டு; மூலதத்வனொகெது பிஸடரு - மூலதத்வத்தை புறக்கணித்து தள்ளினர்.

ஸ்ரீமதாசார்யரின் ஸர்வமூல கிரந்தங்கள் மற்றும் பிற யதிகளின் பாஷ்ய / டீகா / டிப்பணிகள் என இவை அனைத்தும் சம்ஸ்கிருதத்தில் இருந்ததால், சம்ஸ்கிருதம் அறியாத பாமர மக்கள், இந்த தத்வ விஷயங்களிலிருந்து விலகிச் செல்லத் துவங்கினர். இதனால் மத்வ ஸித்தாந்த தத்வ ரகசியங்கள் ஒரு சிலரிடம் மட்டுமே (பண்டிதர்களிடம் மட்டுமே) தங்கியிருந்தது. இதையே இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

கலியின் தொந்தரவை யாராலும் விளக்க முடியுமா? சிலர் லௌகிக விஷயங்களில் ஈடுபட்டு, மயங்கியிருந்தனர். வேறு சிலர், தங்களின் பாண்டித்யத்தின் கர்வத்தில் மெய் மறந்து இருந்தவாறு, நான் சொல்வதே சரி என்று இருந்தனர். தாங்கள் செல்லப் போகும் நரகத்தைப் பற்றி எண்ணாமல், கலி காலத்திற்கு வசப்பட்டு, மூல தத்வத்தை புறக்கணித்து தள்ளினர்.

**பெ3ரள எணிகெயொளுள்ளித3 கெலவரு**
**து3ருளஜனத1தி1க3ஞ்சி மௌனவ**
**த4ரிஸி மனதொ3ளு யோக3சரிஸுத கௌ3ப்ய ஸுக2ஸுரிது3 ।**

**இருதிரலு ஈ ரீதி ஸத்வர**
**இரவு பா³ஹ்யதொ³ளட³கி³ விட்டலன**
**சரணஸேவெய பரியு தோரத³லாய்து ஸஜ்ஜனகெ ||14**

பெரள எணிகெயொளுள்ளித - விரல் விட்டு எண்ணக்கூடிய அளவில் இருந்த; கெலவரு - சிலர்; துருள ஜனததிகஞ்சி - கெட்டவர்களின் குழுக்களுக்கு பயந்து; மௌனவ தரிஸி - மௌனமாக இருந்து; மனதொளு யோகசரிஸுத - மனதில் யோக ஸாதனையை செய்ய; கௌப்ய - ரகசியமாக; ஸுகஸுரிது - ஆனந்தத்தை அனுபவித்தவாறு; இருதிரலு - இருக்கையில்; ஈ ரீதி - இப்படியாக; ஸத்வர இரவு - ஸஜ்ஜனர்களின் இருப்பு; பாஹ்யதொளு - புறத்தில் (வெளியில்); அடகி - அடங்கி; விட்டலன சரணஸேவெய பரியு - விட்டலனை சேவை செய்யும் விதங்கள்; ஸஜ்ஜனகெ - சஜ்ஜனர்களுக்கு; தோரதலாய்து - தெரியாமல் போனது.

ஹரிதாஸ ஸாகித்யத்தின் தோற்றத்திற்கான காலம் கனிந்து வந்திருக்கிறது. சம்ஸ்கிருதம் தெரியாத பாமர மக்கள், ஞான, பக்தி, வைராக்கியங்கள் மற்றும் தத்வ சித்தாந்த ரகசியங்களை அறிவதில் சிறிது தொய்வு ஏற்பட்டது. நமக்குத் தெரிந்த மொழியில், நமக்குப் புரிவது போல, யாராவது ஸத்-விஷயங்களை சொல்ல மாட்டார்களா என்று எண்ணியவாறு, அத்தகைய ஸஜ்ஜனர்கள் காத்திருந்தனர் என்று அந்த காலத்து மக்களின் நிலையை படம் பிடித்துக் காட்டுகிறார் ஸ்ரீதாஸர்.

யதி த்ரயர்களின் (ஸ்ரீஸ்ரீபாதராயர், ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீவாதிராஜர்) ஆகியோரின் காலத்திலேயே, ஸ்ரீமன் மத்வாசார்யரின் தத்வ கிரந்தங்களின் மேல் பல டீகைகள், டிப்பணிகள், பாஷ்யங்கள் வந்திருந்தாலும், அவை சம்ஸ்கிருதம் கற்றறிந்த பண்டிதர்களுக்கு மட்டுமே புரிந்ததாக இருந்தது. பாமர மக்களுக்கு யதார்த்த ஞானம் கிடைப்பதில் சிறிது தடை ஏற்பட்டது. விரல் விட்டு எண்ணக்கூடிய அளவில் இருந்த அத்தகைய ஸஜ்ஜனர்கள், கெட்டவர்களின் குழுக்களுக்கு பயந்து, ரகசியமாக, தங்கள் மனதிலேயே, தங்களுக்குத் தெரிந்த அளவில், யோக ஸாதனையை செய்தவாறு இருந்தனர். இதனால், விட்டலனை சேவை செய்யும் விதங்கள் அவர்களுக்கு தெரியாமல் போனது.

இத்தகைய காலத்து நிலையை, ஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாததாஸர் அப்படியே படம் பிடித்துக் காட்டியிருக்கிறார் என்பதை பார்க்கிறோம்.

ஸுலபனோ ஹரி தன்னவரனர
களிகெ பிட்டகலனோ ரமாதவன
ஒலிசலரியதெ பாமரரு பளலுவரு பவதொளகெ ||(2-5)

ஸ்ரீஹரியை மகிழ்விக்கும் / அடையும் விதங்கள் மிகவும் சுலபமாக இருக்க, அப்படி செய்தால் ஸ்ரீஹரியானவன் தன் பக்தர்களை ஒரு நொடியும்கூட விட்டு அகலாமல் இருப்பான். ஆனால், இத்தகைய வழிகளைப் பற்றி தெரியாமல் மக்கள் சம்சார சாகரத்தில் விழுந்து கஷ்டப்படுகிறார்கள்.

**சதுரயுக[3]தொ[3]ளு மொத[3]லு மூரர**
**அதிஶயத[3] தப யக்[3]ஞ தா[3]னவு**
**க்ஷிதியொளீகலியுக[3]தி[3] கஷ்டவு ஸாத்[4]யவல்லெந்து[3] |**
**பதிதபாவன க்ஷுப்தகெ[3]ய்ஸித[3]**
**ஹிததி[3] ஸாத[4]ன ப[4]க்த ஸுஜனகெ**
**மதியொளச்யுதவெம்ப[3] கா[3]னகெ[1] கொடு[3]வ ஸமக[3]தி[1]ய ||15**

சதுரயுகதொளு - நான்கு யுகங்களில்; மொதலு மூரர - முதல் மூன்றின்; அதிஷயத - இப்போது செய்ய முடியாததான; தப யக்ஞ தானவு - தவம், யக்ஞம், தானம்; க்ஷிதியொளு - இந்த பூமியில்; கலியுகதி - கலியுகத்தில்; கஷ்டவு - கஷ்டமானது; ஸாத்யவல்லெந்து - சாத்தியம் இல்லாதது என்று; பதிதபாவன - பக்தர்களைக் காப்பவன்; ஸாதன பக்த ஸுஜனகெ - சாதனைகளை செய்ய விரும்பும் பக்த ஸஜ்ஜனர்களின்; ஹிததி - நன்மைக்காக; க்ஷுப்த கெய்ஸித - ஒரு சுலபமான வழியை செய்தான்; மதியொளு - மனதில்; அச்யுதவெம்ப - அச்யுத என்று சொல்லும்; கானகெ - பாடலுக்கு; கொடுவ ஸமகதிய - முக்தியையே கொடுக்கிறான்.

விஷ்ணு புராணத்தின் ஒரு ஸ்லோகத்தினை, ஹரிதாஸர்கள் பலர் நமக்குப் புரியும் வண்ணம் கன்னடத்தில் உகாபோகங்களாக பாடியிருக்கின்றனர். அந்த விஷயத்தின் ஸாரமே இந்த பத்யமாகும். அது என்னவெனில்:

த்யாயன் க்ருதே யஜன் யக்ஞை: த்ரேதாயாம் த்வாபரேऽர்ச்சயன் |
யாதாப்னோதி ததாப்னோதி கலௌ சங்கீர்த்ய கேஷவம் ||
-- விஷ்ணு புராணம்

த்யானவு க்ருதயுகதி யஜன யக்ஞவு த்ரேதாயுகதி
தானவாந்தக தேவதார்ச்சனெ த்வாபரயுகதி ஆ
மானவரிகெஷ்டு பலவோ அஷ்டு பலவு கலியுகதி
கானதலி கேசவ எனலு கைகொடிசுவனு ரங்கவிட்டலா ||
(ஸ்ரீஸ்ரீபாதராஜர்)

த்யானவு க்ருதயுகதலி யக்ஞ
யாகவு த்ரேதாயுகதல்லி
அர்ச்சனெ த்வாபரயுகதலி
கீர்த்தனெ மாத்ரதி கலியுகதல்லி மு
குதிய நீவ புரந்தரவிட்டலா ||
மானவரு க்ருதயுகதி தபவ மாடலிபேகு
ஞானசாதன பேகு த்ரேதாயுகதலி
ஏனெம்பே த்வாபரதி யக்ஞவே சாதனவு
கான தான பேகு கலியுகதி புரந்தரவிட்டலா ||

கலௌ ஸங்கீர்த்ய கேஷவம் - கலியுகத்தில் கானத்தினால் கேஷவனை அடையலாம். முதல் மூன்று யுகங்களில் செய்ததான தவம், யக்ஞம், தானம் ஆகியவற்றை செய்து பெற்ற நற்பலன்களை, இந்த கலியுகத்தில் கானத்தினால் (கீர்த்தனைகளால்) பெற்று விடலாம் என்பதே இந்த பத்யத்தின் ஸாரம் ஆகும்.

**ப4ர்மபித ஹரித4ர்மரூபனு**
**கர்மகு3ணவனுஸரிஸி பொரெவனு**
**நிர்மிஸுவ ப்ரதியுக3த3 த4ர்மவ கர்த்ரு தானாகி3 |**
**பெ1ர்மெயிந்த3லி பொரெவ தே3வன**
**கர்மவஶவே ஸ்மரணெ மாத்ரவெ**
**த4ர்மவெந்த3னு கலியுக3தி3 ஹரி ஒலிமெ ப3ஹு ஸுலப4 ||16**

பர்மபித ஹரி - பிரம்மதேவனின் தந்தையான ஸ்ரீஹரி; தர்மரூபனு - தர்மமே வடிவானவன்; கர்மகுணவனுஸரிஸி - கர்ம, குணங்களை அனுசரித்து; பொரெவனு - அருள்கிறான்; ப்ரதியுகத தர்மவ நிர்மிஸுவ

- ஒவ்வொரு யுகத்தின் தர்மத்தையும் நிர்ணயிக்கும்; கர்த்ரு தானாகி - கர்த்ரு இவனே ஆகிறான்; பொர்மெயிந்தலி பொரெவ - கருணையுடன் கூறுகிறான்; கர்மவஷவே - முற்பிறவியில் செய்த கர்மங்களிக்கேற்பவே; தேவன ஸ்மரணெ மாத்ரவெ - பகவந்தனின் ஸ்மரணை மட்டுமே; கலியுகதி - கலியுகத்தில்; தர்மவெந்தனு - தர்மம் என்றான்; ஹரி ஒலிமெ - ஸ்ரீஹரியை மகிழ்விப்பது / அவன் தரிசனம் பெறுவது; பஹு ஸுலப - மிகவும் சுலபம் என்றான்.

கலியுகத்தில் ஸ்ரீஹரியின் அருளைப் பெறுவது எப்படி என்னும் விதத்தினை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

பிரம்மதேவனின் தந்தையான ஸ்ரீஹரி, தர்மமே வடிவானவன். ஜீவர்களின் கர்ம, குணங்களை அனுசரித்து அருள்கிறான். ஒவ்வொருயுகத்தின் தர்மத்தையும் நிர்ணயிக்கும் கர்த்ரு இவனே ஆகிறான். முற்பிறவியில் செய்த கர்மங்களுக்கேற்பவே, அருள் என்று கூறுகிறான். கலியுகத்தில், ஸ்ரீஹரியின் ஸ்மரணை மட்டுமே தர்மம். மேலும் கலியுகத்தில் ஸ்ரீஹரியின் தரிசனம் பெறுவது மிகவும் சுலபம் என்கிறான்.

ஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாததாஸர் இந்த விஷயத்தை பல இடங்களில் விவரித்துள்ளார்.

வாரித$^3$னு மளெகெ$^3$ரெயெ பெ$^3$ளெதி$^3$ஹ
பூ$^4$ருஹங்க$^3$ள சித்ரப$^2$லரஸ
பே$^3$ரே பே$^3$ரிப்ப$^1$ந்தெ$^1$ ப$^3$ஹுவித$^4$ ஜீவரொளகி$^3$த்து$^3$ |
மாரமணனவரவர யோக்யதெ$^1$
மீரத$^3$லெ கு$^3$ண க$^1$ர்மக$^1$ள அனு
ஸார நடெ$^3$ஸுவ தே$^3$வனிகெ$^3$ வைஷம்ய வெல்லிஹுதோ$^3$ ||
(வ்யாப்தி ஸந்தி #23)

ஸ்ரீஹரி அனைத்து ஜீவர்களிலும் இருந்துகொண்டு, அந்தந்த ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப, அவர்களின் குண, கர்மங்களுக்கேற்ப, பலன்களைக் கொடுக்கிறான். இத்தகைய ஸ்ரீஹரிக்கு பாரபட்சம் எங்கிருக்கிறது?.

ஜலவ னப$^{1}$ஹரிஸுவ க$^{3}$ளிகெ$^{3}$ ப$^{3}$
ட்ட$^{1}$லனுளிது$^{3}$ ஜைக$^{4}$ண்டெ கை$^{1}$பி$^{1}$டி$^{3}$
தெ$^{3}$ளெது$^{3}$ ஹொடெ$^{3}$வந்த$^{3}$த$^{3}$லி ஸந்த$^{1}$த$^{1}$ க$^{1}$ர்த்ரு தா$^{1}$னாகி$^{3}$ |
ஹலத$^{4}$ரானுஜ புண்ய பாபத$^{3}$
ப$^{2}$லக$^{3}$ளனு தே$^{3}$வாஸுரர க$^{3}$ண
தொ$^{3}$ளு விபா$^{4}$க$^{3}$வ மாடி$^{3}$ உணிஸுத ஸாக்ஷியாகி$^{3}$ப்ப ||25
(வ்யாப்தி ஸந்தி #25)

கர்த்ரு ஆன ஸ்ரீஹரி, ஜீவர்களின் பாவ, புண்ணியங்களின் பலன்களை அவர்களுக்கே கொடுக்கிறான் என்கிறார்.

கலியுகத்தில் ஸ்ரீஹரியின் ஸ்மரணை மட்டுமே தர்மம் என்பதற்கு பல்வேறு ஹரிதாஸ கிருதிகள் உள்ளன.

மரண ஜனன தோஷகளிகதி தூரதரனெனிப
ஸ்மரணெ ஸந்தத பேகு துராசார பிடபேகு (ஸ்ரீவாதிராஜர்)

ஸ்மரணெயொந்தே ஸாலதே
கோவிந்தன நாமவொந்தே ஸாலதே (ஸ்ரீபுரந்தரதாஸர்)

மலகு$^{3}$வாக$^{3}$லி ஏளுவாக$^{3}$லி
குளிது மாதாடு$^{3}$தலி மனெயொளு
கெலஸக$^{3}$ள மாடு$^{3}$தலி மைதொளெவாக$^{3}$ மெலுவாக$^{3}$ |
(நாமஸ்மரண ஸந்தி #3)

என எல்லா சமயங்களிலும் பகவந்தனின் நாமஸ்மரணையை செய்து கொண்டேயிருக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

ஸுலப$^{4}$னோ ஹரி தன்னவரனர
க$^{4}$ளிகெ$^{3}$ பிட்டக$^{3}$லனோ ரமாத$^{4}$வன
ஒலிஸலரியதெ$^{3}$ பாமரரு ப$^{3}$ளலுவரு ப$^{4}$வதொ$^{3}$ளகெ$^{3}$ ||
(கருணா ஸந்தி #5)

ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெறுவது மிகவும் சுலபம், ஆனால் இதையெல்லாம் அறியாமல் மக்கள் இன்னும் சம்சாரத்தில் உழல்கின்றனர் என்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர்.

**ஞான ப4க்தி விரக்தி மூரனு**
**ஸானுராக3தி3 த்3ருட3தி3 நிலிஸுத1**
**ஏனு மாடு3வ கர்ம ஸமுதா3யவனு ஸ்ரீஹரிகெ3 |**
**மாணத3லெ அர்ப்பிஸுவ வர ஸு**
**க்3ஞானமார்க்3க4வ இளெகெ3 தோரலு**
**தே4னிஸித3 ஸ்ரீநிதி4யு யோக்3யனு தே3வமுனி எந்து3 ||17**

ஞான பக்தி விரக்தி மூரனு - ஞான பக்தி வைராக்யம் இந்த மூன்றையும்; ஸானுராகதி - தொடர்ந்து; த்ருடதி நிலிஸுத - திடமாக மனதில் நிறுத்தியவாறு; ஏனு மாடுவ கர்ம ஸமுதாயவனு - செய்யும் அனைத்து கர்மங்களையும்; ஸ்ரீஹரிகெ - ஸ்ரீஹரிக்கு; மாணதலெ அர்ப்பிஸுவ - கண்டிப்பாக அர்ப்பணம் செய்யும்; ஸுக்ஞான மார்க்கவ - சுக்ஞானத்தைக் கொடுக்கும்படியான வழியை; இளெகெ தோரலு - பூமியில் பக்தர்களுக்கு காட்டுவதற்கு; யோக்யனு - தகுதியானவர்; தேவமுனி - நாரதர்; எந்து - என்று; ஸ்ரீநிதியு தேனிஸித - ஸ்ரீஹரி தீர்மானித்தார்.

ஹரிதாஸ ஸாகித்யத்தை பூமியில் பரப்புவதற்கு சரியானவர் என்று ஸ்ரீஹரி நாரதரை அனுப்புகிறார் என்கிறார் ஸ்ரீதாஸர்.

ஞான பக்தி வைராக்கியம் என இந்த மூன்றினையும் திடமாக மனதில் நிறுத்தியவாறு, தான் செய்யும் அனைத்து கர்மங்களையும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்வதான, ஸுக்ஞானத்தைக் கொடுக்கும்படியான வழியை, பூமியில் இருக்கும் பக்தர்களுக்கு காட்டுவதற்கு, தகுதியானவர், நாரதரே என்று ஸ்ரீஹரி தீர்மானித்தார்.

ஹரிதாஸர்களின் லட்சணத்தை சுருக்கமாக சொல்லும் பத்யம் இது என்று சொல்லலாம்.

ஹரியெ முக்2ய நியாமகனு எ
ந்த3ரிது3 புண்யாபுண்ய ஹருஷா
மருஷ லாபா4லாப4 ஸுக2துக்கா2தி3 த்3வந்த்3வக3ள |
நிருத அவனங்க்ரிகெ3 ஸமர்ப்பிஸு
நரக பூ4 ஸ்வர்க்கா3பவர்க3தி3
கரண நியாமகன ஸர்வத்ரத3லி நெனெவுதிரு ||
(த்யான ப்ரக்ரிய ஸந்தி #14)

ஸ்ரீஹரியே முக்கிய நியாமகன் என்பதை அறிந்து, நாம் செய்யும் புண்ணிய, பாவங்களை ஸ்ரீஹரிக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

நானு நன்னது3 எம்ப3 ஜட3மதி
மானவனு தி3னதி3னதி3 மாடு3வ
ஸ்னான ஜப தே3வார்ச்சனெயெ மொத3லாத3 கர்மக3ள |
தா3னவரு ஸெளெதொ3ய்வரல்லதெ3
ஸ்ரீனிவாஸனு ஸ்வீகரிஸ ம
த்தானெ பக்வ கபித்த2ப2ல ப4க்ஷிஸித3வோலஹுது ||
(ஸர்வ ப்ரதீக ஸந்தி #13)

தான் செய்யும் கர்மங்களை, நானே செய்தேன், அனைத்தும் என்னுடையது என்று (எதையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்காமல்) செய்யப்படும் ஜப, தேவார்ச்சனை ஆகியவற்றை ஸ்ரீனிவாஸன் ஏற்றுக் கொள்வதில்லை.

இப்படியாக, ஞான பக்தி வைராக்கியத்துடன் அனைத்து கர்மங்களையும் ஸ்ரீஹரிக்கே சமர்ப்பிக்க வேண்டும் என்பதான சரியான வழியை (ஹரிதாஸ மார்க்கத்தை) பூமியில் பரப்புவதற்கு நாரதரே சரியானவர் என்று ஸ்ரீஹரி தீர்மானிக்கிறார் என்கிறார் ஸ்ரீரமா காந்த விட்டல தாஸர்.

**தாதனாக்3ஞெய திளிது3 முனிவர**
**யாதகெ1ன்னனு கரெஸலாய்தெ1ம்**
**தா3து1ரதி3 கைமுகி3து3 பே3ட3லு ஹரிய ஸம்முக2தி3 |**
**ஜாதனாகி3ளெயொளகெ3 கலிப4ய**
**பீ4தி ஹரிஸுவ நீதி1 போ3தி4ஸு**
**பாதக1வு நினகி3ரது3 போகெ3னுதொ1ரெத3னஸுராரி ||18**

தாதனாக்னெய திளிது - தனது தாத்தாவான ஸ்ரீஹரியின் ஆணையை அறிந்து; முனிவர - நாரதர்; யாதகென்னனு - என்னை எதற்கு; கரெஸலாய்து - அழைத்தீர்கள்; எந்தாதுரதி - என்று மரியாதையுடன்; ஹரிய ஸம்முகதி - ஸ்ரீஹரியின் எதிரில்; கைமுகிது பேடலு - கைகுவித்து வேண்டிக் கொள்ள; இளெயொளகெ - இந்த பூமியில்; ஜாதனாகி - பிறந்து; கலிபய பீதி ஹரிஸுவ - கலியின் பயத்தை

போக்கும்; நீதி போதிஸு - நீதியை போதிப்பாயாக; பாதகவு நினகிரது - உனக்கு எவ்வித பிரச்னையும் இருக்காது; போகெனுதொரெதனு - சென்று வா என்று கூறினான்; அஸுராரி - அசுரர்களைக் கொல்பவரான ஸ்ரீஹரி.

நாரதரை பூமிக்கு அனுப்பும் செயலை இங்கு அழகாக விவரிக்கிறார் ஸ்ரீதாஸர்.

தனது தாத்தாவான ஸ்ரீஹரியின் ஆணையை அறிந்து, நாரதர் - என்னை எதற்கு அழைத்தீர்கள் - என்று மரியாதையுடன் அவர் எதிரில் கைகுவித்து கேட்டுக் கொண்டார். அதற்கு ஸ்ரீஹரியானவர் - நீ இந்த பூமியில் பிறந்து, கலியின் பயத்தினை போக்கும் நீதியை போதிப்பாயாக. இந்த செயலால் உனக்கு எவ்வித பிரச்னையும் இருக்காது. உடனே சென்று வா' என்று கூறினார்.

பணெயலொப்புவதிலக துலசி
மணிக³ணாஞ்சித கண்ட² கரத³லி
க்க³ணிதவீணா ஸுஸ்வரதி³ ப³ஹுதாள க³திக³ளலி |
ப்ரணவ ப்ரதி³பாத்⁴யன கு³ணங்க³ள
குணிகுணிது அதிஸம்ப்⁴ரமதி³ கா³
யனவ மாடு³வ தே³வரிஷி நாரத³ரிக³பி⁴மனமிபெ ||
(கக்ஷ தாரதம்ய ஸந்தி #26)

நெற்றியில் திலகம், கழுத்தில் துளசிமாலை, இவற்றால் அலங்கரிக்கப்பட்டு கையில் வீணையைப் பிடித்து, பரமாத்மனின் குணங்களை வீணையால் நுடித்தவாறு, நற்ஸ்வரத்துடன் கானம் செய்தவாறு, நடனம் ஆடியவாறு ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் நாரதரை நான் வணங்குகிறேன் - என்று ஸ்ரீஜகன்னாததாஸர் கூறுகிறார்.

இவ்வாறாக, ஹரிதாஸ ஸாகித்யத்தின் துவக்கம் எப்படி ஆனது என்பதையும், ஸ்ரீஹரியே நாரதரை, ஸ்ரீனிவாஸ நாயகராக (பின்னர் ஸ்ரீபுரந்தரதாஸர்) பூமிக்கு அனுப்பினார் என்பதை அறிகிறோம். எந்த நேரமும் பகவத் ஸ்மரணையிலேயே சஞ்சாரம் செய்து கொண்டிருக்கும் நாரதரே, பூமியில் மக்களிடையே கலியின்

பயத்தினை போக்குவதான நீதியை போதிக்க சரியானவர் என்றார் ஸ்ரீஹரி.

**ஜனிஸுதலி நாரத3ரு இளெயொளு**
**ஜனுமதோ3ஷத3லிந்த3 கெலதி3ன**
**தனுத4னத3 மமதெயலி களெத3ரு தம்ம தாவ்மரெது |**
**க4னமஹிம இத3னரிது தோரித3**
**அனுப4வகெ தந்தி3த்து தனுஸுக2**
**க்ஷணிகவென்னுத க்ஷண பி3ட3தெ3 த4ரிஸிதரு வைராக்3ய ||19**

இளெயொளு - இந்த பூமியில்; நாரதரு - நாரதர்; ஜனிஸுதலி - (ஸ்ரீனிவாஸ நாயகராக) பிறந்து; ஜனுமதோஷதலிந்த - கர்ம பலன்களால்; கெலதின - சில நாட்களுக்கு; தனுதனத - உடல், செல்வம் ஆகியவற்றின்; மமதெயலி - கர்வத்தில்; தம்ம தாவ்மரெது - தன்னை தான் அறியாமல்; களெதரு - காலத்தை கழித்தார்; கனமஹிம - ஸ்ரீஹரி; இதனரிது - இதனை அறிந்து; அனுபவகெ தந்தித்து - அனுபவத்திற்கு கொண்டு வந்து ; தோரித - காட்டினான்; தனுஸுக - இந்த உடல் சுகமானது; க்ஷணிகவென்னுத - தற்காலிகமானது; க்ஷண பிடதெ - உடனடியாக, அதே நொடியில்; வைராக்ய - வைராக்கியத்தை; தரிஸிதரு - தரித்தார் (ஸ்ரீனிவாஸ நாயக).

ஸ்ரீனிவாஸ நாயகரின் பிறப்பு, வாழ்க்கை பின்னர் அவர் ஸ்ரீபுரந்தரதாஸராக மாறுவதான சந்தர்ப்பத்தை இந்த பத்யத்தில் கூறியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீஹரியின் ஆணைப்படி, நாரதர், இந்த பூமியில், ஸ்ரீனிவாஸ நாயகராக அவதரித்தார். தனது கர்ம பலன்களால் சில நாட்களுக்கு உடல், செல்வம் ஆகியவற்றின் கர்வத்தில், மெய்மறந்து காலத்தை கழித்தார். இதனை அறிந்த ஸ்ரீஹரி, அவர் யார் என்பதை அவருக்கு உணர்த்தினான். அப்போதே, தன் நிலை அறிந்த நாயகர், இந்த உடல் சுகமானது தற்காலிகமானது என்பதை உணர்ந்து, உடனடியாக அதே நொடியில் வைராக்கியத்தை தரித்தார்.

ஜக3வ பாவன்னத3 கோ3ஸூவாகி3 ஸுரமுனி
நக3த4ரனன்னெ ப4ஜிஸி ஸுகு3ணத3ல்லி
மிகெ3 மானவராகி3 பூ4ஸுர க3ர்ப்ப4த3ல்லி ப3ந்து3

அக4தூ3ரராகி3 ப3லு பஸரிஸுத்த
அக3ணித ஞான ப4குதி வைராக்3ய பரராகி3
(ஸ்ரீவிஜயதாஸர் இயற்றிய ஸ்ரீபுரந்தரதாஸர் ஸுளாதி)

உலகத்தை பவித்ரமாக்குவதற்காக, நாரதர், பகவந்தனை வணங்கி, பகவந்தனின் ஆணைப்படி, நற்குணங்களைக் கொண்ட மானவராகி, பூமியில் ஒரு சிறந்தவரின் கர்ப்பத்தில் வந்து அவதரித்தார். எல்லையற்ற ஞான பக்தி வைராக்கியஙளைக் கொண்டு.....

இவருடைய அவதாரம் வெறும் சஜ்ஜனர்களின் உத்தாரத்திற்காக மட்டுமே தவிர, பிராரப்தத்தை அனுபவிக்க பூமிக்கு வந்தவர் அல்ல இவர். பூமியில் இவருடைய புகழ் திக்கெட்டும் பரவியது.

வெளியில் லோபியாக தன்னை காட்டிக்கொண்டாலும், பகவந்தனின் ஆணைக்காக, அந்த தக்க காலத்திற்காக காத்திருந்தார். உள்ளே பகவந்தனின் எண்ணிக்கையற்ற குணங்களின் சிந்தனை இருந்தது. ஞான என்னும் மரத்திற்கு வைராக்ய என்னும் பாத்திரத்தில் ஹரிபக்தி என்னும் தண்ணீரை ஊற்றி, மஹாமோட்ச பலன்களைக் கொடுக்கும் மரத்தை வளர்த்தார்.

பகவந்தன் தன் லீலையால், நாயகரை, அவரது குருவான ஸ்ரீவ்யாஸராஜரிடம் அனுப்பியது, அவரை ஸ்ரீபுரந்தரதாஸராக ஆக்கியது ஆகியவற்றை அடுத்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**ப3ந்தகார்யவ தந்து3 மனஸிகெ3**
**இந்தி3ராபதி ஸேவெகெ3ய்வுத3**
**கெந்து3 ஸத்கு3ருக்ருபெய ப3யஸுத ப3ந்தர்ஹுடுகுத்த |**
**ஹிந்தெ3 க3ர்ப்ப4தொ3ளித்து3 மந்த்ரவ**
**பொந்தி3 நுதிஸித3 வ்யாஸராயர**
**முந்தெ3 நிந்துபதே3ஶபடெ3த3ரு லோகவனுஸரிஸி ||20**

பந்தகார்யவ - இந்த உலகிற்கு தான் வந்த காரியத்தை; மனஸிகெ தந்து- மனதிற்குக் கொண்டு வந்து; இந்திராபதி - ஸ்ரீஹரியின்; ஸேவெகெய்வுதகெந்து - சேவை செய்வதற்காகவே என்று; ஸத்குருக்ருபெய பயஸுத - அதற்காக ஒரு ஸத்குருவின் கிருபையை

விரும்பியவாறு; பந்தர்ஹுடுகுத்த - தேடியவாறு வந்தார்; ஹிந்தெ - முந்தைய பிறவியில்; கர்ப்பதொளித்து - (பிரகலாதன்) கர்ப்பத்தில் இருந்தபோது; மந்த்ரவ பொந்தி நுதிஸித - தான் மந்திரத்தை உபதேசம் செய்த; வ்யாஸராயர - (அவரே தற்போது) வ்யாஸராயராக இருக்கையில்; முந்தெ நிந்து - அவர் முன்னே நின்று; லோகவனுஸரிஸி - தற்காலத்திற்கேற்ப (வர்ணாசிரமத்திற்கேற்ப); உபதேஷ படெதரு - உபதேசம் பெற்றார்.

ஸ்ரீஹரியின் லீலையால், ஸ்ரீனிவாஸ நாயகர், நொடிப்பொழுதில் வைராக்கியம் பெற்று, அனைத்தையும் துறந்து, பின் ஸ்ரீவியாஸராயரிடம் வந்து உபதேசம் பெற்றதை இந்த பத்யத்தில் கூறியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

இந்த உலகிற்கு தான் வந்த காரியத்தை, மனதிற்குக் கொண்டு வந்தார். அது ஸ்ரீஹரியின் சேவை செய்வதற்காகவே வந்திருப்பதாக அறிந்து, ஒரு தக்க குருவைத் தேடி வந்தார். முந்தைய பிறவியில், பிரகலாதன் கர்ப்பத்தில் இருந்தபோது, தான் மந்திரத்தை உபதேசம் செய்ததையும், அவரே தற்போது ஸ்ரீவ்யாஸராயராக இருப்பதையும் அறிந்து, அவர் முன்னே சென்று, தற்காலத்திற்கேற்ப, அவரிடம் உபதேசம் பெற்றார்.

ஸ்ரீனிவாஸ நாயகரை மாற்றுவதற்காக ஸ்ரீஹரி செய்த 'மூக்குத்தி' லீலையின் சம்பவத்தை அனைவரும் அறிந்திருக்கிறோம். இந்த கிருதி மிகவும் பெரிதாக நீண்டுவிடும் என்பதால், அந்த சம்பவத்தை இங்கு விளக்கவில்லை. தன்னை மாற்ற வந்தது, ஸ்ரீஹரியே என்பதை அறிந்த நாயகர், உடனடியாக நொடிப்பொழுதில் வைராக்கியம் பெற்றார். தன் மனைவி, குடும்பத்தினருடன் வீட்டை விட்டு வெளியே வந்தார். தன் செல்வம் அனைத்தையும் 'கிருஷ்ணார்ப்பணம்' என்றார். ஒரு தக்க குருவைத் தேடி, விஜயநகரத்தில் ராஜகுருவாக ஸ்ரீவ்யாஸராயர் இருப்பதை அறிந்து, அவரிடம் சென்று சேர்ந்தார். குரு சிஷ்யர்களின் அற்புதமான சந்திப்பு நிகழ்ந்தது. இவர் மூலமாகவே ஹரிதாஸ ஸாஹித்யம் துவங்கி, வளரப்போகிறது என்பதை அறிந்த ஸ்ரீவ்யாஸராஜர், நாயகருக்கு, ஹரிதாஸ தீக்ஷை அளித்து, 'புரந்தரவிட்டலா' என்னும் அங்கிதத்தை உபதேசம் செய்தார்.

ஜக$^{3}$த$^{3}$ கு$^{3}$ரு வியாஸராயரலி
ப$^{3}$கெ$^{3}$ ப$^{3}$கெ$^{3}$யிந்த$^{3}$லி விஷ்வாஸவன்னு இட்டு

யுக$^{3}$ள கரவ முகி$^{3}$து$^{3}$ முத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$லி
ஜக$^{3}$த$^{3}$பா$^{1}$லக நம்ம விஜயவிட்டலன உபா
ஸிக$^{3}$னாகி$^{3}$ விஷயத$^{3}$ல்லி ஸிக$^{3}$தெ$^{3}$ ஹருஷத$^{3}$லி ||1
(ஸ்ரீவிஜயதாஸர் இயற்றிய ஸ்ரீபுரந்தரதாஸர் ஸுளாதி)

ஸ்ரீவ்யாஸராயரிடம் சென்று, கை குவித்து, மிகவும் மகிழ்ச்சியுடன், தன்னை சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளும்படி கேட்டார். குருகளும் நாயகரை வரவேற்று, மிகவும் சிஷ்ய வாத்ஸல்யத்துடன் ‘புரந்தரவிட்டலா’ என்னும் அங்கிதத்தை வழங்கினார்.

ஸ்ரீவ்யாஸராயரிடம் அங்கித உபதேசம் பெற்ற விஷயத்தை, ஸ்ரீபுரந்தரதாஸரே ஒரு உகாபோகத்தில் மிகவும் அழகாக விவரித்துள்ளார்.

அங்கிதவில்லத தேஹ நிஷேத்தவு
அங்கிதவில்லத காவ்ய ஷோபிசுது
அங்கிதவில்லதெ இரபாரதெந்து
சக்ராங்கிதவனு மாடி என்னங்ககெ
பங்கஜனாப ஸ்ரீபுரந்தரவிட்டலன
அங்கிதவெனகித்த குருவியாஸ முனிராய ||

தாம் இந்த உலகிற்கு வந்த நோக்கத்தை நினைவில் கொண்டு, இப்படியாக ஒரு குருவைத் தேடி, அங்கிதோபதேசம் பெற்று, ஸ்ரீபுரந்தரதாஸர் ஆனார் என்று கூறி, அடுத்த சில பத்யங்களில், ‘குரு’ வின் முக்கியத்துவத்தை / சிறப்பினை விளக்குகிறார் ஸ்ரீரமா காந்த விட்டல தாஸர்.

**திளி மருளெ இத$^{3}$ரிந்த$^{3}$ த$^{4}$ரெயொளு**
**ப$^{3}$லுஹினலி கு$^{3}$ருரஹித வித்$^{4}$யவ**
**கலிது ப$^{2}$ல ப$^{3}$யஸுவுது$^{3}$ ப$^{3}$ஞ்செ$^{3}$கெ$^{3}$ மக்களாத$^{3}$ந்தெ |**
**ஹலவு வித$^{4}$த$^{3}$லி மனவ ஹரிஸுத**
**நெலெயகா$^{3}$ணதெ$^{3}$ திருகு$^{3}$தலேதகெ**
**வலிஸி ஸத்கு$^{3}$ரு மனவ உத்தம நெலெயனாஶ்ரயிஸு ||21**

இதரிந்த திளி மருளெ - இதனால் இவ்வாறு அறிந்து கொள்ளுங்கள்; தரெயொளு - இந்த பூமியில்; குருரஹித - தக்க குரு இல்லாமல்;

பலுஹினலு - தன்னுடைய சொந்த சாமர்த்தியத்தினால்; வித்யவ கலிது - கல்வியைக் கற்று; பல பயஸுவுது - பலன்களைப் பெறுவது; பஞ்செகெ மக்களாதந்தெ - குழந்தை பாக்கியம் இல்லாதவர்களுக்கு, குழந்தை பிறப்பதைப் போல (சாத்தியம் இல்லாததாகும்); ஹலவு விததலி - பற்பல விதங்களில்; மனவ ஹரிஸுத - மனதை அலைபாய விட்டவாறு; நெலெயகாணதெ - ஒரு நிலையில் இல்லாமல்; திருகுதலேதகெ - ஏன் சுற்றித் தவிக்க வேண்டும்?; ஸத்குரு வலிஸி - ஒரு ஸத்குருவை ஏற்றுக் கொண்டு; மனவ - மனதினை; உத்தம நெலெயனாஷ்ரயிஸு - மனதினை ஒரு நல்ல நிலையில் நிறுத்தவும்.

ஒரு தக்க குருவின் முக்கியத்துவத்தையும், அவருடைய சிறப்பினையும் இங்கிருந்து சில பத்யங்களுக்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

இந்த பூமியில் தக்க குரு இல்லாமல், தன்னுடைய சொந்த சாமர்த்தியத்தினால், கல்வியைக் கற்று பலன்களைப் பெறுவது சாத்தியமே இல்லாததாகும். அப்படி செய்யாமல் (குருவை அடையாமல்), மனதை அலைபாய விட்டவாறு, ஒரு நிலையில் இல்லாமல் ஏன் சுற்றித் தவிக்க வேண்டும்?.

குருவின் மூலமாகவே ஞானத்தைப் பெற வேண்டும் என்று தக்க ஆதாரங்களுடன் பல ஹரிதாஸர்கள் கிருதிகளை இயற்றியிருக்கின்றனர்.

குருஹிரியனனுசரிஸி ஹரிய மனதொளகிரிஸி பரகதிய பேக சாதிசிரோ || -- என்பது ஸ்ரீவாதிராஜரின் வாக்கு. குருவை அடைந்து, அவர் கூறிய பகவத் மகிமைகளை மனதில் நிறுத்தி, முக்திக்குச் செல்லும் வழியை அடையுங்கள் என்கிறார்.

குருமுகவில்லதலெ தொரெயது ஞானமார்க்க -- என்று ஸ்ரீவிஜயதாஸர் கூறியிருக்கிறார்.

குரு உபதேசவில்லத ஞானவு
குரு உபதேசவில்லத ஸ்னானவு
குரு உபதேசவில்லத த்யானவு
குரு உபதேசவில்லத ஜபவு

குரு உபதேசவில்லத தபவு
குரு உபதேசவில்லத மந்த்ர
குரு உபதேசவில்லத தந்த்ர
-- என்று வ்யாஸராய ஸ்தோத்திர ஸுளாதியில் ஸ்ரீபுரந்தரதாஸர், குருவின் சிறப்பினை விளக்கியிருக்கிறார்.

' குருபிரசாதோ பலவான் ந தஸ்மாத் பலவத்தரம்' என்று சாஸ்திரங்கள் குருவின் மகிமையை சொல்கின்றன. குருவின் அருளினாலேயே அனைத்தையும் அடைய முடியும் என்பதற்கு இதிகாசங்களில் பல உதாரணங்கள் உள்ளன. அனைத்தும் அறிந்த சர்வக்ஞனான ஸ்ரீஹரி, தர்மத்தை பின்பற்றுவதற்காக, சந்தீபினி ஆசார்யரிடம் சென்று குருசேவை செய்தான் - என்றபிறகு, ஸ்ரீஜகன்னாததாஸர் சொல்வதைப் போல நம் கதி என்ன? (நரர பாடேனு?).

குருகளின் மகிமையை அடுத்த பத்யத்திலும் தொடர்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**கேளுவரு குத்ஸித¹ரு கெலவரு**
**லாலிஸித³ பிதனெமகெ³ தா கு³ரு**
**மூலகு³ருமேண்மருதனிரெ மத்தொப்³ப³ குருவேகெ |**
**பேள்வுதே³னித³கின்னு ஹொலஸின**
**பீ³ளுதே³ஹகெ காரணெனிஸுவ**
**பேள ஜனகனு தே³வவித்⁴யெய கு³ருவு பேள்வந்தெ ||22**

குத்ஸிதரு கெலவரு - மந்த மதியினர் சிலர்; கேளுவரு - கேட்பார்கள்; லாலிஸித - நம்மை வளர்ந்த; பிதனெமகெ தா - தந்தையே எமக்கு; குரு - குருவாக இருக்கிறார்; மூலகுரு - மூலகுருவாக; மேண்மருதனிரெ - உத்தமனான மருதர் (வாயுதேவர்) இருக்கையில்; மத்தொப்ப - இன்னொரு; குருவேகெ - குரு எதற்கு?; ஹொலஸின பீளுதேஹகெ - மலங்களால் நிறைந்த இந்த தேகத்திற்கு; காரணெனிஸுவ - காரணமான; ஜனகனு - தந்தையானவர்; குருவு பேள்வந்தெ - ஒரு தக்க குரு சொல்வதைப் போல; பேள - சொல்ல மாட்டார்; பேள்வுதேனிதகின்னு - இதைவிட சொல்வதற்கு என்ன இருக்கிறது?.

நம்மைப் பெற்ற தந்தைக்கு, குருவுக்குமான வேறுபாட்டினை இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

(காயத்ரி மந்திரம்) உபதேசம் செய்த நம் தந்தையே நமக்கு குருவாக இருக்கிறார். அனைத்திற்கும் மேல், மூலகுருவாக ஸ்ரீவாயுதேவர் (ஸ்ரீமதாசார்யர்) இருக்கிறார். அப்படியிருக்கையில், நமக்கு ஏன் இன்னொரு குரு தேவை? என்று சில மந்த மதியினர் கேட்பார்கள். ஆனால், நம் தேகத்திற்குக் காரணமான தந்தையானவர், ஒரு தக்க குரு சொல்வதைப் போல, ஸத்விஷயங்களை நமக்கு போதிக்க மாட்டார். -- என்கிறார் ஸ்ரீதாஸர்.

ஒரு குருவிடமிருந்து, தெளிவான ஞானத்தை, அதன் பொருள் மற்றும் அனுசந்தானத்துடன் கேட்டு அறிந்து கொள்வது ஸ்ரவணம் எனப்படுகிறது. இதுவே அனைத்து சாதனைகளுக்கும் துவக்கம். இந்த ஸ்ரவணத்தைப் பற்றி ஸ்ரீவிஜயதாஸர் ஒரு சுளாதியில் இவ்வாறு சொல்கிறார்:

ஸ்ரவணவெ மஹாமுக்ய கர்ம ஞானிகளிகெ
ஷ்ரவணவில்லதனக ஆவது தொரகது
ஷ்ரவணதிந்தலி சதத ஞான பகுதிவிரக்தி
ஸ்ரவணவெ ஸ்ரீஹரிய தாத்விக ப்ரஸா
...
ஷ்ரவணக்கெ ஒலிவ விஜயவிட்டலனங்க்ரி
நவநவநாமகள ஷ்ரவணமாடோ மனுஜ ||

குருவின குலாமனாகுவ தனக தொரெயதண்ண முகுதி - என்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர். ஒரு குருவை அடைந்து, அவரின் சேவைகளை செய்து, அவர் மூலமாகப் பெறும் ஞானத்தினாலேயே முக்தி கிடைகிறது என்பது இதன் கருத்து.

**மத்தெ இதரொளகு3ண்டு கௌ3ப்யவு**
**சித்தவிடு3தலி கேளு நீ ஹரி**
**சித்த ஸெலெ ஸம்ஸ்காரப2லதி3ம் ஹலவு ஶ்ருதிததிய |**
**ஸத்யதி3ம் பாலிஸூத சர்யவ**
**ஆர்த்தி2யிந்த3லி தோரிதா3தொ3டெ3**
**பித்ருஹிரியர கு3ருவினந்த3தி3 ஸ்வீகரிஸி திளிதத்வ ||23**

மத்தெ - மேலும்; இதரொளகுண்டு - இதில் இருக்கிறது; கௌப்யவு - ரகசியம்; சித்தவிடுதலி - மிகவும் கவனத்துடன்; நீ கேளு - நீ கேட்பாயாக; ஹரி சித்த ஸெலெ - ஸ்ரீஹரியின் சித்தத்தின்படி; ஹலவு ஷ்ருதிததிய - பல்வேறு வேத, புராணங்களின்படியான; ஸம்ஸ்காரபலதிம் - தக்க சம்ஸ்காரங்களை; ஸத்யதிம் பாலிஸுத - சரியாக விதிப்படி பின்பற்றியவாறு; ஆர்த்தியிந்தலி - மிகவும் சிறப்பாக; சர்யவ தோரிதாதொடெ - செயல்களை செய்து காட்டுபவரிடம்; பித்ருஹிரியர - (அவர்) தந்தையாகவோ, வேறு பெரியவராகவோ இருக்கலாம். அவரை, குருவினந்ததி - குருவாக; ஸ்வீகரிஸி - ஏற்றுக் கொண்டு; திளிதத்வ - தத்வங்களை அறி.

ஒரு தக்க குருவின் லட்சணங்களை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

குருவின் தகுதியைப் பற்றி சொல்கிறேன், கேளுங்கள் என்றவாறு ஸ்ரீதாஸர் இவ்வாறு கூறுகிறார். ஸ்ரீஹரியின் சித்தத்தின்படி, பல்வேறு வேத புராணங்களின்படியான தக்க சம்ஸ்காரங்களை, சரியாக விதிப்படி பின்பற்றியவாறு, மிகவும் சிறப்பாக தன் செயல்களை (கர்மானுஷ்டானங்களை) செய்து காட்டுபவரை, அவர் தந்தையாகவோ, வேறு பெரியவராகவோ இருக்கலாம் - அவரை குருவாக ஏற்றுக்கொண்டு, அவரிடமிருந்து தத்வங்களை அறிவாயாக.

இங்கு ஸ்ரீபுரந்தரதாஸர், ஸ்ரீவ்யாஸராயரை குருவாக ஏற்பதற்காக அவரை சந்திக்கச் சென்றிருப்பதால், அவரைப் பற்றி சிறிது பார்ப்போம்.

காம க்ரோதா லோப மோஹ காம
த மத்ஸரவெம்ப மஹா கள்ள பண்டர முரிதோடிஸி
நேமா மந்த்ர தந்த்ரகள படெது வேதாந்த ஷாஸ்த்ர
ஸாம்ராஜ்ய ஸம்பாதிஸித அஸஹாய ஸூரா ||
என்று ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவ்யாஸராயரைப் புகழ்கிறார்.

இப்படிப்பட்ட குருவினை அடைந்த ஸ்ரீபுரந்தரதாஸரைப் போல, நாமும் ஒரு தக்க குருவைத் தேடி அவரிடம் செல்ல வேண்டும் என்பதையே ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர் வலியுறுத்துகிறார்.

**எல்லரொளகீ$^3$ வித$^4$த$^3$ பா$^4$வனெ**
**ஸல்லலாரத$^3$ரிந்த$^3$ ஸ்வோத்தம**
**ப$^3$ல்லவர ப$^3$ளி ஸாரு வித்$^3$யாப்ராப்திகோ$^3$ஸுக$^3$தி$^3$ |**
**மெல்லனவர வரப்ரஸாத$^3$வ**
**கெ$^3$ல்லு தி$^3$விஜரிகு$^3$ண்டு ஈ விதி$^4$**
**ஸொல்லு ஸித்$^3$த$^4$வு மூலகு$^3$ரு தானிருவ காலக்கு ||24**

எல்லரொளகீ விதத பாவனெ - அனைவருக்குள்ளும் இப்படியான சிந்தனை; ஸல்லலாரதரிந்த - இருக்காது என்பதால்; வித்யாப்ராப்திகோ ஸுகதி - கல்வியைக் கற்க வேண்டும் என்னும் நோக்கத்திற்காக; ஸ்வோத்தம - நம்மைவிட சிறந்தவர்கள்; பல்லவர பளி ஸாரு - அறிந்தவர்களிடம் செல்; மெல்லனவர - மெதுவாக அவர்களின்; வரப்ரஸாதவ - அருளை / கருணையை; கெல்லு - வெல்வாயாக; மூலகுரு - ஸ்ரீமன் மத்வாசார்யர்; தானிருவ காலக்கு - அனைத்து காலங்களிலும் குருவாக இருக்கிறார்; ஸொல்லு ஸித்தவு - அவரின் வாக்கினை பின்பற்ற வேண்டும்; ஈ விதி - இந்த விதியானது; திவிஜரிகுண்டு - தேவதைகளும் பொருந்துகின்றது.

சென்ற பத்யத்தின் தொடர்ச்சியாக, குருவை அடைவதைப் பற்றியே இங்கும் சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

அப்படிப்பட்ட ஒரு குருவை தேடிப் பிடிக்க முடியவில்லையெனில் / கால தாமதம் ஏற்பட்டால், நம்மைவிட சிறந்தவர்களிடம் சென்று, அவர்களின் கருணையைப் பெற வேண்டும். இந்த விதியானது, நமக்கு மட்டும் இல்லை, தேவதைகளும்கூட உண்டு. அவர்களும், மூலகுருவான (ஸ்ரீவாயுதேவர்) ஸ்ரீமன் மத்வாசார்யரிடம் சென்று அவரிடம் பாடங்களைப் படிக்கின்றனர்.

பரிபரிய லீலெக$^3$ளனீபரி சரிஸுதிரலானந்த$^3$தீர்த்த$^2$ரு
ப$^3$ரனிக$^3$ம ஸூத்ரேதிஹாஸக$^3$ளரியலாத$^3$ரதி$^3$ |
நெரெதி$^3$ருவ சிஷ்யர ஸமூஹக$^3$ளரியுவந்த$^3$தி$^3$ போ$^4$தி$^4$ஸுத்திரெ
உரக$^3$பதி ஸனகாதி$^3$முனிக$^3$ள ஸஹித கேளித$^3$னு ||41
(மத்வ விஜய ஸார ஸங்க்ரஹ)

இப்படியாக விதம்விதமான லீலைகளை ஸ்ரீமதாசார்யர் செய்து வந்தார். வேத ஸூத்ர இதிகாசங்களை அறிவதற்காக, பக்தி

மரியாதையுடன் நிறைந்திருக்கும் சிஷ்யர்களின் கூட்டம் அறியுமாறு, பாடம் எடுத்துக் கொண்டிருக்கையில், சேஷதேவர், ஸனகாதி முனிகளுடன் சேர்ந்து வந்து ஆசார்யரின் பாடம் கேட்டார்.

க்ருத்திவாஸனெ ஹிந்தெ³ நீ நா
ல்வத்து¹ க¹ல்ப ஸமீரனலி ஸி
ஷ்யத்வ வஹிஸகி²ளாக³ மார்த்தக³ளோதி³ ஜலதி⁴யொளு |
என்று, ஸ்ரீவாயுதேவரிடம் ஸ்ரீருத்ரதேவரும் பாடம் படித்ததை ஸ்ரீஜகன்னாததாஸர் ஹரிகதாம்ருதஸாரத்தில் விளக்கியிருக்கிறார்.

இத்தகைய குருவினால் நமக்குக் கிடைக்கக்கூடிய லாபங்களைப் பற்றி அடுத்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

**கு³ருவினிந்த³லெ ஞானலாப4வு**
**கு³ருவினிந்த³லெ ஸித்தி⁴ஸாத்⁴யவு**
**கு³ருகுலதி³ கு³ருஸேவெகெ³ய்வுதே³ பரம கு³ருத⁴ர்ம |**
**கு³ருவபி³ட்டன்யத்ர எரக³தெ³**
**கு³ருவினிம் ஸத்க்ருபெய படெ³வுது³**
**கு³ருவெ ஸத்க³திதா³த கு³ருவில்லத³லெ ஹரி ஒலிய ||25**

குருவினிந்தலெ - குரு மூலமாகவே; ஞானலாபவு - ஞானம் பெற முடியும்; குருவினிந்தலெ - குரு மூலமாகவே; ஸித்திஸாத்யவு - நன்மைகள் பயக்கும்; குருகுலதி - குருகுலத்தில்; குருஸேவெ கெய்வுதே - குரு ஸேவையை செய்வதே; பரம குருதர்ம - மிகச்சிறந்த குரு தர்மம் ஆகும்; குருவபிட்டன்யத்ர எரகதெ - குருவை விட்டு வேறு எங்கும் செல்லாமல்; குருவினிம் - குருவிடமிருந்து; ஸத்க்ருபெய படெவுது - அவரது அருளைப் பெற வேண்டும்; குருவெ ஸத்கதிதாத - குருவே சத்கதியை தரத்தக்கவர்; குருவில்லதலெ - குரு இல்லை யெனில்; ஹரி ஒலிய - ஹரி மகிழ்வதில்லை.

குருவிடமிருந்து நமக்குக் கிடைக்கக்கூடிய லாபங்களைப் பற்றி இங்கு விவரிக்கிறார் ஸ்ரீதாஸர்.

குரு மூலமாகவே ஞானம் பெற முடியும்; நமக்கு நன்மைகள் பயக்கும்; குருகுலத்தில், குரு ஸேவையை செய்வதே மிகச்சிறந்த தர்மம் ஆகும்; குருவை விட்டு விலகாமல், அவரது அருளைப் பெற வேண்டும்;

குருவே ஸத்கதியை தரத்தக்கவர். குரு இல்லையெனில், ஹரி மகிழ்வதில்லை என்று குருவின் மகிமைகளைப் போற்றுகிறார் ஸ்ரீதாஸர்.

இத்தகைய குருவின் ஸ்தானத்தின் சிறப்புகளை ஹரிதாஸர்கள் பலரும், பல்வேறு கிருதிகளில் சொல்லியிருக்கின்றனர்.

குருகள கருணவே தாரித்ர்ய பஞ்சன
குருகள கருணவே மஹாதைஸ்வர்ய காரண
குருகள கருணவெ சகல ரோக ஹரண
குருகள கருணவெ சகல துக்க நாஷன
குருகள கருணவெ சகல சுக சாதன ||
(பாதராயண விட்டலதாஸர்)

ஸ்மரிஸு குருகள மனவே ஸ்மரிஸு என்னும் ஸ்ரீவரதகோபால விட்டலதாஸரின் பாடல் குருவின் மகிமைகளை அற்புதமாக பட்டியலிட்டுக் காட்டுகிறது.

குரு ஸ்மரணெயிந்த ஸகல ஆபத்து பரிஹார
குரு ஸ்மரணெயிந்த ஸம்பதவு நினகெ |
குரு ஸ்மரணெயிந்த புஷ்கள த்ரவ்யதொரகுவுது
குரு ஸ்மரணெயிந்த ஹரிவொலிது பொரெவ ||2

குருவின் மூலமாக வந்தாலே, ஸ்ரீஹரி மகிழ்கிறான் என்று கூறி, இதே விஷயத்தை அடுத்த பத்யத்திலும் தொடர்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**ஹக$^{3}$ரணத$^{3}$ ஈ ஜக$^{3}$தி$^{3}$ ஸ்வார்த்த$^{2}$ரு**
**ப$^{3}$கெ$^{3}$ப$^{3}$கெ$^{3}$ய வாக்சதுரதனதி$^{3}$ம்**
**ப$^{3}$கெயுவரு விஷயவனு மனதொ$^{3}$ளு பா$^{3}$ஹ்யகு$^{3}$ருவெனிஸி |**
**மகு$^{3}$ளெ நிஜகு$^{3}$ரு விஷயபா$^{3}$ஹ்யனு**
**ப$^{3}$கெ$^{3}$வ பரக$^{3}$தி மேல்மெ சிஷ்யகெ$^{3}$**
**ஸுக$^{3}$ம$^{3}$தொ$^{3}$ளு தா லப்$^{4}$யனாகு$^{3}$வ ப$^{1}$க்வஸமயக்கெ ||26**

ஹகரணத ஈ ஜகதி - ஏமாற்றுதல் நிறைந்த இந்த உலகில்; ஸ்வார்த்தரு - தன் சொந்த லாபத்திற்காக; மனதொளு - தங்கள் மனதில்; பாஹ்யகுருவெனிஸி - தாமே இந்த உலகின் குரு என்று நினைத்துக்

கொண்டு; பகெபகெய - பல்வேறு விதமான; வாக்சதுரதனதிம் - சுவை மிகுந்த பேச்சுக்களால்; விஷயவனு - விஷயங்களை (உபதேசங்களை); பகெயுவரு - விளக்குவார்கள்; மகுளெ - ஆனால் கேள்; நிஜகுரு - உண்மையான குருவானவர்; விஷய பாஹ்யவனு பகெவ - விஷயத்தினை மிகவும் உண்மையாக விளக்குவார்; சிஷ்யகெ - தன் சிஷ்யனுக்கு; பரகதி மேல்மெ - முக்தியின் சிறப்பினை; பகெவ - விளக்குவார்; பக்வஸமயக்கெ - சிஷ்யரின் தக்க சமயத்தில்; ஸுகமதொளு - சகஜமாக; தா லப்யனாகுவ - தான் தோன்றுவார்;

ஒரு சிஷ்யருக்கு குருவானவர் எப்படி தோன்றுவார் என்பதை இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

சுவை மிகுந்த பேச்சுக்களால், தாமே இந்த உலகின் குரு என்று சொல்லிக் கொண்டு, தங்களின் சொந்த லாபத்திற்காக, எதையாவது உபதேசம் செய்யும் ஏமாற்றுக்காரர்கள் இவ்வுலகில் நிறைந்திருக்கிறார்கள். ஆனால், உண்மையான குருவானவர், யதார்த்த ஞானத்தை விளக்குபவராக இருப்பார். முக்தியின் சிறப்பினை சிஷ்யருக்கு எடுத்துச் சொல்வார். சிஷ்யனின் பக்வ காலத்தில் தான் சரியாகத் தோன்றுவார்.

ஸ்ரீனிவாஸ நாயகர், ஸ்ரீவ்யாஸராயரை, அவர் பக்குவம் அடைந்தபிறகே வந்தடைந்தார். முதன்முதலில் குரு சிஷ்யர்கள் இருவரும் சந்தித்துக் கொண்டபோது, ஸ்ரீவ்யாஸராயர் கேட்டது - 'ஏன் இவ்வளவு தாமதம் இங்கு வருவதற்கு?'. ஆனால், அந்த சந்திப்பு நிகழ்வதற்கு சிஷ்யருக்கு, தக்க காலம் வரவேண்டியிருந்தது என்பதை அறிகிறோம்.

உண்மையான குருவானவர், சிஷ்யனுக்கு யதார்த்த ஞானத்தை புரியவைத்து, முக்தியின் சிறப்பினை விளக்குவதாக இருக்கிறார். ஆனால், தற்காலத்தில் பல குருகள், வெறும் நகைச்சுவைப் பேச்சிலும், தேவையில்லாத கதைகளைச் சொல்லியும், பலரையும் ஏமாற்றி வருவதை நாமே கண்கூடாகப் பார்க்கிறோம். இதையே ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர் இங்கு சிறப்பாகச் சொல்லி, குருவின் தகுதியை நமக்குப் புரிய வைக்கிறார்.

கரதலி ஜபமணி பாயலி மந்த்ரவு
அரிவெ முஸுகெ மோரெகெ ஹாகி
பர ஸதியர குண மனதலி ஸ்மரிஸுத
பரம வைராக்யஷாலி எந்தெனிஸி (உதர வைராக்யவிது)

என்று ஸ்ரீபுரந்தரதாஸர், தற்காலத்தில் இருக்கும் பல ஏமாற்று குருகளைப் பற்றி, அவர்களின் கபட நாடகங்களைப் பற்றி அன்றே பாடி வைத்திருக்கிறார். கையில் ஜபமணி, வாயில் ஏதோவொரு மந்திரம், தலையை மூடிக்கொண்டு ஜபம் செய்வது போல இருப்பது - ஆனால், மனதில் பிற விஷயங்களைப் பற்றியே சிந்தித்திருப்பது; வெளியே மட்டும், தான் பரம வைராக்கியசாலி என்று சொல்லிக் கொள்வது - என்று இத்தகையவர்களின் வேடத்தை விளக்கியிருக்கிறார்.

ஒரு நல்ல / தக்க குருகளின் கருணை கிடைப்பது எவ்வளவு கடினம் என்பதைப் பற்றியும் இவ்வாறு கூறியிருக்கிறார்.

குருகருணவாகோது பரம துர்லபவய்யா
பரிபரி வ்ரதகளாசரிஸி பலவேனு
குருகருண ஒந்தல்லதெ கதி பேரெயுண்டே
ஷரீரத புத்ர மித்ர களத்ர பாந்தவரு நெரெஸலிஸுவரே
ஸத்கதிகெ ஸாதனவா
நிருததி குரு பாதவ நிஜவாகி மனதல்லி
அரிது பஜிஸலு அகிள ஸம்பதவித்து
பரிபாலிஸுவ நம்ம புரந்தரவிட்டலா

குரு கருணையைப் பெறுவது மிகவும் கடினம். ஆனால், அப்படி அவரது பாதங்களை மனதில் நிறுத்தி, பஜித்து, பூஜை செய்து, அவரது கருணையைப் பெற்றால், முக்தியையே கொடுத்து அருள்கிறான் நம் புரந்தர விட்டலன் என்று பாடியிருக்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர்.

**ஶ்ரத்தெ3யிந்த3லி ஶிலெய நம்பு3த**
**ஶூத்3த4 மனதி3ம் பூஜெகெ3ய்தொ3டெ3**
**ப4த்ரதி3ந்த3லி பூர்ணவாஹுது3 மனத3 ப3யகெக3ளு |**
**ஶூத்3த4வித்4யெயனீவ கு3ருக3ள**
**பு3த்தி4யிந்த3லி திளிது3 ஸேவிஸெ**
**பத்மனாப4ன ப்ரீதிபடெ3வுத3கேனு ஸம்ஷயவு ||27**

ஷ்ரத்தெயிந்தலி - மிகவும் பக்தி மரியாதையுடன்; ஷிலெய நம்புத - சாலிகிராம, சிலைகளை நம்பியவாறு; ஷுத்த மனதிம்; சுத்தமான மனதினால்; பூஜெகெய்தொடெ - பூஜை செய்தால்; மனத பயகெகளு - மனதின் விருப்பங்கள்; பத்ரதிந்தலி - முழுமையாக; பூர்ணவாஹுது - நிறைவேறும்; ஷுத்த வித்யெயனீவ - சரியான கல்வியை கற்றுக் கொடுக்கும்; குருகள - குருகளை; புத்தியிந்தலி திளிது - தன் புத்தியினால் அறிந்து; ஸேவெஸெ - வணங்கினால்; பத்மனாபன - ஸ்ரீஹரியின்; ப்ரீதிபடெவுதகேனு ஸம்ஷயவு - அன்பினைப் பெறுவதில் என்ன சந்தேகம்?.

பூஜை மற்றும் குரு ஸேவையின் பலன்களை இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

மிகவும் பக்தி மரியாதையுடன், சாலிகிராம / ஷிலா மூர்த்திகளை சுத்தமான மனதினால் பூஜை செய்தால், மனதின் விருப்பங்கள் முழுமையாக நிறைவேறும். அத்துடன், உத்தமமான கல்வியை கற்றுக் கொடுக்கும் குருகளை தன் புத்தியினால் அறிந்து, வணங்குபவன், ஸ்ரீஹரியின் அன்பினைப் பெறுகிறான் என்பதில் என்ன சந்தேகம்?

ப்ரதிமெ ஷாலிகிராம கோப்யாகத அதிதி -என பகவந்தனின் விபூதி ரூபங்கள் இருக்கும் இடங்களை பட்டியலிடும் ஸ்ரீஜகன்னாததாஸர், அதில் 'ப்ரதிமை, 'சாலிகிராமம்' ஆகியவையும் இருப்பதால், தினமும் சுத்தமான மனதினால், பக்தி மரியாதையுடன், சரியான அனுசந்தானத்துடன் சாலிகிராம பூஜை செய்தால், அவனின் விருப்பங்கள் முழுமையாக நிறைவேறுகின்றன.

சாலிகிராம ஷிலா ஸ்பர்ஷம் யே குர்வந்தி தினே தினே |
வாஞ்சந்தி கர ஸ்பர்ஷம் தேஷாம் தேவா: ஸவா ஸவா: ||
(கிருஷ்ணாம்ருத மஹார்ணவ #183)

தினமும் சாலிகிராமத்தை தொடுபவனின் கைகளை, தேவதைகளே தொடுவதற்கு விரும்புகிறார்கள் என்று ஸ்ரீமதாசார்யர் கூறியிருக்கி றார் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

முகுந்த பக்த்யை குருபக்தி ஜாயை - என்று மத்வவிஜயம் சொல்கிறது. குருபக்தி மூலமாகவே, ஹரிபக்தியை அடைய முடியும் என்கிறார் நாராயண பண்டிதாசார்யர்.

ஹரிகருணெ எம்பந்த கீலிகை தொரகிது குருகருணெ எம்பந்த ஷக்தியிந்த - என்று ஸ்ரீவிஜயதாஸர் தனது கிருதியில் சொல்கிறார்.

இது போன்ற உதாரணங்களால், சாலிகிராம பூஜையின் சிறப்பினையும், குரு ஸேவையின் சிறப்பினையும் விளக்கிவிட்டு, அடுத்த பத்யத்தில் இதையே மேலும் சொல்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**கு3ருவினாக்3ஞெயெ மூலமந்த்ரவு**
**கு3ருவே த்4யானகெ மூலமூர்த்தியு**
**வர ஸுபூஜெகெ3 மூலவெனிபவு கு3ருவினங்க்4ரிக3ளு |**
**கு3ருகடாக்ஷவெ மோக்ஷமூலவு**
**கு3ருவெ ஸர்வகு1 மூல காரண**
**ஹர ஸுராத்3யரிக3வஷ கு3ருவின மஹிமெ ப3ண்ணிபுது3 ||28**

குருவினாக்ஞெயெ மூலமந்த்ரவு - குருவின் ஆணையே மூல மந்திரம்; குருவே த்யானகெ மூலமூர்த்தியு - தியானத்திற்கு குருவே மூலமூர்த்தி ஆவார்; வர ஸுபூஜெகெ - சிறந்த பூஜைக்கு; மூலவெனிபவு - தக்கது எனப்படுபவை; குருவினங்ரிகளு - குருவின் பாதங்களே ஆகும்; குருகடாக்ஷவெ - குருவின் அருளே; மோக் ஷமூலவு - மோட்சத்திற்கான வழியாகும்; குருவெ ஸர்வகு மூல காரண - குருவே அனைத்திற்கும் மூல காரணம் ஆவார்; ஹர ஸுராத்யர்கெ - ஹரன் முதலான அனைத்து தேவதைகளுக்கும்கூட; குருவின மஹிமெ - குருவின் மகிமைகளை; பண்ணிபுது - வர்ணிப்பது என்பது; அவஷ - முடியாத செயலாக இருக்கிறது.

குரு ஸேவையையும், அதனால் கிடைக்கும் பலன்களையும் இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

குருவின் ஆணையே சிஷ்யருக்கு மூலமந்திரம். தியானத்திற்கு குருவே மூலமூர்த்தி ஆவார். குருவின் பாதங்களே சிறந்த பூஜைக்கு ஏற்றதாகும். குருவின் அருளே மோட்சத்திற்கான வழியாகும். குருவே

அனைத்திற்கும் மூல காரணம் ஆவார். ருத்ரரே முதலான அனைத்து தேவதைகளுக்கும்கூட, குருவின் மகிமைகளை வர்ணிப்பது என்பது முடியாத செயலாக இருக்கிறது.

குருவைப் பற்றியும், அவருடைய சிறப்புகளைப் பற்றியும் ஹரிதாஸர்களின் பல கிருதிகளை முந்தைய பத்யங்களில் பார்த்திருக்கிறோம்.

**ஹரிய அங்கிதவன்னு த4ரிஸுத**
**கு3ருவினிந்து3பதே3ஶ படெ3தவ**
**மருதமததொ3ளு த4ன்யத1மனா மனுஜனெந்தெ3னுத**
**வர புரந்த3ர தா3ஸவர்யரு**
**கருணத3லி தோரித3ரு த4ரெயொளு**
**கு3ருயதி ஸ்ரீ வ்யாஸராயர பரம க்ருபெபடெ3து3 ||29**

ஹரிய அங்கிதவன்னு தரிஸுத - ஸ்ரீஹரியின் அங்கிதத்தைப் பெற்று; குருவினிந்துபதேஷ படெதவ - குருவிடமிருந்து உபதேசம் பெற்றவன்; மருதமததொளு - ஸ்ரீமன் மத்வாசார்யரின் த்வைத மதத்தில்; தன்ய - தன்யன்; தமனா மனுஜனெந்தெனுத - அருள் பெற்ற மனிதன் என்று சொல்லியவாறு; வர புரந்தர தாஸவர்யரு - வர ஸ்ரீபுரந்தர தாஸர்; குருயதி ஸ்ரீவ்யாஸராயர - குருவான யதிகளான ஸ்ரீவ்யாஸராயரின்; பரம க்ருபெபடெது - பரம அருளைப் பெற்று; தரெயொளு - இந்த உலகிற்கு; கருணதலி தோரிதரு - கருணையுடன் நிரூபித்தார்;

ஸ்ரீபுரந்தரதாஸர் தனது அங்கிதத்தைப் பெற்ற விதத்தினை இங்கு விவரிக்கிறார் ஸ்ரீதாஸர்.

குருவான யதி ஸ்ரீவ்யாஸராயரின் பரம கிருபையைப் பெற்று, ஸ்ரீபுரந்தர தாஸர், ‘புரந்தரவிட்டலா’ என்னும் அங்கிதத்தை தரித்தவாறு, குருவிடமிருந்து உபதேசம் பெற்றவர், ஸ்ரீமன் மத்வாசார்யரின் த்வைத மதத்தில் மிகவும் தன்யன் எனப்படுகிறான் என்பதை இந்த உலகிற்கு நிரூபித்தார்.

அங்கிதவில்லத3 தே3ஹ நிஷித்த4
அங்கிதவில்லத3 காவ்ய ஸோபிசது
அங்கிதவில்லதெ3 இரபாரதெ3ந்து ச

க்ராங்கிதவனு மாடி3 என்னங்க3க்கெ1
பங்கஜனாப ஸ்ரீபுரந்தரவிட்டலன
அங்கிதவனகித்த3 குரு வ்யாசமுனிராயா

என்று குரு வியாசராஜரால் கொடுக்கப்பட்ட தப்த முத்ராவை தன் தேகத்தில் தரித்து, புரந்தரவிட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்று, தாஸதீக்ஷையைப் பெற்றதாக தெரிவிக்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர்.

வியாசராயர சரண கமல த3ர்ஷனவென
கே3ஸு ஜன்மத3 சுக்ருத1 ப4லதி தொ3ரகிது, என்ன
சாஸிர குலகோடி பாவனவாயிது
ஸ்ரீஷன ப4ஜிசுவத3க1தி3காரி நானாதே3
தோ3ஷ ரஹிதனாத3 புரந்தரவிட்டலன
தாஸர கருணவு என்ன மேலே இரலாகி3

தன் பிறவிப்பயனால், இந்த பிறவியில் வியாசராஜரின் தரிசனத்தால், தமது மட்டுமல்ல தம் ஆயிரக்கணக்கான குலமும் (பரம்பரை) பவித்ரமடைந்தது என்கிறார். குரு உபதேசத்தினால் தாம் ஸ்ரீஹரியை பஜிப்பதற்கு தகுதி பெற்றேன் என்றும் கூறுகிறார். மேற்கண்ட இந்த இரு பத்யங்களினால் அங்கிதத்தின் மகத்துவம் புரிகிறது. அங்கிதம் இல்லாத தேகம் வீண். அங்கிதம் இல்லாத காவியம் புகழடையாது என்று தெரிவித்திருக்கிறார்.

**ஸிரி புரந்த3ர விட்டலாங்கித**
**கு3ருவரர த3யதி3ந்த3 தொ3ரகலு**
**ஹிரிய வைஷ்ணவதீ3க்ஷெ ஸ்ரீஹரிதா3ஸ்ய பா4க்யக்கெ**
**பரமபாத்ரனமாடி3 பொரெத3தி**
**கு3ருகருண கொண்டா3டி3 ஹிக்3கு3த**
**ஹருஷதி3ம் மன உப்3பி3 ஹரியனு பாடி3 பொக3ளித3ரு ||30**

குருவரர தயதிந்த - தமது குருவின் அருளால்; ஸிரி புரந்தர விட்டலாங்கித - ஸ்ரீபுரந்தர விட்டலா என்னும் அங்கிதம்; தொரகலு - கிடைக்க; ஹிரிய - மிகச்சிறந்த; வைஷ்ணவதீக்ஷெ - வைஷ்ணவ தீக்ஷை; ஸ்ரீஹரிதாஸ்ய - ஸ்ரீஹரிதாஸன் ஆகும்; பாக்யக்கெ - பாக்கியத்திற்கு; பரமபாத்ரனமாடி - மிகவும் ஏற்றவன் என்று நினைத்து; பொரெத - கொடுத்த; அதி குருகருண - குருகளின் கருணையை;

கொண்டாடி ஹிக்குத - மிகவும் மகிழ்ந்தவாறு கொண்டாடி; ஹருஷதிம் - மகிழ்ச்சியுடன்; மன உப்பி - மிகவும் பெருமையுடன்; ஹரியனு பாடி பொகளிதரு - ஸ்ரீஹரியை பாடிப் புகழ்ந்தார்.

குருவின் அருளால் அங்கிதத்தைப் பெற்ற ஸ்ரீபுரந்தரதாஸர், தனது மகிழ்ச்சியை தெரிவிப்பதாக இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீவ்யாஸராயரின் அருளால், ஸ்ரீபுரந்தர விட்டலா என்னும் அங்கிதம் கிடைத்தது. வைஷ்ணவ / தாஸ தீக்ஷை அளித்து தன்னை ஹரி தாஸன் ஆக்கிய குருகளின் கருணையைக் கொண்டாடி, மிகவும் மகிழ்ந்தவாறு, மிகவும் பெருமையுடன் ஸ்ரீஹரியை பாடிப் புகழ்ந்தார்.

நவகோடி நாராயணனாக இருந்தவர், ஒரு நொடியில் அனைத்தையும் துறந்து, ஸ்ரீவ்யாஸராயரை அடைந்து, ஹரிதாஸ தீக்ஷை மற்றும் அங்கிதத்தைப் பெற்று, ஸ்ரீஹரியின் ஸர்வோத்தமத்வத்தை / பக்தி மார்க்கத்தை பரப்புவதில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். அங்கிதம் பெற்ற மகிழ்ச்சியில், ஸ்ரீபுரந்தரதாஸர் பாடியது:

ஆதத்தெல்ல ஒலிதே ஆயித்து
நம்ம ஸ்ரீபதிய பாதத ஸேவெகெ ஸாதன ஸம்பத்தாயித்து ||

ஸ்ரீஹரி பாத ஸேவையை செய்வதற்கு சரியான வாய்ப்பு கிடைத்தது. இதுவரை நடந்தது அனைத்தும் நன்மைக்கே. நன்றாகவே நடந்திருக் கிறது என்றார். தண்டிகெ பெத்த, கோபாள புட்டி, துளஸி மாலை ஆகிய வற்றை ஏந்துவதற்கு / தரிப்பதற்கு இதுவரை நான் வெட்கப்பட்டேன். கர்வம் கொண்டிருந்தேன். ஆனால், இன்று அவற்றிற்கான நேரம் வந்தி ருக்கிறது. இப்படியாக ஹரிஸேவை செய்வதற்காக என்னை மாற்றிய என் மனைவியின் குலம் நன்றாக செழித்து வளரட்டும் - என்று பாடினார்.

**பா4ஷ்ய டீகாகர்தராதி3 அ**
**ஸேஷ யதிக3ண மத்4வஷாஸ்த்ரா**
**தே3ஷ பஸரிஸலேனு மாடி3த3ரெந்து3 ப1ரிகி1ஸலு |**
**வ்யாஸராயர தோ1ரெ புரந்த3ர**
**தா3ஸரனு முந்தூ3டி3 யதிவர**
**தோ1ஷதீர்த்த2ர மத1வனுத்3த4ரிஸித3ரு ஜக3தொ3ளகெ3 ||31**

பாஷ்ய டீகாகர்தராதி - டீகாராயரே முதலான; அஸேஷ யதிகண - பற்பல யதிவர்யர்கள்; மத்வஷாஸ்த்ராதேஷ - மத்வ சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களை; பஸரிஸலேனு மாடிதரெந்து – மக்களிடையே பரவச் செய்வதற்கு என்ன செய்தார்கள் என்று; பரிகிஸலு - பார்ப்பதற்கு / ஆராய்வதற்கு; வியாஸராயர தோரெ – வியாஸராயரின் சிஷ்யரான; புரந்தரதாஸரனு முந்தூடி – புரந்தர தாஸரை முன்வைத்து; ஜகதொளகெ - இந்த உலகில்; யதிவர தோஷ தீர்த்தர - யதிவரரான மத்வாசார்யரின்; மதவனுத்தரிஸிதரு – மதத் தினை மேலும் பரவச் செய்தார்.

ஸ்ரீவ்யாஸராயர், ஸ்ரீபுரந்தரதாஸரை முன்வைத்து, ஹரிதாஸ ஸாகித்யத்தின் மூலம் மத்வ சித்தாந்தக் கருத்தினை பரவச் செய்தார் என்று இந்த பத்யத்தில் கூறுகிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீடீகாராயரே முதலான பற்பல யதிவர்கள், மத்வ சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களை மக்களிடையே பரவச் செய்வதற்கு (அவர்கள் டீகை, பாஷ்யம், டிப்பணிகள் மூலமாக) என்ன செய்தார்களோ, அவற்றை, ஹரிதாஸ ஸாகித்யத்தின் மூலமாக, மக்களிடையே மத்வ ஸித்தாந்தக் கருத்துக்களை / பக்தி மார்க்கத்தை பரவச் செய்வதற்கு, ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீபுரந்தரதாஸரை முன்வைத்து, இந்த செயல்களை செய்தார்.

சம்ஸ்கிருதத்தில் இருந்த தத்வ ஸித்தாந்த ரகசியங்களை / விஷயங்களை, பத பத்ய ஸுளாதிகள் மூலமாக பாமர மக்களிடையே பரவச் செய்யலாம் என்று ஸ்ரீவ்யாஸராஜர் தீர்மானித்தார். அதையே அவர் ஸ்ரீபுரந்தரதாஸரை முன்வைத்து துவக்கி வைத்தார் என்பது இந்த பத்யத்தின் கருத்து.

வ்யாஸராயர திவ்ய பாத கமலவ ஸேவிஸுவ பகுதரிகெ - என்று துவங்கும் தேவரநாமாவில் ஸ்ரீகோபாலதாஸர் இந்த விஷயத்தை விளக்குகிறார்.

கு3ரு புரந்தரதாஸரு முந்தாத3ந்த4
பரிபரிய ஶிஷ்யருக3ள |
பெ3ரது3 ஸகல ஶாஸ்த்ர ஒரெது3 அவருக3ளன்னு
பரம ஶூத்த3ர மாடி3 பரலோக தோரிஸித3 ||5

அனைத்து சாஸ்திர ரகசியங்களையும், குருவான புரந்தரதாஸரே முதலான பல ஹரிதாஸர்களுக்கு விளக்கி, அவர்கள் மூலமாக அந்த தத்வங்களை மக்களிடையே பரவச் செய்தார், ஸ்ரீவ்யாஸராஜர்.

**ராஷிதத்வத$^{3}$ கோஷவெனிபுது$^{3}$**
**வ்யாஸராயரு மான்ய மாடி$^{3}$த$^{3}$**
**தா$^{3}$ஸருபனிஷதெ$^{3}$ம்ப$^{3}$ க்$^{2}$யாதிய பத$^{3}$ஸுளாதி$^{3}$க$^{3}$ளு |**
**வ்யாஸசிஷ்யர பா$^{4}$ஷ்ய ஸம்மத**
**ஸ்ரீஷனுக்$^{3}$ரஹ மோக்ஷ ஸாத$^{4}$ன**
**அதிஸுவ அதி$^{4}$காரிவர்க்க$^{3}$கெ மார்க்க$^{3}$தா$^{3}$யகவு ||32**

வ்யாஸராயரு - ஸ்ரீவ்யாஸராயர்; மான்ய மாடித - ஆசிர்வாதம் செய்து அருளிய; பதஸுளாதிகளு - தாஸரின் பத, பத்யங்கள்; தாஸ ருபனிஷதெம்ப க்யாதிய - புரந்தர உபநிஷத் என்னும் பெயரைப் பெற்றது. ராஷிதத்வத - தத்வங்களின் கூட்டத்தின்; கோஷவெனிபுது - அகராதி எனப்படுகிறது; வ்யாஸசிஷ்யர பாஷ்ய ஸம்மத – ஸ்ரீவேத வ்யாஸரின் சிஷ்யரான ஸ்ரீமத்வாசார்யரின் பாஷ்யத்திற்கு சம்மதமானது; ஸ்ரீஷனுக்ரஹ - ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றுத் தரக்கூடியது; மோக்ஷ ஸாதன - மோட்சத்தைப் பெற்றுத் தரக்கூடியது; அதிஸுவ அதிகாரி வர்க்கெ - இதனை விரும்பும் தக்க மக்களுக்கு; மார்க்கதாயகவு - மோட்சத்திற்கான வழியை காட்டக்கூடியது (இந்த புரந்தரதாஸரின் பத பத்யங்கள்).

ஸ்ரீபுரந்தரதாஸரின் கிருதிகளின் சிறப்பினை இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீபுரந்தரதாஸரின் கிருதிகளை ஸ்ரீவ்யாஸராஜர் ஆசிர்வாதம் செய்து, அருளி, அவற்றை ‘புரந்தர உபநிஷத்’ என்று பெயர் சூட்டி கௌர வித்தார். அதனை தத்வங்களின் கோஷ (அகராதி) என்று அழைத்தார். இவை ஸ்ரீவேதவ்யாஸரின் சிஷ்யரான ஸ்ரீமத்வாசார்யரின் பாஷ்யத்திற்கு சம்மதமானது; இவை ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றுத் தரக்கூடியது, மோட்சத்தை தரக்கூடியது என்று புகழ்ந்து ஆசிர்வதித்தார்.

நீதியெல்லவனரிது நிகம வேத்யன நித்ய
மாதுமாதிகு பிடதெ வர்ணிஸுதலி

கீத நர்த்தனதிந்த ஸ்ரீகிருஷ்ணன பூஜிஸுவ
பூதாத்ம புரந்தர தாஸரிவரய்யா || (தாஸரெந்தரெ புரந்தர தாஸரய்யா)

ஸ்ரீமத்வாசார்யரின் சித்தாந்த தத்வ ரகசியங்களை நன்றாக அறிந்து, அவற்றினை தன்னுடைய பத, பத்யங்கள் மூலமாக வெளிக் கொண்டு வருகிறார். ஹரி ஸர்வோத்தமத்வத்தினை நிறுவிய ஸ்ரீமதாசார்யரின் கருத்தினையே இவரும் முன்மொழிவதால், இவரது கிருதிகள், தத்வங்களின் அகராதி எனப்படுகிறது. ஹரிதாஸ ஸாகித்யமானது, ஸ்ரீஹரியின் அருளை / மோட்சத்தையே தரக்கூடியது என்று புகழ்ந்து ஆசிர்வதித்தார்.

ஸ்ரீவ்யாஸராஜர், ஸ்ரீபுரந்தரதாஸரின் கிருதிகளை ஆசார்ய தத்வங்களின் கோஷ என்று கூறியதைப் போலவே, பின்னர், ஸ்ரீஸ்ரீத விட்டலர், ஸ்ரீஜகன்னாத தாஸரின் ஹரிகதாம்ருதஸாரத்தை, ஸ்ரீவாதிராஜரின் கோஷ என்று, அவருடைய பல-ஸ்ருதியில் கூறினார்.

கேஷவன குணமணிகளனு ப்ரா
ணேஷ கர்ப்பிஸி வாதிராஜர
கோஷகொப்புவ ஹரிகதாம்ருதசார பேளிதரு ||13

**பா3த3ராயணராதி3 வசனகெ1**
**மோத3தீர்த்த2ர பா4ஷ்ய பங்க்திகெ3**
**பா3தெ4 லேஶவு பா3ரத3ந்த3தி3 தா3ஸஸாஹித்ய |**
**போ3த4கப்ரத3வாகி3 ரசிஸிரெ**
**ஓதி3 மொத3லிகெ3 பத3 ஸுளாதி3 ஸு**
**தா4தி3 கி3ரந்த ஸமன்வயிஸி பண்டி3தரு மோதி3புது3 ||33**

பாதராயணர - ஸ்ரீவேதவ்யாஸரின்; ஆதி வசனகெ - பிரம்ம ஸூத்ரங்களுக்கு; மோத தீர்த்தர பாஷ்ய பங்க்திகெ - அதற்கான ஸ்ரீமத்வரின் பாஷ்ய கிரந்தங்களுக்கு; பாதெ லேஷவு - எவ்வித பிரச்னைகளோ / குறைகளோ; பாரதந்ததி - வராதவாறு; தாஸ ஸாஹித்ய - ஹரிதாஸ ஸாகித்யமானது; போதகப்ரதவாகி - இவற்றை விளக்குவதாக; ரசிஸிரெ - இயற்றியிருக்கிறார். இதனை; பத ஸுளாதி - இந்த பத ஸுளாதிகளை; மொதலிகெ ஓதி - முதலில் படித்து அறிந்து; ஸுதாதி கிரந்த ஸமன்வயிஸி - ஸுதாதி கிரந்தங்களின்

உள்ள விஷயங்களை இதனுடன் பொருத்திப் பார்த்து; பண்டிதரு மோதிபுது - பண்டிதர்கள் இதனை ஏற்றுக் கொள்ளட்டும்.

ஹரிதாஸ ஸாஹித்ய கிருதிகளின் சிறப்பினை, ஸ்ரீபுரந்தரதாஸரின் பத பத்யங்களின் மேன்மையினை இந்த பத்யத்தில் போற்றியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீவேதவ்யாஸரின் பிரம்ம ஸூத்ரங்களுக்கு , அதற்கான ஸ்ரீமத்வரின் பாஷ்ய கிரந்தங்களுக்கு, எவ்வித பிரச்னைகளோ / குறைகளோ / முரண்களோ வராதவாறு, ஸ்ரீபுரந்தரதாஸர் தனது பத, பத்ய, ஸுளாதிகளை இயற்றியிருக்கிறார். கற்றறிந்த பண்டிதர்கள், முதலில் இவற்றை படித்து, இவற்றை ஸுதாதி கிரந்தங்களில் உள்ள விஷயங்களுடன் பொருத்திப் பார்த்து, பின் ஏற்றுக் கொள்ளட்டும்.

ருகுமணிபதிய ஸ்ரீபாதாரவிந்தகளு
பகுதியிந்தலி மன குஸுமதிந்த அர்ச்சிஸுவ
பகுதராயன நோடி தா க்ஷணகெ படதெ நா ||
(கங்களிகெ ஹப்பவாயிதய்யா
மங்களாத்ம புரந்தரவிட்டலன தாஸர கண்டு)

என்று ஸ்ரீவ்யாஸராஜர் ஸ்ரீபுரந்தரதாஸரை புகழ்ந்து பாடியிருக்கிறார்.

ஸ்ரீபுரந்தர குருவர்ய என்று தொடங்கும் தேவர நாமாவில், ஸ்ரீகார்பர நரஹரிதாஸர், ஸ்ரீபுரந்தரதாஸரின் மகிமைகளை இவ்வாறு விளக்கியிருக்கிறார்.

காஶ்யாதி3 க்ஷேத்ர ஸஞ்சரிஸி பத3
ராஶி ஸுளாதி3க3ள ரசிஸி ஸந்
தோஷ தீர்த்த2ர மத1 ப3ளிஸி கு3ரு
வ்யாஸரிந்து3 பதே3ஶ க்ரஹிஸி ஜக3தி3
பூ4ஸுர பாலக ஸ்ரீஶ கார்பர நர
கேஸரிக3தி ப்ரிய தா3ஸரெந்தெ3னிஸித3 ||3

குரு வ்யாஸராஜரிடமிருந்து உபதேசம் பெற்று, ஸ்ரீமதானந்த தீர்த்தரின் மத தத்வங்களை பரப்புவதற்காக, காசி முதலான க்ஷேத்திரங்களில் சஞ்சரித்து, பத பத்ய ஸுளாதிகளை இயற்றி, ஸ்ரீஷ கார்பர நரஹரியின் தாஸரான புரந்தரதாஸரே -- என்று புகழ்ந்திருக்கிறார்.

**வேத3வாக்ய விரோத4வல்லத3**
**ஆதி3யிந்தி3ஹ ப்4ருத்யபா4வவு**
**ஸாத3னகெ மொத3லெந்து3 திளியுவ மந்த3ஜனததிகெ3 |**
**ஸ்வாது3 வசனதி3 போ3தி4ஸுத ஸ**
**ன்மோத3தி3ந்த3லி ஶுத்3த4 ஸத்வத3**
**கா3த4 தா3ஸத்வத3 ஸுதீ3க்ஷெய ஜக3தி3 நிலிஸித3ரு ||34**

வேதவாக்ய விரோதவல்லத - வேத வாக்கியங்களுக்கு சம்மதமான; ஆதியிந்திஹ ப்ருத்யபாவவு - ஸ்ரீஹரியிடம் எப்போதும் இருக்க வேண்டிய தாஸத்வமே; ஸாதனகெ மொதலெந்து - ஸாதனைக்கு மிகவும் அவசியம் என்று; மந்தஜனததிகெ திளியுவ - மந்தபுத்திகளைக் கொண்ட மக்களுக்கு விளக்கும்; ஸ்வாது வசனதி - மிகவும் இனிமையான வாக்குகளில்; போதிஸுத - விளக்கியவாறு; ஸன்மோததிந்தலி - மிகவும் மகிழ்ச்சியுடன்; ஷுத்த ஸத்வத காத - சுத்த ஸத்வமான முறையிலான; தாஸத்வத ஸுதீக்ஷெய - தாஸத்வத்தின் தீக்ஷையை; ஜகதி நிலிஸிதரு - உலகில் பரப்பி நிறுவினார்.

ஸ்ரீபுரந்தரதாஸரின் கிருதிகளின் சிறப்பினை மேலும் இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

வேத வாக்கியங்களுக்கு சம்மதமான, ஸ்ரீஹரியிடம் எப்போதும் இருக்க வேண்டிய தாஸத்வமே ஸாதனைக்கு மிகவும் அவசியம் என்று, மந்தபுத்திகளைக் கொண்ட மக்களுக்கு விளக்குவதற்காக, மிகவும் இனிமையான வாக்குகளில், மிகவும் மகிழ்ச்சியுடன் சுத்த ஸத்வமான முறையில், தாஸத்வத்தின் தீக்ஷையை உலகில் பரப்பி நிறுவினார் - ஸ்ரீபுரந்தரதாஸர்.

ஹரிதாஸ ஸாகித்யத்தை பரப்பியவர்களில் முதன்மையானவரான ஸ்ரீபுரந்தரதாஸரை, பின்னர் வந்த ஹரிதாஸர்கள் பலரும் போற்றிப் பாடியிருக்கின்றனர்.

ஸ்ரீபுரந்தரதாஸராய நிம்ம -- என்னும் கிருதியில் ஸ்ரீவெங்கட விட்டல தாஸர் இவ்வாறு பாடியிருக்கிறார்.

தத்வ ஶோத4னமாடி3 தத்வேஶரன திளிது3

தத்தத்காலகெ மாள்ப கர்மக$^{3}$ளனா
உத்தமஶ்லோக புருஷோத்தமனிக$^{3}$ர்ப்பிஸி
முக்தமார்க்க$^{3}$வ பிடி$^{3}$த$^{3}$ அத்யந்த மஹா மஹிம ||5

ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்த தத்வங்களின் ரகசியங்களை நன்கு அறிந்து, அவற்றை மக்களிடையே பரப்பியவரான ஸ்ரீபுரந்தரதாஸரே, உங்களின் மகிமை அபாரமானது என்று போற்றியிருக்கிறார்.

**ஸ்ரீஷ ஸ்ரீஹரி சித்த ஸம்மத**
**ஆ ஸமீரன கரதி$^{3}$ ஸ்தாபித**
**நாஷவில்லத$^{3}$ க்ரமதி$^{3}$ ஆர்யரு நடெ$^{3}$ஸுதை$^{1}$த$^{1}$ந்த$^{3}$ |**
**க்லேஷ களெயுத தா$^{3}$ஸ பா$^{4}$வவ**
**வ்யாஸரிந்த$^{3}$லி தா$^{3}$ஸவர்யரு**
**தே$^{3}$ஷதொ$^{3}$ளு பஸரிஸித$^{3}$ரல்லதெ$^{3}$ பொஸது$^{1}$ ஒந்தி$^{3}$ல்ல ||35**

ஸ்ரீஷ ஸ்ரீஹரி - ஸ்ரீஹரியின்; சித்த ஸம்மத - சம்மதத்தைப் பெற்ற; ஆ ஸமீரன கரதி ஸ்தாபித - வாயுதேவரின் அவதாரரான ஸ்ரீமத்வர் மூலமாக நிறுவப்பட்ட த்வைத மதத்தை; நாஷவில்லத க்ரமதி - அழிந்து விடாமல்; ஆர்யரு நடெஸுதைதந்த - நமது குருகள் பின்பற்றி வந்தனர். இத்தகைய ஸித்தாந்தத்தை; க்லேஷ களெயுத - அனைத்து துன்பங்களையும் போக்கக்கூடிய; தாஸ பாவவ - ஹரிதாஸ சாகித்யத்தை; வ்யாஸரிந்தலி - வ்யாஸராஜரிடமிருந்து உபதேசம் பெற்று; தாஸவர்யரு - ஸ்ரீபுரந்தரதாஸர்; தேஷதொளு பஸரிஸிதரு - இந்த தேசத்தில் பரப்பினார்; அல்லதெ - தவிர; பொஸது ஒந்தில்ல - புதியதாக அவர் எதையும் பரப்பவில்லை.

ஹரிதாஸ ஸாகித்யம் என்று ஸ்ரீபுரந்தரதாஸர் எதை இந்த உலகில் பரப்பினாரோ, அது ஸ்ரீமதாசார்யரால் நிறுவப்பட்ட ஸித்தாந்தத்தின் தத்வங்களே ஆகும். அதையே ஸ்ரீவ்யாஸராஜரிடமிருந்து உபதேசம் பெற்று, பத பத்யங்களாக நமக்குக் கொடுத்தார் என்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீஹரியின் சம்மதத்தைப் பெற்ற, வாயுதேவரின் அவதாரரான ஸ்ரீமத்வர் மூலமாக நிறுவப்பட்ட த்வைத மதத்தை, அழிந்து விடாமல் நமது குருகள் பின்பற்றி வந்தனர். இத்தகைய ஸித்தாந்தத்தை, அனைத்து துன்பங்களையும் போக்கக்கூடிய ஹரிதாஸ ஸாகித்யத்தை வ்யாஸராஜரிடமிருந்து உபதேசம் பெற்று, ஸ்ரீபுரந்தர

தாஸர் இந்த தேசத்தில் பரப்பினார். தவிர, அவர் புதியதாக எதையும் பரப்பவில்லை.

வந்திபெ புரந்தரதாஸர பாத என்னும் தேவரநாமாவில், ஸ்ரீ ஸ்ரீஷ கோபாலதாஸர் இவ்வாறு பாடியிருக்கிறார்.

ஒத$^{3}$கி$^{3}$த$^{3}$ ஞானக$^{3}$ளோடி$^{3}$ஸி மத்தெ
ஸத$^{3}$மல ஞானவ பாலிஸி
பது$^{3}$மனாப$^{4}$ன கதெ கேளிஸி | நித்ய
முத$^{3}$தி$^{3}$ பாலிபன த்$^{4}$யானிஸி ||1

தவறான ஞானத்தை ஓட்டி, யதார்த்த ஞானத்தை புகட்டி, பதுபனாபனின் மகிமைகளை நமக்கு உபதேசித்த ஸ்ரீபுரந்தரதாஸரின் பாதங்களை நான் வணங்குகிறேன் - என்று போற்றியிருக்கிறார்.

**தே$^{3}$வ பா$^{4}$ஷெயொளாதி$^{3}$யலி ஸ்ரீ**
**ஸர்வக்$^{3}$ஞர்ஹேளித$^{3}$ தத்வஸாரவ**
**பா$^{4}$வதி$^{3}$ந்த$^{3}$லி க்$^{3}$ரஹிஸி கன்னட$^{3}$ பத்$^{3}$ய பத$^{3}$ ரசிஸி**
**கோவித$^{3}$ரு ஸத்ப$^{4}$க்தி பூர்வக**
**ஸ்ரீவரன நெரெ ந்ருத்ய கா$^{3}$னதி$^{3}$**
**ஸேவிஸுத வைராக்$^{3}$ய த$^{4}$ரிபுதெ$^{3}$ தா$^{3}$ஸபத்$^{3}$த$^{4}$தி$^{1}$யு ||36**

தேவ பாஷெயொளாதியலி - துவக்கத்தில், சம்ஸ்கிருதத்தில்; ஸ்ரீ ஸர்வக்ஞர் ஹேளித - ஸ்ரீமதாசார்யர் விவரித்த; தத்வஸாரவ - தத்வ நிர்ணயங்களின் ஸாரத்தை; பாவதிந்தலி க்ரஹிஸி - உண்மையான அர்த்தத்துடன் அதனை ஏற்றுக்கொண்டு; கன்னட பத்ய பத ரசிஸி - கன்னடத்தில் பத பத்யங்களை இயற்றி; ஸத்பக்தி பூர்வக - பக்தியுடன்; கோவிதரு - கற்றறிந்தவர்கள்; ஸ்ரீவரன - ஸ்ரீஹரியை; நெரெ - முழுமையாக சிந்தித்தவாறு; ந்ருத்ய கானதி - ஆடல், பாடல்களுடன்; ஸேவிஸுத - வணங்கியவாறு; வைராக்ய தரிபுதே - வைராக்கியத்தை தரிப்பதே; தாஸ பத்ததியு - ஹரிதாஸ பத்ததியாகும்.

ஹரிதாஸ பத்ததியின் லட்சணத்தை இங்கு விவரிக்கிறார் ஸ்ரீரமா காந்த விட்டல தாஸர்.

ஸ்ரீமதாசார்யர் தனது தத்வ நிர்ணயங்களின் ஸாரத்தினை துவக்கத்தில் சம்ஸ்கிருதத்தில் கூறினார். யதார்த்த ஞானத்துடன் அதனை ஏற்றுக்

கொண்டு, அதை அப்படியே கன்னடத்தில் பத பத்யங்களாக இயற்றி, கற்றறிந்தவர்கள் பக்தியுடன் ஸ்ரீஹரியை முழுமையாக சிந்தித்தவாறு, ஆடல் பாடல்களுடன் வணங்கியவாறு, வைராக்கியத்தை தரிப்பதே, ஹரிதாஸ பத்ததியாகும்.

ஏளு நாராயண ஏளு லட்சுமி ரமணா
ஏளு ஸ்ரீகிரியொடெய வெங்கடேஷ ||
என்னும் தேவரநாமாவில், ஸ்ரீபுரந்தரதாஸர் இவ்வாறு கூறுகிறார்.

தாஸரெல்லரு பந்து தூளிதர்ஷனகொண்டு
லேஸாகி தாள தண்டிகெய பிடிது |

ஸ்ரீமதாசார்யர் ரிக் பாஷ்யத்தில் கூறியிருக்கும் வாக்கினை அப்படியே கன்னடத்தில் ஸ்ரீபுரந்தரதாஸர் இங்கு சொல்லியிருக்கிறார் என்று பன்னஞ்செ திரு.கோவிந்தாசார்யர் அவர்கள் விளக்குகிறார்.

ரமந்தி பாம்ஸவோ யத்ர பாம்ஸூரம் பதமீரிதம் |
ஸமூடம் தத்ர விஷ்வம் ஹி பாம்ஸுவஜ்ஜ கதீபதே: ||

இந்த சராசராத்மக உலகம் அனைத்தும், அந்த விஷ்வ நாயகனான பகவந்தனின் பாதங்களில் ஒரு துகளைப் போல இருக்கிறது. அந்த உலகிற்கு இது பெருமைக்குரிய செய்தி ஆகும். இவ்வாறு, ‘தூளிதர்ஷன’ த்தில் மொத்த பிரம்மாண்டமே அடங்கியிருக்கிறது என அறிய வேண்டும். நாம் அவனின் பாததூளி என்னும் அறிவைப் பெற்றால், இந்த தாஸத்வத்தின் தீக்ஷை திடமாகிறது.

மேலும், ஸ்ரீமகாலட்சுமி முதலான அனைவருமே ‘ஹரிதாஸர்களே’ ஆகின்றனர். அனைவரும் பகவந்தனின் சேவையை செய்கின்றனர் என்றும், பல ஹரிதாஸர்கள் தங்களுடைய கிருதிகளின் மூலம் விளக்கியிருக்கின்றனர்.

சத்ர சாமர வ்யஜன பர்யங்க பாத்ர ரூபதல்லி நிந்து
சித்த சரிதனாத ஹரிய நித்ய ஸேவெ மாடுதிஹளு
(ஏனு தன்யளோ லகுமி எந்த மான்யளோ)

**உத$^{3}$த்தமத$^{3}$ ஈ மார்க்க$^{3}$ஸத்வரு**
**சித்ததொ$^{3}$ளு நெலெகொ$^{3}$ளிஸி நிர்மல**
**வ்ருத்தி$^{1}$யொளு ஆஸக்தராக$^{3}$லு தா$^{3}$ஸ்ய நிஜபா$^{4}$வ |**
**வ்யக்தவாயிது ப்ருத்வியொளு ம**
**த்துத்தமரு பி$^{3}$த்த$^{1}$ரிஸி நிலிஸலு**
**ஆர்த்தி$^{2}$யிந்த$^{3}$லி தா$^{3}$ஸகூட$^{1}$த$^{3}$ பெ$^{1}$ஸரு இத$^{3}$காய்து ||37**

ஈ மார்க்கஸத்வரு - இந்த வழியை பின்பற்றியவர்கள்; உதத்தமத - மேற்கூறிய விஷயங்களை; சித்ததொளு நெலெகொளிஸி - தங்களின் சித்தத்தில் நிறுத்தியவாறு; நிர்மல வ்ருத்தியொளு ஆஸக்தராகலு - தூய்மையான வாழ்க்கை முறையில் ஈடுபட; தாஸ்ய நிஜபாவ - ஹரிதாஸ சாகித்யத்தின் உண்மையான அர்த்தம்; ப்ருத்வியொளு - இந்த உலகில்; வ்யக்தவாயிது - வெளிப்படத் துவங்கியது; மத்துத்தமரு - மேலும் இதே வழியில் வந்த உத்தமர்கள்; பித்தரிஸி நிலிஸலு - நன்கு இதனை விளக்கியவாறு பின்பற்ற; தாஸகூட - தாஸகூட என்று; இதகெ - இதற்கு; ஆர்த்தியிந்தலி - மிகவும் சிறப்பாக; பெஸரு ஆய்து - பேர் வந்தது.

பகவந்தனின் நாமஸ்மரணையை செய்தவாறு, பரம வைராக்யஸாலி களாக ஹரிதாஸர்கள் அனைத்து இடங்களுக்கும் சென்று அவனது மகிமைகளை பாடியவாறு, மக்களிடையே பக்தி மார்க்கத்தை பரப்பினர். இதனால் ஹரிதாஸ ஸாகித்யத்தின் உண்மையான நோக்கம் / அர்த்தம் மக்களுக்கு புரியத் துவங்கியது. இந்த மார்க்கத்திற்கு ‘தாஸகூட’ என்ற பெயரும் வந்தது.

தாஸ சதுஷ்டயர்களான ஸ்ரீபுரந்தரதாஸர், ஸ்ரீவிஜயதாஸர், ஸ்ரீகோபாலதாஸர் மற்றும் ஸ்ரீஜகன்னாததாஸர் மற்றும் அனேக பல தாஸர்களின் வாழ்க்கை வரலாற்றினை படித்தால் அவர்களது ஞான, பக்தி, வைராக்கியங்கள் எப்படிப்பட்டது என்பது புரிய வரும். தாஸ தீக்ஷை பெறுவதற்கு முன் / பின் என அவர்களில் நடந்த மாற்றத்தினை பார்த்தால், ஹரிதாஸ ஸாகித்யத்தின் மகிமை / சிறப்பு தெரிய வரும்.

ஒன்பது கோடி மதிப்புள்ள சொத்தினை கிருஷ்ணார்ப்பணம் என்று கூறிய ஸ்ரீனிவாஸ நாயகர் (பின்பு ஸ்ரீபுரந்தரதாஸர்); குரு கேட்டார் என்பதற்காக தனது 40 ஆண்டு கால ஆயுளையே தானம் செய்த ஸ்ரீகோபாலதாஸர்; என பல உதாரணங்களை சொல்லலாம்.

வைராக்³ய மார்க்க³ கேளு தா³ரித்³ர்ய மார்க்க³ கேளு
ஸ்ரீராமன பாத³ ஆராதி⁴ஸுவத³க்கெ
..
நீரு ஔளகெ³ இன்னு கமலவித்த³ந்தெ
காரணனாகி³ கார்ய வில்லதி³ரலிரபே³கு
மாரஜனக நம்ம கோபாலவிட்டலனு
தோரி கொட்ட வைராக்³யவனெ தோருவெ ||1

என்று தனது 'வைராக்ய ஸுளாதி' யில் ஸ்ரீகோபாலதாஸர், வைராக்கியம் என்றால் என்ன, எப்படி அதனைப் பெறுவது என்பதை விளக்கியிருக்கிறார். மேலே குறிப்பிடப்பட்டுள்ள வரிகளில், தாமரை இலை தண்ணீரினைப் போல, சம்சாரத்தில் இருந்தாலும், ஒரு சன்யாசியைப் போல இருந்து, கம்ஸாரியை நினைக்க வேண்டும் என்கிறார்.

ஹரிதாஸர்களின் இத்தகைய நடவடிக்கைகளை / ஞான பக்தி வைராக்கியங்களை பார்த்து, மக்களிடையே ஹரிதாஸ ஸாகித்யத் தின் மீது மதிப்பு வரத் துவங்கியது என்பதையே இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

**ஈ ஸுபத்³த⁴தி ரங்க³விட்டலோ**
**பாஸகரு தச்சிஷ்ய யதிவர**
**வ்யாஸமுனி ஹயவத³ன த³ய ஸத்பாத்ர மொத³லாகி³**
**லேஸு துரியாஶ்ரமதொ³ளிர்த³ரு**
**தோ³ஷவெணிஸத³லனுஸரிஸி கம**
**லேஶனங்கிததி³ந்த³ மெரெயுத ஜக³தி³ ஹரடி³த³ரு ||38**

ஈ ஸுபத்ததி - இந்த நல்வழியை (ஹரிதாஸ ஸாகித்யத்தை); ரங்க விட்டலோ பாஸகரு - ரங்கவிட்டலனின் உபாஸகரான ஸ்ரீஸ்ரீபாதராஜர்; தச்சிஷ்ய யதிவர வ்யாஸமுனி - அவருடைய சிஷ்யரான ஸ்ரீவ்யாஸ ராஜர்; ஹயவதன தய ஸத்பாத்ர - ஹயவதனனின் கருணையைப் பெற்ற ஸத்பாத்ரரான ஸ்ரீவாதிராஜர்; மொதலாகி - ஆகியோர்; லேஸு - சிறந்ததான; துரியாஸ்ரமதொளிர்தரு - சன்யாச தர்மத்தில் இருந்தாலும்; தோஷவெணிஸதலெ - (ஹரிதாஸ ஸாகித்யத்தை) தோஷம் என்று எண்ணாமல்; அனுஸரிஸி - இதனை பின்பற்றி;

கமலேஷனங்கிததிந்த - ஸ்ரீஹரியின் அங்கிதத்தினால்; ஜகதி - இந்த உலகில்; மெரெயுத - சஞ்சரித்து; ஹரடிதரு - இதனை பரப்பினர்.

இத்தகைய சிறப்புகளைக் கொண்ட ஹரிதாஸ ஸாகித்யத்தை, யதி த்ரயர்கள் எனப்படுபவர்களான, 1. ரங்கவிட்டலனின் உபாஸகரான ஸ்ரீஸ்ரீபாதராஜர்; 2. அவருடைய சிஷ்யரான ஸ்ரீவ்யாஸராஜர்; 3. ஹயவதனின் கருணையைப் பெற்றவரான ஸ்ரீவாதிராஜர் ஆகியோர் பின்பற்றத் துவங்கினர். தாங்கள் சன்யாச ஆசிரமத்தில் ஈடுபட்டு, பீடத்தில் இருந்தாலும், இந்த ஹரிதாஸ ஸாகித்யத்தை தோஷம் என்று எண்ணாமல் இதனை பின்பற்றி, ஸ்ரீஹரியின் அங்கிதத்தைக் கொண்டு, உலகெங்கிலும் இதனை பரப்பினர்.

ஸ்ரீமதாசார்யரின் தத்வங்களை உலகிற்கு எடுத்துக்காட்டி, ஹரி ஸர்வோத்தமத்வத்தை நிலை நிறுத்தும் பணியில் சன்யாச ஆசிரமத்தை ஏற்று, சாம்ராஜ்ய பீடத்தில் இருந்தாலும், யதி த்ரயர்களான ஸ்ரீஸ்ரீபாதராஜர், ஸ்ரீவ்யாஸராஜர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் ஆகியோர் ஹரிதாஸ ஸாகித்யத்தை எப்படி பின்பற்றி, பரப்பினர் என்று இங்கு விளக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

இந்த மூன்று யதிகளும், கன்னடத்தில் பற்பல பத, பத்ய, ஸுளாதிகளை இயற்றி, மக்களிடையே ஞான, பக்தி, வைராக்கியங்களை பரப்பினர். பல அரிய தத்வங்களை, மிகவும் எளிய கன்னடத்தில் பத்யங்களாக இயற்றி, லயத்துடன் அதனை பாடியும் ஹரிதாஸ ஸாகித்யத்தை பரப்பியிருப்பதை நாம் அறிகிறோம்.

கலியுகத்தில் ஹரிதாஸ ஸாகித்யத்தின் சிறப்பினை விளக்கும் ஸ்ரீஸ்ரீபாதராஜரின் உகாபோகம் ஒன்று:

த்யானவு க்ருதயுகதி யஜன யக்ஞவு த்ரேதாயுகதி
தானவாந்தக தேவதார்ச்சனெ த்வாபரயுகதி ஆ
மானவரிகெஷ்டு பலவோ அஷ்டு பலவு கலியுகதி
கானதலி கேசவ எனலு கைகொடிசுவனு ரங்கவிட்டலா ||

பிரார்த்தனா ரூபமாக ஸ்ரீவ்யாஸராஜரின் கிருதி ஒன்று:

ஜனும ஜனுமதல்லி கொடு கண்ட்ய ஹரியே ||ப||
அனிமித்த பந்து கிருஷ்ண தயதிந்தலெனகே ||அப||

மெரெவ ஊர்த்வபுண்ட்ர எரடாரு நாமவு
கொரளொளு துலசிய வனமாலெயு
சிரி ஷங்க சக்ர புஜதொளொப்புத நிம்ம
ஸ்மரிசுத்த ஹிக்குவ வைஷ்ணவ ஜனுமவ ||1||

ஹரியே சர்வோத்தம ராணி லகுமி பொம்ம
ஹரி இந்த்ராத்யமரரு தவ சேவகரு
வர தாரதம்ய பஞ்சபேத சத்யவெந்து
நெரெ பேளுவ வாயுமதத சுக்ஞானவ ||2||

சகல விபுதோத்தமரல்லி நம்ரதெயு
சுகதீர்த்தரலி குருபாவனெயு
சகல சுரரொடெய சிரிகிருஷ்ண நின்னல்லி
அகளங்கவாத நவவித பகுதியனு ||3||

ஸ்ரீவாதிராஜரின் உகாபோகம் ஒன்று:
நின்ன த்யானவ பக்திய கொடு
அன்யரலி விரக்தி கொடு
நின்ன நோடுவ யுக்திய கொடு
நின்ன பாடுவ பக்திய கொடு
நின்ஹத்தி பருவ சம்பத்திய கொடு
சித்ததி தத்வியாத க்ருத்யவ தோரோ
மத்தெ துதியலி எனகெ முக்திய கொடு
அத்தத்த மாடோ பவகத்தலெயெனகெ
முத்திதே ஹயவதன ||

**பா$^{4}$ஷெயபி$^{4}$மானத$^{3}$லி கன்னட$^{3}$**
**தூ$^{3}$ஷணெய கைகொ$^{3}$ண்டு$^{3}$ ஹலவரு**
**மாஸிருவ மனதி$^{3}$ந்த$^{3}$ தம்மனு தாவெ பே$^{3}$ர்படி$^{3}$ஸி |**
**வ்யாஸகூடதி$^{3}$ ஶ்ரேஷ்டராவெம்**
**தா$^{3}$ஶிஸுத பே$^{4}$த$^{3}$வனு ப$^{3}$கெ$^{3}$யுவ**
**தோ$^{3}$ஷ கார்யதி$^{3}$ மனவனெரகி$^{3}$ஸி ப$^{3}$ரிதெ$^{3}$ ப$^{3}$ளலுவரு ||39**

பாஷெயபிமானதலி - (சம்ஸ்கிருத) மொழியின் அபிமானத்தில்; கன்னட தூஷணெய கைகொண்டு - கன்னட மொழியை தூஷித்தவாறு; ஹலவரு - பலர்; மாஸிருவ மனதிந்த - களங்கமுள்ள மனதினால்;

தம்மனு தாவெ பேர்படிஸி - தங்களை தாங்களே வேறுபடுத்திக் கொண்டு; வ்யாஸகூடதி - வ்யாஸகூடத்தைவிட; ஸ்ரேஷ்டராவெந்து - (ஹரிதாஸ ஸாகித்யமானது) சிறந்ததா என்று; ஆஷிஸுத - கூறியவாறு; பேதவனு பகெயுவ - பேதத்தை சொல்லும்; தோஷ கார்யதி - கெட்ட செயல்களில்; மனவனெரகிஸி - மனதினை வைத்து; பரிதெ பளலுவரு - அதிகமாக நேரத்தை செலவழித்துக் கொண்டிருப்பர்.

ஹரிதாஸ ஸாகித்யமானது, ஸ்ரீமத்வரின் தத்வ ரகசியங்களையே விளக்குவதாக இருந்தாலும், புதியதாக எதையும் சொல்லாமல் இருந்தாலும், பலர் அதன் மேல் வெறுப்பு கொண்டிருக்கின்றனர் என்பதை இங்கு விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

சம்ஸ்கிருத மொழியின் அபிமானத்தில், கன்னட மொழியை தூஷித்தவாறு, பலர் தமது களங்கமுள்ள மனதினால், தாஸகூட மானது, வ்யாஸகூடத்தைவிட சிறந்ததா என்று கேட்டவாறு, இரண்டிலும் வேறுபாட்டைக் காட்டும் மனதினை வைத்து, அதிலேயே அதிகமான நேரத்தை செலவழித்துக் கொண்டிருப்பார்கள்.

**நாரத3ரெ த4ரெகி3ளிது3 ஶாஸ்த்ரத3**
**ஸாரஸர்வஸ்வவனு கன்னட3**
**பூ4ரி ஸாஹித்யத3லி ஸார்த3ரு மான்வி கு3ருவரரு |**
**தா3ரி மோக்ஷக்கெ ஹரிகதாம்ருத**
**ஸார வித்3வஜ்ஜனகெ தத்வா**
**கா3ர ரசிஸிரெ பா4ஷெ காரணமாடி3 ஜரியுவரெ ||40**

நாரதரெ தரெகிளிது - நாரதரே ஸ்ரீபுரந்தரதாஸராக இந்த பூமிக்கு வந்து; ஷாஸ்த்ரத ஸாரஸர்வஸ்வவனு - சாஸ்திரத்தின் சாரமான அனைத்தையும்; கன்னட பூரி ஸாஹித்யதலி - கன்னட சிறந்த சாகித்யத்தில்; ஸார்தரு - கொடுத்து அருளினார்; மான்வி குருவரரு - மான்வி குருகளான ஸ்ரீஜகன்னாததாஸர்; தாரி மோக்ஷக்கெ - மோட்சத்திற்கு வழிகாட்டியாக; ஹரிகதாம்ருதஸார – ஹரிகதா ம்ருதஸாரத்தை; வித்வஜ்ஜனகெ - அறிஞர்களுக்கு; தத்வாகார ரசிஸிரெ - தத்வத்தின் ஸாரமாக இயற்றிக் கொடுத்தால்; பாஷெ காரணமாடி - கன்னட மொழி என்று காரணம் காட்டி; ஜரியுவரெ - அதனை புறக்கணிக்க முடியுமா?.

ஏதோ ஒரு காரணம் காட்டி, இத்தகைய மோட்ச சாதனமான கன்னட ஹரிதாஸ ஸாகித்யத்தை புறக்கணிக்க முடியுமா என்று ஸ்ரீதாஸர் கேட்கிறார்.

நாரதரே ஸ்ரீபுரந்தரதாஸராக இந்த பூமிக்கு வந்து, தத்வ சாஸ்திரத்தின் ஸாரமான அனைத்தையும், கன்னடத்தில் நமக்குக் கொடுத்து அருளினார். அவரைத் தொடர்ந்து வந்த பலரும், பின்னர் வந்த ஸ்ரீஜகன்னாததாஸரும், மோட்சத்திற்கு வழிகாட்டியாக ஹரிகதா ம்ருதஸாரத்தை நமக்கு இயற்றிக் கொடுத்தார். இப்படியான அற்புத கிரந்தங்கள் இருக்கையில், அவற்றை கன்னட மொழி என்று காரணம் காட்டி புறக்கணிக்க முடியுமா?.

நாரத3னெ தா ப3ந்து3 தா4ருணிய ம்யாலெ அவ
தாரவனு தா மாடெ3 இதரரிகெ3 எல்ல
பாரமார்த்தி2யலி உத்3தா4ர மாடு3வனெந்து3
நாரத3ரெ புரந்த3ர தா3ஸரெனிஸித3ரு ||14

‘வெங்கடேஷன யாத்ரெகெ தாஸரு போதாக’ என்னும் கிருதியில் ஸ்ரீரகுநாத தீர்த்தர் - நாரதரே ஸ்ரீபுரந்தரதாஸராக அவதாரம் செய்து, அனைவருக்கும் முக்தி மார்க்கத்தை காட்டுவேன் என்று கூறி, அதன்படியே செய்தார் - என்று பாடியிருக்கிறார்.

கன்னடத்தின் சிறப்பினையும், அதில் உள்ள கிருதி / கிரந்தங்களின் சிறப்பினையும், இந்த கிருதியின் துவக்க பத்யங்களிலேயே பார்த்தி ருக்கிறோம். ஆகவே அவற்றை திரும்ப இங்கே கொடுக்கவில்லை.

**வ்யாஸகூட1வெ தா3ஸகூட1வு**
**வ்யாஸதத்வவெ தா3ஸதத்வவு**
**வ்யாஸவிரசித க்3ரந்தஸாரத3 திளலு தா3ஸத்வ**
**ஆ ஸமீரரெ போ3தி4ஸிரலித3**
**தா3ஸ முக்2யரு எனிஸி ஜக3தொ3ளு**
**லேஸுவாத3ரு எணிஸலாக3து3 பே4த3வித3ரொளகெ3 ||41**

வ்யாஸகூடவெ தாஸகூடவு - தாஸகூடம் என்பது வ்யாஸகூடமே ஆகும்; வ்யாஸதத்வவே தாஸதத்வவு - தாஸ தத்வம் என்பது வ்யாஸ தத்வமே ஆகும்; வ்யாஸவிரசித - ஸ்ரீவேதவ்யாஸர் இயற்றிய; க்ரந்த

ஸாரத - கிரந்தங்களின் ஸாரத்தின்; திளலு - விஷயமே; தாஸத்வ - தாஸத்வம் ஆகும்; ஆ ஸமீரரே - அந்த ஸ்ரீமன் மத்வாசார்யரே; போதி ஸிரலு - இதனை போதித்திருக்க; இத தாஸ - இந்த தாஸகூடத்தவர் களும் ; முக்யரு எனிஸி - முக்கியமானவர்களே என்று அறிந்து; ஜகதொளு - உலகில்; இதரொளகெ - இந்த இரண்டிலும்; லேஷவாதரு - சிறிதேனும்; பேதவு எணிஸலாகது - வேறுபாட்டினை காணக்கூடாது.

ஹரிதாஸ ஸாகித்யம் என்றால் என்ன என்று விளக்குவதில் தொடர்ந்து ஈடுபட்டிருக்கிறார் ஸ்ரீதாஸர். ஹரிதாஸகூடம் என்பது தானாக ஏதோவொரு விஷயத்தை விளக்குவது இல்லை. வ்யாஸ கூடத்தில் இருப்பதையே எளிமையான கன்னடத்தில் விளக்குகிறது. அரிதான / புரியாத விஷயங்களை சுலபமாக புரிய வைப்பதற்காக, தக்க உபமான உவமேயங்களுடன் விளக்குவதே ஹரிதாஸ ஸாகித்யம் என்கிறார்.

வ்யாஸகூடமே தாஸகூடம் ஆகும். தாஸ தத்வம் என்பது வ்யாஸ தத்வமே ஆகும். ஸ்ரீவேதவ்யாஸர் இயற்றிய கிரந்தங்களின் ஸாரத்தின் விஷயமே தாஸத்வம் ஆகும். அந்த ஸ்ரீமன் மத்வாசார்யரே இதனை போதித்திருக்க, இந்த தாஸகூடத்தவர்களும் முக்கியமான வர்களே என்று அறிந்து, இந்த இரண்டிலும் (வ்யாஸகூட, தாஸகூட) சிறிதும் வேறுபாட்டினை காணக்கூடாது என்கிறார்.

ஹரிதாஸ ஸாகித்யத்தில் உள்ள அனைத்து விஷயங்களுக்கும் தக்க வ்யாஸ ஸாகித்யத்தின் உதாரணத்தைக் கொடுக்கலாம்.

நாமஸ்மரண ஸுளாதியில், ஸ்ரீவிஜயதாஸர் :
கு$^{3}$ண கால தே$^{3}$ஷ கர்ம க்ரியெ நாம தீர்த்த$^{2}$ தே$^{3}$ஹ
ஜனன மிக்காத$^{3}$ நால்கு பகெ$^{3}$ வ்யாபார
ஜனன நானா ஜந்து வர்ஷ க$^{2}$ண்ட$^{3}$ த்வீபா$^{3}$தி$^{4}$ க$^{3}$க$^{3}$ன
..
என்று நித்ய ஸ்மரண விதியை விளக்குகிறார். கர்ம ஸித்தாந்தத்தை சுருக்கமாக சொல்லும் விதமாக இது இருக்கிறது. ‘யஸ்மின் ஸர்வாணி கர்மாணி ஸன்யஸ்யாத்யாத்ம சேதஸா’ என்று சதாசார ஸ்ம்ருதியில் ஸ்ரீமதாசார்யர் கூறிய - தகாத விருப்பங்களை துறந்து, அனைத்து வித கர்மங்களையும் ஸ்ரீஹரியின் பூஜா ரூபமாக செய்து, அவற்றை அவனுக்கே சமர்ப்பிக்க வேண்டும். பாப & புண்ய கர்மங்கள்

இரண்டையும் ஸ்ரீஹரியே செய்விக்கிறான். ஆகையால், சர்வ கர்மங் களையும் அவனுக்கே சமர்ப்பிக்க வேண்டும்.

இன்னொரு உதாரணத்தையும் பார்ப்போம்.
தாவத்கர்த்தும் ந ஷக்னோதி பாதகம் பாதகீ பாதகீ ஜன: |
ஸ்மர்தவ்ய: ஸததம் விஷ்ணு: விஸ்மர்தவ்யோ ந ஜாதுசித் ||

அனைத்து விதி, விதிவிலக்குகளின் பொருள் - ஹரியை நினை யுங்கள். ஹரியை மறக்காதீர்கள் என்றே இருக்கிறது. பகவந்தனின் கதா சிரவண, ஸ்மரணை, கீர்த்தனாதிகளால் லௌகிக காரியங்களை செய்தாலும், பகவந்தனில் சித்தத்தை வைத்த மனிதனுக்கு சம்சார பந்தகம் ஆவதில்லை.

க்ரியாஸூ யஸ்த்வச்சரணாவிந்தயோ: ஆவிஷ்டசித்தோ |
ந பவாய கல்பதே || பாக 10-2-37

மக்களாடிசுவாக மடதியொ
ளக்கரதி நலிவாக ஹய ப
ல்லக்கி கஜமொதலாத வாஹனவேரி மெரெவாக |
பிக்குவாக ஆகளிசுதலி தே
வக்கிதனயன நெனெவுதிஹ நர
சிக்கனெம தூதரிகெ ஆவாவல்லி நோடிதரு || (ஹரிகதாம்ருதசார 13-1)

நதி ஹரியுத்ததெ (நதி பாய்கிறது), வஸ்த்ரவன்னு ஹரி (துணியைத் துவை) என்று லௌகிக விஷயங்களை ஹரி என்று சிந்தித்தாலே பாவங்கள் போகின்றன என்றபோது, பக்தியுடன் கூறினால் பாவங்கள் பரிகாரம் ஆவதில்லையா? பஞ்சுப்பொதியலில் நெருப்பு வைத்தால், அது நொடியில் எரிந்து பஸ்மம் ஆவதைப் போல, ஹரி ஸ்மரணை யினால் பாவங்கள் என்னும் பஞ்சுக்குவியல் சுட்டுப் போகின்றன.

ஹரி ஹரீ ஹரியெம்ப எரட
க்ஷர நுடித மாத்ரதலி துரிதக
ளிரதெ போபவு தூலராஷியொளனலு பொக்கந்தெ ||

ஹரிஸ்மரணைக்கு நேரம், காலம், ஜாதி ஆகிய எவையும் தடையில்லை. ஷௌச காலத்திலும் ஹரிஸ்மரணை செய்யவே வேண்டும். ஸ்ரீஹரியை மகிழ்விக்க வித்யை, கால, ரூப, தன, சாஸ்திர

ஞான, இவை எதுவும் பக்தி இல்லையெனில் வீண் ஆகின்றன. இவை எதுவும் இல்லாமல் பக்தியுடன் ஸ்தோத்திரம் செய்தால், ஹரி மகிழ்கிறான் -- அக்னி புராணம்.

**வ்யாஸரொப்$^3$ப$^3$ரெ ஜக$^3$கெ ஜீவர**
**ராஶி எல்லரு தா$^3$ஸரெனிபரு**
**ஸூஸி மெரெயுவ விஷ்ணுப$^4$க்தாக்$^3$ரேஸரரு நெரெது$^3$**
**தே$^3$ஶதே$^3$ஶதி$^3$ பூ$^4$ஷிஸலு ஹரி**
**தா$^3$ஸகூட$^1$த$^3$ நாம பொந்தி$^3$து**
**வ்யாஸகூட$^1$த$^3$ பெஸரு ப$^3$யலது$^3$ ப்$^3$ராந்தியுத ப$^3$ரிதெ$^3$ ||42**

வ்யாஸரொப்பரே - ஸ்ரீவேதவ்யாஸர் ஒருவரே; ஜககெ - உலகிற்கு; ஜீவர ராஷி எல்லரு - ஜீவராசி அனைவரும்; தாஸரெனிபரு - அவருடைய தாஸர் எனப்படுகின்றனர்; ஸூஸி மெரெயுவ - அனைத்து இடங்களிலும் சுற்றித் திரியும்; விஷ்ணுபக்தாக்ரேஸரரு - விஷ்ணு பக்தியை ஒப்புக் கொண்டவர்கள்; நெரெது - சென்று; தேஷதேஷதி பூஷிஸலு - (ஹரிதாஸ ஸாகித்யத்தை) அனைத்து இடங்களிலும் இவ்வாறு பரப்ப; ஹரிதாஸகூடத நாம - ஹரிதாஸ கூட என்னும் இந்த பெயர்; பொந்திது - பரவியது; வ்யாஸகூடத பெஸரு - வ்யாஸகூடத்தின் பெயர்; பயலது ப்ராந்தியுத பரிதெ - (வ்யாஸகூடத்தின் மூலமே மோட்சம்) என்னும் மயக்கம் வெகுவாக (மக்களிடையே) குறைந்தது.

இந்த பத்யத்தின் முதல் பகுதியை இரு விதமாக பொருள் கொள்ளலாம்.

அ. ஸ்ரீவேதவ்யாஸர் ஒருவரே (வேத விபாகங்களை செய்து, புராணங்களை உலகிற்குக் கொடுத்தவர்) ஸர்வோத்தமர். மற்றவர்கள் அனைவரும் (ஸ்ரீலட்சுமிதேவி முதற்கொண்டு உலகில் உள்ள அனைவருமே) அவருடைய தாஸர் எனப்படுகிறார்கள். விஷ்ணுபக்தாக்ரேஸரர் - வாயுதேவரின் மதத்தைப் பின்பற்றுபவர்கள் அனைவரும், அனைத்து இடங்களிலும் சென்று, ஹரிதாஸ ஸாகித்யத்தை பரப்ப, அது 'ஹரிதாஸ கூட' என்று பெயர் பெற்றது.

ஆ. ஸ்ரீமன் மத்வ மதே ஹரி: பரதர: என்று ஒன்பது பிரமேயங்களுடனான மத்வ ஸித்தாந்தத்தை விளக்கிய வ்யாஸர்

(ஸ்ரீவ்யாஸ தீர்த்தர்), ஹரிதாஸ கூடத்தை துவக்கினார். பின்னால் வந்த அனைத்து ஹரிதாஸர்களும் (ஸ்ரீபுரந்தரதாஸர், ஸ்ரீவிஜயதாஸரிலிருந்து ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாஸர் மற்றும் இன்று இருக்கும் ஹரிதாஸர்கள் வரைக்கும்) அவருடைய தாஸர்களே. ஹரிஸர்வோத்தமத்வத்தை ஒப்புக் கொண்ட அவர்கள், அனைத்து இடங்களிலும் சென்று, ஹரிதாஸ ஸாகித்யத்தை பரப்ப, அது 'ஹரிதாஸ கூட' என்று பெயர் பெற்றது.

இதன் மூலம், வ்யாஸகூடத்தின் மூலமே மோட்சம் என்பதான சிந்தனை, மக்களிடையே அதிகமாக குறையத் துவங்கியது.

ஹரிதாஸ ஸாகித்யமானது மோட்சத்திற்கான பாதை என்பதை குறிப்பிட, பல்வேறு உதாரணங்கள் இருந்தாலும், ஸ்ரீவாதிராஜர் தனது தத்வஸார கிரந்தத்தின் பல்லவியில் இதையே தெளிவாக கூறுவதை பார்க்கலாம்.

இது³ புண்யகதெ² லோகக்கிது³ முகுதிய பத²
இத³ கேளுவவனெ க்ருதார்த்த² || பல்லவி

இந்த கிரந்தத்தின் விஷயம், நித்யஸுக ஸாதனத்தின் நிரூபணம் ஆகும். அஞ்ஞான நிலையில் இருக்கும் ஸஜ்ஜனர்களுக்கு இது மோட்சத்தைக் காட்டும் மார்க்கம் ஆகும். இதனை கேட்டு, நிஷ்டையை பெறுபவனே, தன் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொண்டவன்.

**ஸ்வச்சவாகி³ஹ தா³ஸகூடத³**
**ஹெச்சளவனரியதெ³லெ குஜனரு**
**மத்ஸரவ ப³கெயுவரு ஸ்ரீ ஹரிதா³ஸரனு ஜரிது³ |**
**கொ¹ச்சுவரு மைமரெது³ தம்மய**
**ஹுச்சு பாண்டி³த்யவனு ஸ்ரீஹரி**
**மெச்சனவஹேளனவ தன்னவரல்லி எம்பு³த³னு ||43**

ஸ்வச்சவாகிஹ - இவ்வாறு பவித்ரமாக இருக்கும்; தாஸகூடத - தாஸகூடத்தின்; ஹெச்சளவனு - சிறப்பினை; அரியதலெ - அறியாமலேயே; குஜனரு - கெட்ட புத்தி கொண்டவர்கள்; ஸ்ரீஹரிதாஸரனு - ஸ்ரீஹரிதாஸர்களை; ஜரிது - திட்டி / புறக்கணித்து;

மத்ஸரவ பகெயுவரு - பொறாமையை காட்டுவார்கள்; தம்மய - தம்முடைய; ஹுச்சு பாண்டித்யவனு - அறியாமையை; மைமரெது - தன்னை அறியாமலேயே; கொச்சுவரு - வெளிப்படுத்துவார்கள்; தன்னவரலி - தன்னவர்களிடம் (தன் பக்தர்களிடம்); ஹேளவன - (செய்யப்படும்) அவமானத்தை; ஸ்ரீஹரி - ஸ்ரீஹரி; மெச்சனு - விரும்புவதில்லை; எம்புதனு - என்பதை; (மறந்து விடுவார்கள்).

இவ்வாறு பவித்ரமாக இருக்ககூடிய தாஸகூடத்தின் சிறப்பினை அறியாமலேயே, கெட்டபுத்தி கொண்டவர்கள், ஸ்ரீஹரிதாஸர்களை திட்டி, தங்களின் பொறாமையை காட்டுவார்கள். தங்களை அறியாமலேயே, தம்முடைய அறியாமையை வெளிப்படுத்துவார்கள். தன் பக்தர்களுக்கு இத்தகையவர்கள் செய்யும் அவமானத்தை, ஸ்ரீஹரி விரும்புவதில்லை என்பதை இவர்கள் மறந்து விடுகிறார்கள்.

தாள தன்னவரல்லி மாடு3வ
ஹேளனவ ஹெத்தை3ய்வ விது3ரன
ஆலயதி3 பாலுண்டு3 கு3ருபன மானவனெ கொண்ட3 ||(2-14)

தன் பக்தர்களிடம் அடுத்தவர்கள் காட்டும் அவமானத்தை / கேலியை, ஸ்ரீஹரி விரும்ப மாட்டான். ஆகையால், துரியோதனின் அழைப்பை நிராகரித்து, விதுரனின் வீட்டில் பால் உண்டான் ஸ்ரீகிருஷ்ணன் - என்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர்.

ஹரி-தாஸர்களுக்கு செய்யப்படும் அவமானத்தை ஸ்ரீஹரியே தாங்குவதில்லை என்றபிறகு, வேறு யாரும் ஹரிதாஸர்களை அவமானம் செய்ய, ஹரிதாஸ ஸாகித்யத்தை புறக்கணிக்க எவ்வித முகாந்திரமும் இல்லை என்பது ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸரின் வாக்கு.

**ஹரிக்ருபெயொளொத3கி3ருவ மானுஷ**
**வரத1னுவ தா பொந்தி3 அத3ரொளு**
**பரிபரிய ஸத்கர்ம ப2லரூபத3லி ப3ருவந்த2**
**மரத1மத1 ஸௌபாக்4ய படெ3தி3ரெ**
**ஹரிய சரணாப்3ஜவனு ஸேவிஸி**
**பரம ப4க்தர பாத3தூ3ளிய ஶிரதி3 த4ரிஸுவுது3 ||44**

ஹரிக்ருபெயொளு - ஸ்ரீஹரியின் கருணையால்; ஒதகிருவ - கிடைத்திருக்கும்; மானுஷ வர தனுவ - இந்த மனித, சிறந்த, தேகத்தினை; தா பொந்தி - தான் பெற்று; அதரொளு - அதன் மூலமாக; பரிபரிய ஸத்கர்ம பலரூபதலி பருவந்த - பற்பல ஸத்கர்மங்கள், பல ரூபமாக வரக்கூடிய; மரதமத - மத்வ மத; ஸௌபாக்ய படெதிரெ - ஸௌபாக்கியத்தை பெற்றிருக்கும்போது; ஹரிய சரணாப்ஜவனு - ஸ்ரீஹரியின் பாத கமலங்களை; ஸேவிஸி - வணங்கி; பரம பக்தர - ஸ்ரீஹரியின் அத்யந்த பக்தர்களின்; பாததூளிய - பாததூளிகளை; ஷிரதி - தலையில்; தரிஸுவுது - தரிக்க வேண்டும்.

ஸ்ரீஹரியின் கருணையால் கிடைத்திருக்கும் இந்த மனித தேகத்தினை நாம் பெற்று, அதன் மூலமாக பற்பல ஸத்கர்மங்களை செய்யக்கூடிய மத்வ மதம் என்னும் ஸௌபாக்கியத்தை பெற்றிருக்கும்போது, (இந்த சந்தர்ப்பத்தை வீண் அடிக்காமல்), ஸ்ரீஹரியின் பாத கமலங்களை வணங்கி, ஸ்ரீஹரியின் அத்யந்த பக்தர்களின் பாததூளிகளை தலையில் தரிக்க வேண்டும்.

இந்தப் பிறவி எவ்வளவு சிறப்பானது என்பதைப் பற்றி பல ஹரிதாஸ கிருதிகள் இருக்கின்றன.

மானவ ஜென்ம தொட்டது - இத
ஹானி மாடலு பேடி ஹுச்சப்பகளிரா
என்று ஸ்ரீபுரந்தரதாஸர் இத்தகைய சிறப்பு வாய்ந்த பிறவியை, வீண் அடிக்காதீர்கள் என்று கூறுகிறார்.

ஸாதன ஷரீரவிது நீ தயதி கொட்டது
ஸாதாரணவல்ல ஸாது ப்ரியனே
என்று ஸ்ரீஜகன்னாததாஸர் இந்த சரீரம், சாதாரணமானது அல்ல, ஸாதனைகளை செய்வதற்காக வந்திருக்கும் சரீரம் என்கிறார்.

அப்படிப்பட்ட திவ்ய சரீரம் வந்திருக்கும்போது, நாம் செய்ய வேண்டியது, ஸ்ரீஹரியின் பாதங்களை வணங்கி, ஸ்ரீஹரி பக்தர்களின் பாததூளிகளை தலையில் தரிக்க வேண்டும், என்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

பத்மனாபனே நிம்ம ஷுத்த ஸ்ரீபாததி | பித்து பேடுவெனய்ய நிர்தரிஸி த்ருடவ | அப்திஷயனனே என்னபத்த துர்பணெயன்னு | தித்தி பொரெ பேகனே முத்து ஸ்ரீராம || -- என தாஸ ராயரின் அனுபவ கடலில் மூழ்கி, அவருடைய வாக்குகளில் பகவானின் பாத கமலங்களை பற்றி சிந்திப்போம்.

ஸ்ரீஹரியின் பாத மகிமைகளை விளக்குவதான, ஸ்ரீஹரி பக்தர்களின் பாத சேவையின் மகிமையை விளக்குவதான, பல ஹரிதாஸர்களின் கிருதிகளும் உள்ளன.

ஹரிதா$^{3}$ஸனாகு$^{3}$ ஸஞ்சரிஸு ஸந்தோஷத$^{3}$ல்லி
கு$^{3}$ருஹிரியர பாத$^{3}$க்கெருகு$^{3}$திரு பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ (ஸதாசார ஸுளாதி)

பண்டனாகி பாகில காயுவே நா
வைகுண்ட ஸ்ரீ ஹரிய தாஸர மனெய (கனகதாஸர்)

**த$^{4}$ரெயொளீதெர பா$^{3}$ள ப$^{3}$யஸுவ**
**நரனு தன்னய ஜனும ஸார்த்த$^{2}$க**
**பரியனரஸுத பரமகு$^{3}$ப்தன தெரதி$^{3}$ சரிஸுதலி |**
**து$^{3}$ருளஜன ஸஹவாஸ தூ$^{3}$ரி**
**கரிஸி ஸத்கு$^{3}$ருக்ருபெய ப$^{3}$யஸுத**
**நிருத ஹரிஸேவெயலி காலவ களெது$^{3}$ பா$^{3}$ளுவுது$^{3}$ ||45**

தரெயொளீதெர - இந்த பூமியில் இப்படியாக; பாள பயஸுவ - வாழ விரும்பும்; நரனு - மனிதன்; தன்னய ஜனும - தன் பிறவியை; ஸார்த்தக - அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்ளும்; பரியனரஸுத - வழியை தேடியவாறு; பரமகுப்தன தெரதி - ஒற்றனைப் போல (மிகவும் ரகசியமாக / தனிமையில்); சரிஸுதலி - நடமாடியவாறு; துருளஜன - கெட்டவர்களின்; ஸஹவாஸ - நட்பினை; தூரி கரிஸி - விலக்கி; ஸத்குரு க்ருபெய - ஒரு நல்ல குருவின் அருளை; பயஸுத - விரும்பியவாறு; நிருத ஹரிஸேவெயலி - நிரந்தரமாக ஹரி ஸேவையில்; காலவ களெது - காலத்தை கழித்தவாறு; பாளுவுது - வாழ வேண்டும்.

ஸ்ரீஹரியின் பாதங்களை வணங்குபவனான, ஸ்ரீஹரி பக்தர்களின் பாத சேவையை செய்ய விரும்புபவனான மனிதன், தன் பிறவியை

அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்ளும் வழியை தேடியவாறு, மிகவும் ரகசியமாக / தனிமையில் நடமாடியவாறு, கெட்டவர்களின் நட்பினை விலக்கி, ஒரு நல்ல குருவின் அருளை விரும்பியவாறு, நிரந்தரமாக ஹரி ஸேவையில் தன் காலத்தை கழித்தவாறு வாழ வேண்டும்.

ஸங்கவாகலி ஸாது ஸங்கவாகலி
ஸங்கதிந்த லிங்க தேக பங்கவாகலி
-- என்று ஸஜ்ஜனர்களின் சங்கத்தை விரும்பி, அதன் மூலம் மோட்சத்தையே அடைய வேண்டும் என்கிறார் ஸ்ரீபிரஸன்ன வெங்கடதாஸர்.

ஸ்ரீஷனெ க3தி எந்து3 பே3ஸரத3லெ ப3ந்த3
க்லேஷக3ளுணபே3கு ப3ந்தா3க3லு
தே3ஷ கால கு3ணபரிபூர்ண ஹரி இரெ
கா4ஸி எல்லிதோ3 எந்து3 நலியபே3கு
(#4 ஹரிதாஸ லட்சண ஸுளாதி)

என்று ஸ்ரீவிஜயதாஸர், ஸ்ரீஹரியின் மகிமைகளையே, பக்தர்களையே தேடிச் சென்று அவற்றை / அவர்களை அடைய வேண்டும் என்று இந்த ஸுளாதியில் விளக்கியுள்ளார்.

பி3கித3 க1ண்ட2தி3ம் த்3ருக்1பா4ஷ்பக1ளிம்
நகெ3மொக3தி3ம் ரோமக3ளொகெ3து3
மிகெ3 ஸந்தோ1ஷதி3ம் நெகெ3தா3டுத1
நான்மொக3னய்யன கு3ண பொ1க3ளி ஹிக்கு3வுதே3 ||11||

சிறந்த பகவத் பக்தர்களுடன் நெருக்கமாக இருப்பதே, நாம் செய்யக்கூடிய சாதனைகளின் முக்கிய குறிக்கோள். பகவத் பக்தர்களில், பக்வ பக்தர், பக்வ கல்பர் மற்றும் பக்வ பிரதிநிதிகள் (சாதகர்கள்) என்று மூன்று வகைகள் உண்டு. பக்வ பக்தர்களின் லட்சணங்களை இந்த நுடியில் விவரித்திருக்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர்.

பக்வகல்பர் என்றால் பக்குவத்திற்கு அருகில் இருப்பவர் (இன்னும் அதை அடையாதவர்). அவர்களிடமும் சில நேரங்களில் மேற்கண்ட சுபாவங்கள் காணப்படலாம். ஆனால், இந்த லட்சணங்கள்

இல்லாதவர்கள் (அதாவது அழுவது, சிரிப்பது, ஆடுவது போன்றவை செய்யாதவர்கள்), பக்தர்கள் இல்லை என்று மட்டும் சொல்லக்கூடாது. வெட்கத்தை விட்டு, ஸ்ரீஹரி நாமகீர்த்தனையை சொல்லி, மகிழ்ச்சியுடன் நடனமாடும் மனோபாவமானது, சிறந்த பக்தியின் வெளிப்பாடு என்று சொல்லலாம்.

**வாஸவானுத ஹரிய தா$^{3}$ஸர**
**தா$^{3}$ஸ்ய சரிஸுவ தா$^{3}$ஸ தா$^{3}$ஸர**
**தா$^{3}$ஸ தானெந்த$^{3}$ரிது மனதொ$^{3}$ளு மத$^{3}$வ நூகு$^{1}$த்த$^{1}$ |**
**ஆஶிஸதெ$^{3}$ மத்தன்ய தெ$^{3}$ய்வவ**
**தே$^{3}$ஶதே$^{3}$ஶக$^{3}$ளொடெ$^{3}$ய ஶ்ரீஶனெ**
**லேஶ பி$^{3}$ட$^{3}$த$^{3}$லெ காவனெம்பு$^{3}$தெ$^{3}$ தா$^{3}$ஸலக்ஷணவு ||46**

வாஸவானுத ஹரிய - இந்திரனால் வணங்கப்படும் ஹரியின்; தாஸர தாஸ்ய சரிஸுவ - தாஸரின் (வாயுதேவரின் / ஸ்ரீமதாசார்யரின்) தாஸ்யத்தை விரும்பும்; தாஸ தாஸர - யதி / ஹரிதாஸ பரம்பரையில் வந்தவர்களின்; தாஸ தானெந்தரிது - தாஸன் தான் என்பதை அறிந்து; மனதொளு - மனதில்; மதவ நூகுத்த - கர்வத்தை விலக்கியவாறு; மத்தன்ய தெய்வவ - வேறு எந்த தெய்வத்தையும்; ஆஷிஸதெ - வணங்காமல்; தேஷதேஷகளொடெய - இந்த அனைத்து உலகங்களின் தலைவனான; ஸ்ரீஷனெ - லட்ச்மீஷனே; லேஷ பிடதலெ - சிறிதும் விடாமல்; காவனெம்புதெ - நம்மைக் காப்பான் என்று நம்புவதே (சொல்வதே); தாஸ லக்ஷணவு - ஹரிதாஸ லட்சணம் ஆகும்.

ஹரிதாஸ்யத்தின் லட்சணத்தை மேலும் இந்த பத்யத்தில் மிகவும் அழகாக விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

இந்திராதி தேவர்களால் வணங்கப்படும் ஸ்ரீஹரியின் தாஸரான (வாயுதேவரின் / ஸ்ரீமதாசார்யரின்) தாஸ்யத்தை விரும்பும், யதி / ஹரிதாஸ பரம்பரையில் வந்தவர்களின் தாஸன் தான் என்பதை அறிந்து, மனதில் கர்வத்தை விலக்கியவாறு, வேறு எந்த தெய்வத்தையும் வணங்காமல் இந்த அனைத்து உலகங்களின் தலைவனான ஸ்ரீலட்சுமீஷனே நம்மைக் காப்பான் என்று திடமாக நம்புவதே தாஸ லட்சணம் ஆகும்.

ஸ்வோசித1 கர்மக3ளாசரிஸுத ப3லு நீசரல்லிகெ3 போ1கி3 யாசிஸதெ3
கே1சரவாஹ சராசர பந்த4க1 மோசக1னஹுதெந்து3 யோசிஸுதிப்புதே3

நம் வர்ணாசிரமத்திற்கேற்ப கர்மங்களை செய்தவாறு, ஸ்ரீஹரியைத் தவிர வேறு எந்த பிற தெய்வங்களிடமும் சென்று வேண்டாமல், நம் சம்சார பந்தனத்தை விலக்கத் தக்கவன் அவன் ஒருவனே என்பதை அறிந்து அவனை வணங்குவதே, நம் இந்த வாழ்க்கையின் சிறந்த அர்த்தமாகும் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

ஸகலக்ரஹ பல நீனே ஸரஸிஜாக்ஷா
நிகிள வ்யாபக நீனே விஸ்வ ரக்ஷகா

என்று ஸ்ரீபுரந்தரதாஸர் ஹரி ஸர்வோத்தமத்வத்தை பல்வேறு உதாரணங்களுடன் இந்தப் பாடலில் விளக்குகிறார்.

இப்படியாக திடமான ஹரிபக்தியைக் கொண்டிருப்பதே தாஸ லட்சணம் ஆகும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

**விதி4யமீரதெ3 பா3ஹ்யத3லி ஸ**
**ந்முத3தி3 த்3வாத3ஷ நாம முத்3ரெய**
**ஹது3ளதி3ந்த3லி த4ரிஸி தே3ஹத3 ரத2வலங்கரிஸி |**
**எதெ3யொளொப்பலு துளஸிமணிஸர**
**வத3னத3லி தா3ஸோஹவென்னுத**
**பதெ3பதெ3கெ3 சீருத்த குணிவுதெ3 தா3ஸலட்சணவு ||47**

விதியமீரதெ - விதி நிஷேதங்களின்படி (சாஸ்திரங்களில் சொல்லியபடி); பாஹ்யதலி - (புற) தேகத்தில்; ஸன்முததி - புன்னகையுடன்; த்வாதஷ நாம முத்ரெய - 12 நாமங்களை; ஹதுளதிந்தலி - மகிழ்ச்சியுடன்; தரிஸி - தரித்து; தேஹத ரதவலங்கரிஸி - தேக ரதத்தினை அலங்கரித்து; எதெயொளு - இதயத்தில்; துளஸிமணிஸர - துளஸி மணி மாலையை; ஒப்பலு - தரித்து; வதனதலி - வாயில்; பதெபதெகெ - அடிக்கடி (எப்போதும்); தாஸோஹவென்னுத - நான் ஸ்ரீஹரியின் தாஸன் என்றவாறு; சீருத்த குணிவுதெ - கூவியவாறு குதிப்பதே; தாஸ லட்சணவு - ஹரிதாஸ லட்சணம் ஆகும்.

விதிகளில் சொல்லியபடி, புற தேகத்தில் த்வாதஷ நாம முத்திரைகளை மகிழ்ச்சியுடன் தரித்து, இந்த தேக ரதத்தினை அலங்கரித்து, மார்பில் துளஸி மணி மாலையை தரித்து, வாயில் எப்போதும் நான் ஸ்ரீஹரியின் தாஸன் என்றவாறு கூவியவாறு, குதிப்பதே ஹரிதாஸ லட்சணம் ஆகும்.

மாதரிஷ்வனு தே[3]ஹரத[2]தொ[3]ளு
ஸூதனாகி[3]ஹ ஸர்வகாலதி[3]
ஸ்ரீதருணி வல்லப[4] ரதிகனெந்தரிது[3] நித்யத[3]லி |
ப்ரீதியிந்த[3]லி போ[1]ஷிஸூத வா
தாதபாதி[3]க[3]ளிந்த[3] அவிரத[1]
ஈ த[1]னுவினொளு மமதெ[1] பி[3]ட்டிஹனவனெ மஹயோகி[3] ||(5-25)

இந்த ஸாதன ஷரீரத்தை பகவந்தன் அமரும் ஒரு திவ்ய ரதமாக அனுசந்தானம் செய்து, அலங்காரம் செய்ய வேண்டும் என்று ஹரிகதாம்ருதஸாரத்தில், ஸ்ரீஜகன்னாத தாஸர் கூறியிருக்கிறார். நாம் செய்யும் ஸ்னானம் அவனுக்கு செய்யும் அபிஷேகம்; நாம் செய்து கொள்ளும் அலங்காரம், அவனுக்கே செய்யும் அலங்காரம் என அனைத்தையும் நம்முள் இருக்கும் பகவந்தனுக்கே செய்கிறோம் என்று சிந்திக்க வேண்டும்.

நரஜன்ம பந்தாக நாலிகெ இருவாக
கிருஷ்ணா எனபாரதெ

என்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர். எப்போதும் ஸ்ரீகிருஷ்ணா என்று சொல்லிக் கொண்டே இருக்கலாமே என்று கேட்கிறார்.

**லஜ்ஜெ வர்ஜிஸி முத[3]தி[3] காலலி**
**கெ[3]ஜ்ஜெ த[4]ரிஸூத கரதி[3] தாளவ**
**ஹெஜ்ஜெ நர்தனதி[3]ந்த[3] பா[3]ரிஸூத்ஹரிய நாமவனு |**
**க[3]ர்ஜிஸூத ஸஜ்ஜனர ஸத[3]னதி[3]**
**அர்ஜிஸித[3]னர்ப்பிஸூத தி[3]னதி[3]ன**
**அப்[3]ஜப[4]வ பிதனொலிமெ படெ[3]வுதெ[3] தா[3]ஸலக்ஷணவு ||48**

லஜ்ஜெ வர்ஜிஸி - வெட்கத்தை விட்டுவிட்டு; முததி - மகிழ்ச்சியுடன்; காலலி கெஜ்ஜெயெ தரிஸூத - காலில் சலங்கையை தரித்தவாறு;

ஹெஜ்ஜெ நர்தனதிந்த - குதித்து நாட்டியமாடியவாறு; கரதி தாளவ - கையில் தாளத்தை பிடித்துக்கொண்டு; பாரிஸுத்த - வாசித்தவாறு; ஹரிய நாமவனு கர்ஜிஸுத - ஸ்ரீஹரியின் பெயரை உரக்க சொல்லியவாறு; தினதின - தினமும்; ஸஜ்ஜனர ஸதனதி - சஜ்ஜனர்களின் வீடுகளில் (சென்று); அர்ஜிஸிதனர்ப்பிஸுத - விரும்பியவற்றை வேண்டியவாறு (கோரிக்கைகளை விண்ணப்பித்தவாறு); அப்ஜபவ பிதனொலிமெ - பிரம்மதேவனின் தந்தையான ஸ்ரீஹரியின் தரிசனத்தை; படெவுதெ - பெறுவதே ; தாஸலக்ஷணவு - ஹரிதாஸ லட்சணம் ஆகும்.

வெட்கத்தை விட்டு, மகிழ்ச்சியுடன், காலில் சலங்கையை தரித்தவாறு, குதித்து நர்த்தனம் ஆடியவாறு, கையில் தாளத்தை பிடித்துக்கொண்டு, வாசித்தவாறு, ஸ்ரீஹரியின் பெயரை உரக்கச் சொல்லியவாறு, தினமும் ஸஜ்ஜனர்களின் வீடுகளுக்குச் சென்று, பெற்றவற்றை ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தவாறு, பிரம்மதேவனின் தந்தையான ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெறுவதே ஹரிதாஸ லட்சணம் ஆகும்.

ஹரிதாஸன் என்பவன் யார் என்பதை ஸ்ரீவ்யாஸராயர் இந்தப் பாடலில் கூறுகிறார்.

க்ராஸகில்லதே போகி
பரர மனெகள பொக்கு
தாஸனெந்து துளஸி மாலெ தரிஸி
பேஸரில்லதெ அவர காடி பளலிஸுத
காஸுகளிஸுவ புருஷ ஹரிதாஸனே ||
தாஸரெந்தரெ புரந்தர தாஸரய்யா

யாயிவாரவ மாடி விப்ரரிகெ ம்ருஷ்டான்ன
ப்ரீயதலி தானொந்து கொடத லோபி
மாய ஸம்ஸாரதலி மமதெ ஹெச்சாகித்து
காயனவ மாடலவ ஹரிதாஸனே ||
தாஸரெந்தரெ புரந்தர தாஸரய்யா

மேலே உள்ள பத்யத்தில், இந்தப் பாடலில் ஸ்ரீவ்யாஸராயர் கூறியுள்ள விஷயங்களையே இங்கு ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்

விளக்கியிருக்கிறார் என்பதை பார்க்கலாம். இதையே ஸ்ரீவிஜயதாஸரும் தமது ‘ஹரிதாஸ லட்சண ஸுளாதியிலும்’ சொல்லியிருக்கிறார்.

**இத$^{3}$கனந்தர இருதிஹுது$^{3}$ ப$^{3}$ஹு**
**வித$^{3}$வித$^{3}$த$^{3}$ ஸாத$^{4}$னத$^{3}$ மார்க்க$^{3}$வு**
**முத$^{3}$தி$^{3}$ ஜீவர மூலயோக்$^{3}$யதெக$^{3}$ளனு அனுஸரிஸி**
**மத$^{3}$ட$^{3}$னெனிஸதெ$^{3}$ ஸாரி கு$^{3}$ருக$^{3}$ள**
**பதெ$^{3}$பதெ$^{3}$கெ$^{3}$ ஸேவெயலி மெச்சிஸி**
**ஹத$^{3}$வரிது$^{1}$ ஸ்வீகரிஸு தா$^{3}$ஸ்யத$^{3}$ பி$^{3}$ருதி$^{3}$னங்கிதவ ||49**

இதனகந்தர - இதன் பிறகு; ஜீவர மூலயோக்யதெகளனு அனுஸரிஸி - அந்த ஜீவனின் மூலயோக்யதைகளுக்கேற்ப; பஹு விதவிதத - பலவிதமான; ஸாதனத மார்க்கவு - ஸாதனை மார்க்கங்கள்; இருதிஹுது - இருக்கின்றன; முததி - மகிழ்ச்சியுடன்; மதடனெனிஸதெ - அஞ்ஞானியாக இருக்காமல்; ஸாரி - சென்று; குருகள பதெபதெகெ - குருகளின் ஒவ்வொரு தேவைக்கேற்பவும்; ஸேவெயலி மெச்சிஸி - சேவைகளை செய்து அவரை மகிழ்வித்து; ஹதவிரிது - விதிகளை அறிந்து; தாஸ்யத - ஹரிதாஸ்யத்தின்; பிருதினங்கிதவ - விருதான அங்கிதத்தை (அவரிடமிருந்து); ஸ்வீகரிஸு - ஏற்றுக் கொள்;

இதன் பிறகு, ஒரு தக்க குருவினை அடைந்து, அவரிடமிருந்து அங்கிதத்தைப் பெற வேண்டும் என்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

அந்த ஜீவனின் மூலயோக்யதைகளுக்கேற்ப, பலவிதமான, ஸாதனை மார்க்கங்கள் இருக்கின்றன. அஞ்ஞானியாக இருக்காமல், குருகளின் ஒவ்வொரு தேவைக்கேற்பவும், சேவைகளை செய்து, அவரை மகிழ்வித்து, விதிகளின்படி, ஹரிதாஸ்யத்தின் விருதான அங்கிதத்தைப் பெற வேண்டும்.

குருவின் மகிமைகளையும், குருவின் சேவைக்கான பலன்களையும் முன்னர் பல உதாரணங்களுடன் பார்த்திருக்கிறோம்.

ப$^{3}$ரிதெ$^{3}$ ஜலதொளு முளுகி$^{3}$ பி$^{3}$ஸிலொளு

பெரளனெணிஸிதரேனு சத்கு$^3$ரு
ஹிரியரனுசரிஸித$^3$ர மர்மவனரியதி$^3$ஹ நரனு ||(7-14)

ஒரு ஸத்குருவை அணுகி, அவரின் அருளைப் பெறாமல், தீர்த்தக் ஷேத்திரங்களுக்கு செல்வதோ, விரல்களை எண்ணியவாறு பல்வேறு ஜபங்களை செய்வதோ எவ்வித பலன்களையும் தருமா? என்று கேட்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர்.

**தப்தமுத்$^3$ரெய ஹரிய அங்கித**
**ப$^4$க்தியிம் படெ$^3$யத$^3$லெ நித்யதி$^3$**
**உத்தமத$^3$ ஜப ஹோம தபக$^3$ள மாடி$^3$ ப$^2$லவில்ல |**
**தை$^3$த்யரவுக$^3$ள ஸெளெவரல்லதெ$^3$**
**மத்தெ ஸம்ஷய ஸல்ல த$^4$ரிபுது$^3$**
**சித்தஶுத்$^3$தி$^4$ய படெ$^3$து$^3$ பங்கஜனாப$^4$னங்கிதவ ||50**

தப்தமுத்ரெய - தப்த முத்திரையை; ஹரிய அங்கித - ஸ்ரீஹரியின் அங்கிதத்தை; பக்தியிம் படெயதலெ - பக்தியுடன், பெறாமல்; நித்யதி - தினம்தோறும்; உத்தமத - மிகச் சிறந்ததான; ஜப ஹோம தபகள - ஜப, ஹோம, தபங்களை; மாடி பலவில்ல - செய்து எவ்வித பலனும் இல்லை; தைத்யரவுகள - தைத்யர்கள் அவற்றை; ஸெளெவரு - இழுத்துக் கொள்வார்கள்; அல்லதெ - இதற்கு மாறாக; மத்தெ ஸம்ஷய ஸல்ல - வேறெந்த சந்தேகமும் இன்றி; சித்தஷுத்திய படெது - திடமான, தூய்மையான அறிவினைப் பெற்று; பங்கஜனாபனங்கிதவ - ஸ்ரீஹரியின் அங்கிதத்தை; தரிபுது - பெற வேண்டும்.

ஸ்ரீஹரியின் அங்கிதம் என்னும் தப்த முத்திரையை பெறாமல், தினம்தோறும் மிகச் சிறந்ததான ஜப, ஹோம, தபங்களை செய்து எவ்வித பலன்களும் இல்லை. தைத்யர்கள் அவற்றை இழுத்துக் கொள்வார்கள். இதற்கு மாறாக, எவ்வித சந்தேகமும் இன்றி, திடமான, தூய்மையான அறிவினைப் பெற்று, ஸ்ரீஹரியின் அங்கிதத்தைப் பெற வேண்டும்.

நானு நன்னது$^3$ எம்ப$^3$ ஜட$^3$மதி
மானவனு தி$^3$னதி$^3$னதி$^3$ மாடு$^3$வ
ஸ்னான ஜப தே$^3$வார்ச்சனெயெ மொத$^3$லாத$^3$ கர்மக$^3$ள |
தா$^3$னவரு ஸெளெதொ$^3$ய்வரல்லதெ$^3$

ஸ்ரீனிவாஸனு ஸ்வீகரிஸ ம
த்தானெ பக்வ கபித்த2ப2ல ப4க்ஷிஸித3வோலஹுது ||(10-13)

நானே அனைத்தையும் செய்தேன் என்ற கர்வத்துடன் செய்த கர்மங்களை எதையும் ஸ்ரீஹரி ஏற்றுக் கொள்வதில்லை. மாறாக அத்தகைய கர்மங்களை தானவர்கள் இழுத்துக் கொள்கிறார்கள். அதாவது, நமக்கு எவ்வித பலன்களும் வருவதில்லை. இப்படி ஆகிவிடாமல் இருக்க, தக்க ஸாதனைகளை செய்து, மோட்ச பலன்களைப் பெறுவதற்கு ஒரு தக்க குருவை அணுகி, அங்கிதத்தை பெற வேண்டும் என்கிறார் ஸ்ரீரமா காந்த விட்டல தாஸர்.

**மிதிரஹித அம்ஶக3ள த4ரிஸிஹ**
**பதிதபாவன ஸ்வாமி யோக்3யர**
**கதிகெ3 காரணவாகி3 தோருவனொந்து3 அம்ஶத3லி**
**ஸதிகெ3 பதி இப்பந்தெ ஜீவகெ3**
**ஹிதவனிணிஸுவ பி3ம்ப3 நாமக**
**பதிகரிஸி தா த4ரிப நாமவெ மனுஜக3ங்கிதவு ||51**

மிதிரஹித - எல்லைகள் அற்ற; அம்ஷகள - அம்சங்களை; தரிஸிஹ - கொண்ட; பதிதபாவன - பக்தர்களைக் காப்பவனான; ஸ்வாமி - ஸ்ரீஹரி; யோக்யர கதிகெ - தக்க ஸாதனைகளை செய்தவர்களின் முக்திக்கு; காரணவாகி - காரணன் ஆகி; ஒந்து அம்ஷதலி - ஒரு அம்சத்தில்; தோருவ - காட்டிக் கொள்கிறான்; ஸதிகெ பதி இப்பந்தெ - மனைவிக்கு கணவன் உதவிகரமாக இருப்பதைப் போல; ஜீவகெ - அந்த ஜீவனுக்கு; ஹிதவனு - நன்மையையே; எணிஸுவ - நினைக்கிறான்; பிம்ப நாமக - அந்த பிம்பரூபி; பதிகரிஸி - அருளி; தா தரிப - தான் ஏற்றுக் கொள்ளும்; நாமவெ - பெயரே; மனுஜகங்கிதவு - மனிதனுக்கு, அங்கித நாமம் ஆகிறது.

எல்லைகள் அற்ற அம்சங்களைக் கொண்டவனான, பக்தர்களை காப்பவனான, ஸ்ரீஹரி, தக்க ஸாதனைகளை செய்தவர்களின் முக்திக்கு காரணன் ஆகி, ஒரு அம்சத்தில் தன்னை காட்டிக் கொள்கிறான். மனைவிக்கு கணவன் உதவிகரமாக இருப்பதைப் போல, அந்த ஜீவனுக்கு எப்போதும் நன்மையையே நினைக்கிறான். அந்த பிம்பரூபி அருளி, தான் ஏற்றுக் கொள்ளும் பெயரே மனிதனுக்கு அங்கித நாமம் ஆகிறது.

அங்கித நாமம் என்றால் என்ன என்று விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர். பிம்பரூபியின் பெயரே அந்த அங்கித நாமம் என்றும், அந்த பிம்பரூபி பகவந்தன், அந்த பக்தனுக்கு எப்போதும் நலனையே நினைக்கிறான் என்கிறார்.

ஹ்ருத3ய தொ3ளகி3ஹுதஷ்டத3ள கம
லத3ரொளகெ3 ப்ராதே3ஷ நாமக
நுதி3த பா4ஸ்கரனந்தெ தோர்பனு பி3ம்ப3னெந்தெ3னிஸி |
பது3ம சக்ர ஸுஷங்க2 ஸுக2தா3
ங்தகடக முகுடாங்கு3லீயக
பத3க கௌஸ்துப3ஹார க்3ரைவெயாதி3 பூ4ஷிதனு ||(8-6)

நம் இதயத்தில் இருக்கும் அஷ்ட தள கமலத்தில், ப்ராதேஷ நாமகனான பிம்பன், உதய சூரியனைப் போல ஒளிர்கிறான். அவன் அனைத்து வித ஆபரணங்களைக் கொண்டு அலங்கரிக்கப்பட்டுள்ளான்.

அந்தரங்கத கதவு தெரெயிதிந்து
எந்து புண்யத பலவு ப்ராப்தி தொரகிது எனகெ

ஸ்வமூர்த்தி கண மத்ய சச்சிதானந்தெய்க
ரமெதரெயரிந்த லாலிங்கத்வதி |
கமலஜாஜிகளிந்த துதிஸிகொள்ளுத ஹ்ருதய
கமலதொளகிருவ ஸ்ரீவிஜயவிட்டலன கண்டே

ஸ்ரீவிஜயதாஸருக்கு பிம்பரூப தரிசனம் ஆன அனுபவத்தை விளக்கும் பாடல். தனது இதய கமலத்தில் பிம்பனாக இருக்கும் ஸ்ரீவிஜயவிட்டலனை கண்டேன் என்கிறார் ஸ்ரீவிஜயதாஸர்.

**திளியுவரு பி3ரம்மாபரோக்ஷிக3**
**ளொலிது3 உபதே3ஶிபரு ஸத்வர**
**நெலெ திளிது3 ஸத்3த4யவமாடு3த கு1ருஹு தோருத1லி |**
**நிலிஸெ ஸ்ரீஹரி அங்கிதவ நி**
**ஶ்சலதி3 ஞானத3 ப2லவ காம்ப3ரு**
**ஸுலப4தொ3ளகி3து3 லப்4யவாக3து3 அக4வு தொலக3த3லெ ||52**

பிரம்மாபரோக்ஷிகளு - தன்னுடைய ஸாதனைகளை முழுவதுமாக செய்தவர்கள்; திளியுவரு - (இத்தகைய ஸாதனா ஜீவிகளைப் பற்றி) அறிவார்கள்; குருஹு தோதலி - விஷ்ணு பக்தர்களின் சின்னங்களை (முத்ரா, கோபிசந்தனங்களை) தரித்தவாறு; ஒலிது - வந்து; ஸத்வர நெலெ திளிது - இந்த ஜீவரின் நிலையை அறிந்து; ஸத்தயவமாடுத - மிகப்பெரிய கருணையைக் காட்டியவாறு; உபதேஷிபரு - உபதேசம் செய்வார்கள்; ஸ்ரீஹரி அங்கிதவ - ஸ்ரீஹரியின் அங்கிதத்தை; நிஷ்சலதி - திடமாக தீர்மானித்து; நிலிஸெ - கொடுக்க; ஞானத பலவ காம்பரு - (அவருடைய) ஞானத்தின் பலனை காண்பார்; ஸுலபதொளகிது - இது மிகவும் சுலபமாக; அகவு - பாவங்கள் ; தொலகதலெ - பரிகாரம் ஆகாமல்; லப்யவாகது- கிடைக்கக்கூடியது அல்ல.

அங்கிதம் கிடைக்கும் விதத்தைப் பற்றி இங்கு விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

தன்னுடைய ஸாதனைகளை முழுவதுமாக செய்தவர்கள் (குரு), (அங்கிதம் பெறக்கூடிய) ஸாதனா ஜீவிகளை கண்டறிவார்கள். எப்படியென்றால், அந்த ஜீவிகள், விஷ்ணு பக்தர்களின் சின்னங்களை தரித்தவாறு, ஸாதனைகளை செய்ய விரும்பிக் கொண்டிருப்பார்கள். இவர்களுக்கு, ஸ்ரீஹரியின் அங்கிதத்தை, திடமாக தீர்மானித்து கொடுக்க, அவர் (சிஷ்யர்) ஞானத்தின் பலனைக் காண்பார். இந்த அங்கிதமானது, மிகவும் சுலபமாக கிடைக்கக்கூடியது அல்ல.

ஒரு குருவின் லட்சணங்களை இங்கு சொல்கிறார். தக்க சிஷ்யரைக் (அங்கிதம் பெறுவதற்கான தகுதியுள்ள) கண்டுபிடிக்கக்கூடிய லட்சணங்களை அவர் கொண்டிருப்பார்.

இரபேகு ஹரிதாஸர ஸங்க
வரஞானிகள தய ஸம்பாதிஸபேகு ||ப

ஸத்கர்ம மாடபேகு வைஷ்ணவனெனிஸ பேகு
உத்க்ருஷ்ட வைராக்ய பேகு துஷ்ட ஸங்க பிட பேகு
விஷ்ணு தாஸர தாஸனாக பேகு
எஷ்டு கஷ்ட பந்தரு விஷ்ணு பஜிபர ஸங்க ||4

அந்த குருவிற்கு இருக்க வேண்டிய லட்சணங்களின் பட்டியல் இது. 1. ஸத்கர்மங்களை செய்ய வேண்டும் 2. வைஷ்ணவ தீக்ஷை இருக்க வேண்டும் 3. சிறந்த வைராக்கியம் கொண்டிருக்க வேண்டும் 4. துஷ்டர்களின் ஸங்கத்தை விடவேண்டும் 5. விஷ்ணு தாஸர்களின் தாஸன் ஆகவேண்டும் 6. இடைவிடாமல் விஷ்ணு பக்தியைக் கொண்டிருக்க வேண்டும்.

அங்கிதம் பெறக்கூடிய தக்க சிஷ்யரை குரு கண்டடைவதும் ஒரு சுலபமான வழிமுறை அல்ல என்று ஸ்ரீதாஸர் சொல்கிறார். இதனை ஸ்ரீபரமப்ரிய சுப்பராய தாஸர், ஸ்ரீகுருகோவிந்த தாஸர் ஆகியோர் அங்கிதம் வழங்கும் முறைகளை அவரவர்களின் வாழ்க்கை சரிதத்தைப் படித்தால் தெரிந்து கொள்ளலாம்.

குரு மற்றும் சிஷ்யர் இருவரும் பகவந்தனை வேண்டிக்கொண்டு, சங்கல்பம் செய்து, சேவை செய்ய வேண்டும். அந்த சேவா காலத்தில் இருவரில் யாராவது ஒருவருக்கு பகவந்தனின் ப்ரேரணை வர வேண்டும். அப்படி வந்தால், அங்கிதம் வழங்கப்படும். இல்லையெனில், சேவா காலம் தொடரும். இப்படியாக, பகவந்தனின் ப்ரேரணையைப் பெற்றே ஹரிதாஸர்கள் அங்கிதம் வழங்கி வந்தனர் என்பதை அறியலாம். அந்தந்த சிஷ்யர்களின் தகுதிப்படி, விரைவிலோ / தாமதமாகவோ அங்கிதம் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது என்பதையும் அறிகிறோம்.

**ஜனும த[4]ரிஸித[3]மேலெ தன்னய**
**தனுவ லாலிஸி தந்தெ[3]தாய்க[3]ளு**
**அனுனயதி[3] பெஸரிடு[3]த கரெவுது[3] லோக வ்யவஹார |**
**ருணதொ[3]ள்ஹுட்டித[3] ருணத[3] நாமவு**
**தனுவினொந்தி[3]கெ[3] போபுத[3]ல்லதெ[3]**
**இனிது ஸத்க[3]திகெ[3]ணிகெயாக[3]து[3] ப[4]வவ தொலகி[3]ஸது[3] ||53**

ஜனும தரிஸிதமேலே - இந்தப் பிறவியை எடுத்தபின்; தன்னய தனுவ லாலிஸி - தன் தேகத்தை வளர்த்து; தந்தெதாய்களு - பெற்றோர்; அனுனயதி - பிடித்த மாதிரியான; பெஸரிடுத - பெயரை வைத்து; கரெவுது - அழைப்பது; லோக வ்யவஹார - உலகத்து நடைமுறை வழக்கமாகும்; ருணதொள்ஹுட்டித - ருணத்தினால் பிறந்த ; ருணத நாமவு - இந்த ருணத்தின் பெயர்; தனுவினொந்திகெ - இந்த

உடம்புடனேயே; போபுதல்லதெ - போய்விடுமே தவிர; இனிது ஸத்கதிகெ - இனிமையான ஸத்கதிக்கு; எணிகெயாகது - காரணம் ஆகாது; பவவ தொலகிஸது - ஸம்ஸார பந்தனத்தை விடுவிக்காது.

நம்முடைய வ்யவஹார பெயருக்கும், அங்கிதத்திற்குமான வித்தியாசத்தை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

இந்தப் பிறவியை எடுத்தபின், இந்த தேகத்தை நம் பெற்றோர் வளர்த்து, தமக்குப் பிடித்தமான பெயரை வைத்து, அழைப்பது உலக நடைமுறை வழக்கமாகும். ஜீவர்களின் ப்ராரப்த கர்மங்களுக்கேற்ப, அந்த ருணங்களால் பிறந்து, வைக்கப்பட்ட இந்தப் பெயர், இந்த உடம்பு மறைந்தவுடன் போய்விடுகிறது. தக்க ஸத்கதிக்கு இது காரணம் ஆகாது. இந்த (வ்யவஹார) பெயர், ஸம்ஸார பந்தனத்தை விடுவிக்காது.

அங்கிதப் பெயரானது, நமக்குள் இருக்கும் பிம்பமூர்த்தியின் பெயர் என்பதை பார்த்தோம். அதுவே ஸாதனைக்கான, முக்திக்கான மார்க்கத்தில் உதவும் பெயர் ஆகும். ஸம்ஸார பந்தனத்தை விடுவிக்கும் பெயர் ஆகும். பிம்ப அபரோக்ஷத்திற்காக, நாம ஜபம் செய்வதற்கு தக்க பெயர் அதுவே (அங்கிதம்) ஆகும் என்பதையே இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

அத்தகைய அங்கிதப் பெயர் இல்லாமல், நமக்கு பிறந்ததும் வைக்கப்பட்ட, அனைவராலும் அழைக்கப்படும் நமது வ்யவஹார பெயர் அதற்கு (முக்திக்கு / பிம்ப அபரோக்ஷத்திற்கு / ஸம்ஸார பந்தனத்தை விடுவிப்பதற்கு) உதவாது என்கிறார்.

**கு$^{3}$ருக$^{3}$ளிந்த$^{3}$லி தொ$^{3}$ரகித$^{3}$ங்கித**
**பரிய ப$^{3}$ண்ணிஸலளவெ ஹ்ருத்க$^{3}$த**
**ஹரியு ஜீவகெ ஸர்வகாலதி$^{3}$ பி$^{3}$ம்ப$^{3}$னெந்தெ$^{3}$னிஸி |**
**ஸ்மரணெகொ$^{3}$த$^{3}$கு$^{3}$வ நாமவிது$^{3}$ ஸலெ**
**ஹருஷ காரண ஜனுமஜனுமகெ$^{1}$**
**கரெகரெய ப$^{4}$வஸரதி$^{4}$ தா$^{4}$டிஸி நிருத பொரெயுவுது$^{3}$ ||54**

குருகளிந்தலி - குருகளிடமிருந்து; தொரகிதங்கித - கிடைத்த அங்கிதத்தின்; பரிய - சிறப்பினை; பண்ணிஸலளவெ - வர்ணிக்க முடியுமா? (முடியாது); ஹ்ருத்கத ஹரியு - இதயத்தில் இருப்பவனான ஸ்ரீஹரி; ஸர்வகாலதி - எல்லா காலங்களிலும்; ஜீவகெ - ஜீவனுக்கு; பிம்பனெந்தெனிஸி - பிம்பனாக இருந்து; ஸ்மரணெகொதகுவ - சிந்தனைக்கு வருவதான; நாமவிது - பெயர் இது; ஸலெ ஹருஷ காரண - நிரந்தரமான மகிழ்ச்சிக்குக் காரணமாகிறது; ஜனுமஜனுமகெ - அனைத்து பிறவிகளுக்கும்; கரெகரெய - திரும்பத்திரும்ப வரும்; பவஷரதி - சம்சார சுழற்சியை; தாடிஸி - தாண்டச் செய்து; நிருத பொரெயுவுது - நிரந்தரமாக காக்கிறது.

பிம்ப அபரோக்ஷத்தை பெற்றுத் தருவதான அங்கிதத்தின் சிறப்புகளை இங்கு தொடர்ந்து விவரிக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

குருகளிடமிருந்து கிடைத்த அங்கிதத்தின் சிறப்புகளை நம்மால் வர்ணிக்க முடியுமா? (முடியாது). இதயத்தில் இருப்பவனான ஸ்ரீஹரி, அனைத்து காலங்களிலும் ஜீவனுக்கு பிம்பனாக இருந்து, அவனுடைய சிந்தனைக்கு வருவான். இதுவே அவனது நிரந்தரமான மகிழ்ச்சிக்கு காரணம் ஆகிரது. அனைத்து பிறவிகளுக்கும் திரும்பத்திரும்ப வருவதான, சம்சார சுழற்சியை தாண்டச் செய்து, அவனை நிரந்தரமாக காக்கிறது.

**ஸருவ லக்ஷணப⁴ரிதளாகி³ரு**
**திருவ தருணிய கொரள மத்⁴யதி³**
**வர ஸுமாங்க³ல்யவனு காணத³லிருவ தெரெனந்தெ ।**
**த⁴ரிஸத³லெ அங்கிதவ தே³ஹகெ**
**த⁴ரணி மெச்சுவ தெரதி³ தா³ஸ்யத³**
**சரிய தோரித³ரேனு நிஷ்ப²ல ஹரியு தானொலிய ।।55**

ஸருவ லக்ஷண பரிதளாகிருதிருவ - அனைத்து லட்சணங்களையும் கொண்டிருப்பவளான; தருணிய கொரள மத்யதி - ஒரு பெண்ணின் கழுத்தின் நடுவில்; வர ஸுமாங்கல்யவனு - சிறந்த மாங்கல்யத்தை; காணதலிருவ தெரெனந்தெ - காணாததைப் போன்ற; தேஹகெ - இந்த தேகத்தில்; அங்கிதவ தரிஸதலெ - அங்கிதத்தை தரிக்காமல்; தரணி மெச்சுவ தெரதி - உலகமே போற்றும்படியாக; தாஸ்யத சரிய - தாஸ்யத்தின் செயல்களை; தோரிதரேனு - செய்து காட்டினால் என்ன

பயன்?; நிஷ்பல - அது பலன்களைக் கொடுப்பதில்லை; ஹரியு தானொலிய - ஸ்ரீஹரி அதனால் மகிழ்வதில்லை.

அங்கிதத்தின் சிறப்பினை மேலும் இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

அனைத்து சுப லட்சணங்களையும் கொண்டவளான ஒரு பெண்; அவளின் கழுத்தில் மாங்கல்யம் இல்லையென்றால், ஏதோவொன்று குறைந்ததைப் போல் தோன்றும். அதைப் போலவே, அனைத்து விதமான தாஸ்யத்தின் செயல்களையும் செய்து, அங்கிதம் மட்டும் பெறாமல் இருந்தால், அத்தகைய செயல்களின் பலன்கள் எதுவும் கிடைப்பதில்லை. ஸ்ரீஹரியும் மகிழ்வதில்லை.

**க$^3$ருவிகெய மாதல்ல ஹிரியரு**
**அரஸி நோட$^3$லிப$^3$ஹது$^3$ யதிக$^3$ளு**
**த$^4$ரிஸூதா$^1$ஸ்ரமநாம தா$^3$ஸரு ஹரிய அங்கிதவ |**
**மெரெத$^3$ரல்லதெ$^3$ எரடு$^3$ பக்ஷதி$^3$**
**நெரெ பரம்பரெயிந்த$^3$ ஸித்$^3$த$^4$வு**
**கு$^3$ருப்ரஸாத$^3$தொ$^3$ளதி$^4$க$^1$வெனிபுது$^3$ ஸதத ஸுக$^2$வித்து ||56**

கருவிகெய மாதல்ல - இது கர்வத்தினால் சொல்லப்பட்ட விஷயம் அல்ல; ஹிரியரு அரஸி நோடலிபஹுது - பெரியவர்கள் ஆராய்ந்து பார்த்து அறியலாம்; யதிகளு ஆஸ்ரம நாம - யதிகள் தங்களின் ஆசிரம நாமத்தையும்; தாஸரு ஹரிய அங்கிதவ - ஹரிதாஸர்கள் ஹரியின் அங்கிதத்தை; தரிஸூத - தரித்தவாறு; மெரெதரு - திகழ்ந்தனர் (இருந்தனர்); அல்லதெ - இதனால்; எரடு பக்ஷதி - இரு வழிகளிலும்; நெரெ பரம்பரெயிந்த - வளர்ந்து வந்த பரம்பரையினால்; ஸதத ஸுகவித்து - நிரந்தரமான சுகத்தைக் கொடுத்து; குருப்ரஸாததொளு - குருகளின் பிரஸாதத்தில்; அதிகவெனிபுது - இது உயர்ந்த நிலை என்பது; ஸித்தவு - இது நிச்சயமாகிறது;

அங்கித நாமத்தின் சிறப்பினை விளக்கியவாறு, ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர், அதனை யதிகளின் ஆசிரம நாமத்துடன் ஒப்பிட்டு சொல்கிறார்.

இது கர்வத்தினால் சொல்லப்பட்ட விஷயம் அல்ல. கற்றறிந்தவர்கள் ஆராய்ந்து பார்த்து அறியலாம். யதிகள் தங்களின் ஆசிரம நாமத்தையும், ஹரிதாஸர்கள் தங்களின் அங்கித நாமத்தையும் தரித்தவாறு, திகழ்ந்தனர். இந்த இரு வழிகளிலும் (யதி பரம்பரை, ஹரிதாஸ பரம்பரை) வளர்ந்து வந்த பரம்பரையால், அவரவர்களுக்கு அது நிரந்தரமான சுகத்தைக் கொடுத்தது. குருகளின் பிரஸாதத்தினால் இதுவே உயர்ந்த நிலை என்பது நிச்சயமாகிறது.

**ஹலவு ஜன்மதொ$^3$ளலவ போ$^3$த$^4$ர**
**செலுவ மதவனு பொந்தி$^3$ ப$^3$ருதலி**
**ஹலத$^4$ரானுஜனன்னு பூஜிஸி ஹலவு ஜன்மத$^3$லி |**
**ஹலவு ஜன்மத$^3$ த்$^4$யான ஜபதப**
**ஹலவு ஜன்மத$^3$ புண்யராஶியு**
**மிளிதவாகு$^3$வ ப$^2$லிஸித$^3$ல்லதெ$^3$ தொ$^3$ரகத$^3$ங்கிதவு ||57**

ஹலவு ஜன்மதொளு - பற்பல பிறவிகளில்; அலவ போதர - ஸ்ரீமன் மத்வாசார்யரின்; செலுவ மதவனு - சிறந்த மதத்தை; பொந்தி பருதலி - அடைந்து வருவது என்பது; ஹலவு ஜன்மதலி - பற்பல பிறவிகளில்; ஹலதரானுஜனன்னு பூஜிஸி - பலராமனின் தம்பியான ஸ்ரீகிருஷ்ணனை பூஜித்து; ஹலவு ஜன்மத - பற்பல பிறவிகளில் செய்த; த்யான ஜபதப - தியான ஜபதப (அவற்றின் பலனால்); ஹலவு ஜன்மத - பற்பல பிறவிகளில் சேர்ந்த; புண்யராஷியு - புண்ணியங்கள்; மிளிதவாகுவ - இவை அனைத்தும் சேர்ந்ததாலேயே; பலிஸிது - பலித்தது; அல்லதெ - (இவ்வாறு) இல்லையெனில்; தொரகதங்கிதவு - அங்கிதம் கிடைக்காது.

அங்கிதம் கிடைப்பதற்கான தகுதிகளை ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர் இந்த பத்யத்தில் விளக்குகிறார்.

பற்பல பிறவிகளில், ஸ்ரீமன் மத்வாசார்யரின் சிறந்த மதத்தை அடைந்து வருவது என்பது, பற்பல பிறவிகளில் பலராமனின் தம்பியான ஸ்ரீகிருஷ்ணனை பூஜித்து, பற்பல பிறவிகளில் செய்த தியான ஜபதபங்களை செய்து, அவற்றின் பலனால் சேர்ந்த புண்ணியங்களாலேயே, இந்த பிறவியில் அங்கிதம் கிடைத்திருக்கிறது. இல்லையேல் கிடைத்திருக்காது.

ஏஸு காயங்கள களெது எம்பத்நால்கு லக்ஷ
ஜீவ ராஷியன்னு தாடி பந்த ஈ ஷரீர
(தாஸனாகு விஸேஷனாகு - ஸ்ரீகனகதாஸர்)

இவ்வளவு நீண்ட பயணத்தினை செய்து வந்திருக்கும் இந்த தேகமானது, அர்த்தமானதாக ஆகவேண்டுமெனில், தாஸன் ஆகவேண்டும் - என்கிறார் ஸ்ரீகனகதாஸர்.

அந்தந்த பிறவிகளில் சேர்த்த புண்ணியங்களாலேயே, இந்தப் பிறவியில் அங்கிதம் கிடைத்திருக்கிறது என்பதை விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

**ஏஸு பேளுவதே$^{3}$னு விட்டலன**
**தா$^{3}$ஸனெனிஸாலஸ்ய மாட$^{3}$தெ$^{3}$**
**தா$^{3}$ஸவர்யர த$^{3}$யவ க$^{3}$ளிஸுத க்லேஶவீடா$^{3}$டு$^{3}$**
**தா$^{3}$ஸனாக$^{3}$தெ$^{3}$ ஒலிய ஸ்ரீ கம**
**லேஶனெம்பு$^{3}$த$^{3}$ திளிது$^{3}$ பா$^{4}$வதி$^{3}$**
**தா$^{3}$ஸ பி$^{3}$ருத$^{3}$னு த$^{4}$ரிஸலப்புது$^{3}$ நாஶரஹித ஸுக$^{2}$ ||58**

ஏஸு - எவ்வளவுதான்; பேளுவதேனு - சொன்னால் என்ன?; விட்டலன - ஸ்ரீவிட்டலனின்; தாஸனெனிஸு - தாஸன் என்று சொல்; ஆலஸ்ய மாடதெ - எவ்வித தயக்கமும் இன்றி; தாஸவர்யர தயவ களிஸுத - ஸ்ரீவாயுதேவரின் அருளை விரும்பியவாறு; க்லேஷவீடாடு - சந்தேகத்தை விட்டுவிடு; தாஸனாகதெ ஒலிய - தாஸன் ஆகாமல் மகிழ மாட்டான்; ஸ்ரீகமலேஷ - ஸ்ரீஹரி; எம்புத திளிது - என்பதை அறிந்து; பாவதி - மகிழ்ச்சியுடன் (பெருமையுடன்); தாஸ பிருதனு - அங்கிதத்தை; தரிஸலு - ஏற்றுக் கொண்டால்; நாஷரஹித ஸுக - அழிவில்லா சுகம் (மோட்சம்); அப்புது - கிடைக்கிறது.

எவ்வித தயக்கமும் இன்றி, ஸ்ரீவிட்டலனின் தாஸன் நான் என்று சொல். ஸ்ரீவாயுதேவரின் அருளை விரும்பியவாறு, நாம் அவனின் தாஸன் ஆகாமல் மகிழ மாட்டான் ஸ்ரீஹரி என்பதை அறிந்து, மகிழ்ச்சியுடன் (பெருமையுடன்), அங்கிதத்தை ஏற்றுக் கொண்டால், அழிவில்லா சுகம் (மோட்சம்) கிடைக்கிறது.

ஆஷ க்லேஷ தோஷவெம்ப அர்த்தியொளு முளுகி
யமன பாஷக்கொளகாகதெ நிர்தோஷி ஆகு ஸந்தோஷி ஆகு
(தாஸனாகு விஸேஷனாகு)

ஆசை, துக்கம் ஆகிய தோஷங்களில் சிக்கிக் கொள்ளாமல், நிர்தோஷனாக இருந்து, ஸ்ரீஹரியின் தாஸன் ஆக வேண்டும் - என்று அறிவுறுத்துகிறார் ஸ்ரீகனகதாஸர்.

**முன்னெ விஸ்தரிஸிருவ பரியலி**
**புண்யதொ$^{3}$ள்ஸம்ப்ராப்த க$^{4}$ன ஸம்**
**பன்னத$^{1}$னு பொந்தி$^{3}$ரலு தன்னய கார்யவனு நெனெது$^{3}$ |**
**இன்னிதர விஷரூப விஷயவ**
**மண்ணினந்த$^{3}$தி$^{3}$ திளிது$^{3}$ காலவ**
**சின்னதோ$^{3}$பாதி$^{3}$யலி கு$^{3}$ணிஸுத தத்வபரனாகு$^{3}$ ||59**

முன்னெ விஸ்தரிஸிருவ பரியலி - முன்னரே நாம் பார்த்ததைப் போல; புண்யதொள் - புண்ணியத்தினால்; ஸம்ப்ராப்த - கிடைத்த; கன ஸம்பன்னதனு - சிறந்த விலைமதிப்பற்ற தேகம்; பொந்திரலு - வந்திருக்க; தன்னய கார்யவனு நெனெது - செய்ய வேண்டிய செயல்களை நினைத்து; இன்னிதர - மற்ற; விஷரூப விஷயவ - விஷத்திற்கு சமானமான விஷயங்களை; மண்ணினந்ததி - மண் போல துச்சமாகவும்; காலவ - காலத்தை; சின்னதோபாதியலி - தங்கத்தைப் போலவும்; திளிது - அறிந்து; குணிஸுத - குதித்தாடியவாறு; தத்வபரனாகு - தத்வத்தை தேடியவாறு இரு.

காலத்தின் மதிப்பினையும், செய்ய வேண்டிய செயல்களின் முக்கியத்துவத்தையும் இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

மேலே பார்த்தவாறு, பிறவிப்பயன்களால் (புண்ணியங்களால்) இந்த சிறந்த விலைமதிப்பற்ற தேகம் வந்திருக்க, செய்ய வேண்டிய செயல்களை நினைத்து; மற்ற (கெட்ட) செயல்களை விஷத்திற்கு சமானமாக, மண் போல துச்சமாக நினைத்து; காலத்தை தங்கத்தைப் போலவும் அறிந்து; மகிழ்ச்சியில் குதித்தாடியவாறு, தத்வத்தை தேடியவாறு இரு.

இந்த தேகம் கிடைத்தது அரிதானது, மிகச் சிறப்பானது, இதனை வீணடிக்கக்கூடாது என்பதற்கான உதாரணங்களாக ஹரிதாஸர்களின் பல கிருதிகளை முன்னரே மேலே பார்த்திருக்கிறோம் என்பதால் மறுபடி இங்கே கொடுக்கவிலை.

**இருதிஹது$^{3}$ அல்பாயு அத$^{3}$ரொளு**
**இரளு ஷைஷவ வார்த்தி$^{2}$கவு வி**
**ஸ்மரணெ ப்ராயத$^{3}$ மத$^{3}$தி$^{3}$ போகு$^{3}$து$^{1}$ளிவ கெலதி$^{3}$னதி$^{3}$ |**
**ப$^{3}$ரிதெ$^{3}$ த$^{1}$னு த$^{4}$ன மமதெ தாளதெ$^{3}$**
**பர விசாரதொ$^{3}$ளெரகி$^{3}$ஸுத மன**
**கு$^{3}$ருகருண ஹரிக்ருபெய பொந்து$^{3}$வ யத்னெகெ$^{3}$ய்யுவுது$^{3}$ ||60**

இருதிஹது - இருப்பதே; அல்பாயு - அல்ப ஆயுள்; அதரொளு - அதில்; இரளு - இரவு; ஷைஷவ - மழலை; வார்த்திகவு - முதுமை; விஸ்மரணெ - மயக்கம்; ப்ராயத மததி - வாலிப கர்வத்தில்; போகுது - போய்விடுகிறது; உளிவ கெலதினதி - (இவ்வளவுக்குப் பிறகு) இருக்கும் சில நாட்களில்; பரிதெ - அதிகப்படியான; தனு தன மமதெ - தேகம், செல்வத்தின் கர்வம்; தாளதெ - கொள்ளாமல்; பர விசாரதொளு - பகவந்தனின் விஷயத்தில்; மன எரகிஸுத - மனதை நிறுத்தியவாறு; குருகருண - குருவின் கருணையை; ஹரிக்ருபெய - ஸ்ரீஹரியின் அருளை; பொந்துவ - அடையும்; யத்னெகெய்யுவுது - முயற்சியை செய்ய வேண்டும்.

நமக்குக் கிடைத்திருக்கும் இந்த அரிய பிறவியில், கிடைத்த நேரத்தில், ஆத்யாத்மிக ஸாதனையை செய்ய வேண்டும் என்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

இருப்பதே அல்ப ஆயுள். அதில் இரவு, மழலை, முதுமை, மயக்கம், வாலிப கர்வம் ஆகிய அனைத்து நிலைகளில் காலம் போய்விடுகிறது. இவ்வளவுக்குப் பிறகு, இருக்கும் சில நாட்களில், தன் தேகம், செல்வத்தைப் பற்றிய அதிகப்படியான கர்வத்தை கொள்ளாமல், பகவந்தனின் விஷயத்தில் மனதை நிறுத்தியவாறு, குருவின் கருணையை, ஸ்ரீஹரியின் அருளை அடையும் முயற்சியை செய்ய வேண்டும்.

வருஷ நூராயுஷ்யவதரொளு இருளு களெதெய்வத்து ஐவ
த்தரல்லி வார்த்திக பால்ய கௌமார்யதலி மூவத்து
இரதெ ஸந்தது பளிக இப்பத்வருஷ வதரொள காதுதந்த:
கரண நின்னொளு தோரி ரக்ஷிஸு நம்மனனவரத ||80

ஹரிபக்திஸார' வில் ஸ்ரீகனகதாஸர் கூறியிருப்பதையே இங்கு ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர், விளக்கியிருக்கிறார். ஆயுள் 100 ஆண்டுகள் எனக் கொண்டால்; அதில் இரவு 50 ஆண்டுகள்; மழலை, பால்யம், முதுமை என 30 ஆண்டுகள் போய்விட்டால்; மிச்சம் இருப்பது 20 ஆண்டுகளே. அந்த ஆண்டுகளில் நான் உன்னையே நினைக்குமாறு எனக்கு அருள்புரிவாயாக என்கிறார் ஸ்ரீகனகதாஸர்.

**ஸ்ரவண மனன த்$^{4}$யானரூபத$^{3}$**
**த்ரிவித$^{3}$ ஸாத$^{4}$ன முக்$^{2}$யவித$^{3}$ரொளு**
**விவித$^{4}$ விதி$^{3}$த ஸுகர்ம ஸமுதா$^{3}$யக$^{3}$ளு அட$^{3}$கி$^{3}$ஹவு |**
**தவகதி$^{3}$ந்த$^{3}$னுப$^{4}$வதி$^{3}$ திளியுத**
**கவித$^{3}$ மோஹவ களெது$^{3}$ ஞானதி$^{3}$**
**ப$^{4}$வத$^{3}$ ப$^{3}$ந்த$^{4}$ன நீகி$^{3}$ ஸாதி$^{4}$ஸு பரமபத$^{3}$வன்னு ||61**

ஸ்ரவண மனன த்யானரூபத - ஸ்ரவண, மனன, த்யான என்பதான; த்ரிவித ஸாதன - மூன்று விதமான சாதனைகள்; முக்யவு - முக்கியமானவை; இதரொளு - இவற்றில்; விவித - பல்வேறு; விதித - விதிப்படியான; ஸுகர்ம ஸமுதாயகளு - பல நல்ல கர்மங்கள் (செயல்கள்) அடங்கியிருக்கின்றன; தவகதிந்த - ஆர்வத்துடன்; அனுபவதி - அனுபவப்பட்டு; திளியுத - தெரிந்துகொண்டு; கவித - தன்னை சூழ்ந்த; மோஹவ - ஆசையை; களெது - துறந்து; ஞானதி - நல்லறிவுடன்; பவத பந்தன நீகி - பிறப்பு இறப்பு சுழற்சியினை நீக்கிக் கொண்டு; பரமபதவன்னு - பரமபதத்தை (முக்தியினை); ஸாதிஸு - அடைவாயாக.

முக்திக்கான மார்க்கத்தை இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

ஸ்ரவண, மனன, த்யான என்னும் மூன்று விதமான ஸாதனைகள் முக்கியமானவை. இவற்றில் பல்வேறு விதிப்படியான பல நல்ல கர்மங்கள் (செயல்கள்) அடங்கியிருக்கின்றன. அத்தகைய

செயல்களை ஆர்வத்துடன், செய்து, தெரிந்து கொண்டு, தன்னை சூழ்ந்த ஆசையை துறந்து, நல்லறிவினைப் பெற்று, பிறப்பு இறப்பு சுழற்சியை நீக்கிக்கொண்டு, பரமபதத்தினை (முக்தியை) அடைவாயாக.

த4னவ ஸம்பாதி3ஸுவ ப்ரத்3ரா
வணிகரந்த3தி3 கோவித3ர மனெ
மனெக3ளலி ஸஞ்சரிஸு ஷாஸ்த்ர ஸரவண கோ3ஸுக3தி3 |
மனனகை3து3பதே3ஷிஸுத து3
ர்ஜனர கூடா3ட3தி3ரு ஸ்வப்னதி3
ப்ரணதகாமத3 கொடு3வ ஸௌக்2யவனிஹ பரங்க3ளலி ||28

ஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாததாஸர் ஸ்ரவண, மனன, தியானங்களின் முக்கியத்துவத்தை இவ்வாறாக சொல்லியிருக்கிறார். சஜ்ஜனர்களின் சங்கத்திற்காக வீடுவீடாகச் சென்று, அவர்கள் கூறுவதை ஸ்ரவணம் செய்து, பின் அதனை மனனம் செய்து, பிறருக்கும் உபதேசம் செய்தால், இஹபரங்களிலும் சுகம் கிடைக்கிறது என்று தாஸராயர் கூறுகிறார்.

ஸ்ரீமன் மத்வாசார்யர் வாக்கு இது - ஸ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: - ஸ்ரவண, மனன, நிதித்யாஸன - ஸ்ரவண (கேட்டல்) இதுவே முதலில். பின்னர் இதிலிருந்து ஸ்மரணை (நினைத்தல்). இது ஸ்ரீஹரியைப் பற்றியே இருக்கவேண்டும்.

**ஸ்ரீனிவாஸனு ஹ்ருத3யமத்4யதி3**
**த்4யானதி3ந்த3லி பொளெவனல்லதெ3**
**காணிஸது3 அன்யோபாய த்4யானத3 ஹொரது மத்தொந்து3 |**
**த்4யானவெம்பு3து3 மனனஸாத்4யவு**
**த்4யானமனனவு ஶ்ரவணஸாத்4யவு**
**ஈ நிமித்ததி3 ஶ்ரவணமாள்புது3 ஞானிக3ள ஸாரி ||62**

ஸ்ரீனிவாஸனு - ஸ்ரீஹரியானவன்; ஹ்ருதயமத்யதி - நம் இதய கமலத்தில்; தியானதிந்தலி - தியானத்தினால் மட்டுமே; பொளெவனு - காட்டிக் கொள்கிறான்; அல்லதெ - அல்லாமல்; த்யானத ஹொரது - தியானத்தைத் தவிர; மத்தொந்து - வேறொரு; அன்யோபாய - வேறு வழியில்; காணிஸது - தெரியாது (அவன் தெரிவதில்லை);

த்யானவெம்புது - தியானம் என்பது; மனனஸாத்யவு - மனனத்தால் மட்டுமே ஸாத்தியம்; த்யான மனனவு - தியானம், மனனம் இரண்டுமே; ஸ்ரவணஸாத்யவு - சிரவணத்தால் மட்டுமே ஸாத்தியம்; ஈ நிமித்ததி - ஆகவே; ஞானிகள ஸாரி - ஞானிகளை அடைந்து; ஸ்ரவண மாள்புது - சிரவணம் செய்ய வேண்டும்.

பிம்ப தரிசனத்திற்கு தியானமே முக்கியம்; அந்த தியானத்திற்கு சிரவணம் தேவை என்பதை இந்த பத்யத்தில் வலியுறுத்துகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

ஸ்ரீஹரியானவன், நம் இதய கமலத்தில் தியானத்தினால் மட்டுமே காட்டிக் கொள்கிறான். தியானத்தைத் தவிர, வேறொரு வழியில் அவன் தெரிவதில்லை. தியானம் என்பது மனனத்தால் மட்டுமே ஸாத்தியம். தியானம், மனனம் இரண்டுமே சிரவணத்தால் மட்டுமே ஸாத்தியம். ஆகவே, ஞானிகளை அடைந்து, அவர்கள் சொல்வதை சிரவணம் செய்ய வேண்டும்.

ஸ்ரவணத்தின் சிறப்பினை இந்த மற்றும் அடுத்த இரு பத்யங்களில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர். இதனை ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதஸாரத்தில் மிகவும் அழகாக சொல்லியிருப்பார்.

ஸ்ரவண மனனானந்த$^{3}$வீவுது$^{3}$
ப$^{4}$வஜனித து$^{3}$க்க$^{2}$க$^{3}$ள க$^{1}$ளெவுது$^{3}$
விவித$^{4}$ போ$^{4}$க$^{3}$வ னிஹபரங்களலித்து ஸலஹுவுது$^{3}$ |
பு$^{4}$வனபாவன நெனிப லகுமி
த$^{4}$வன மங்க$^{3}$ள க$^{1}$தெ$^{2}$ய பரமோ
த்ஸவதி$^{3}$ கி$^{1}$விகொ$^{3}$ட்டாலிபுது$^{3}$ பூ$^{4}$ஸுரரு தி$^{3}$னதி$^{3}$னதி$^{3}$ ||1

பரமாத்மனின் கதைகளைக் கேட்கும்போது பேரானந்தம் ஆகிறது. நவகாதம்பரிகளை (நவீன நாவல்களை) படிக்கும்போதுகூட மகிழ்ச்சியே ஆகிறது. அதனால் என்ன என்று கேட்டால், அதில் கர்ணானந்தம் (கேட்கும் மகிழ்ச்சி) மட்டுமே ஆகும். இதில் சம்சாரத்திலிருந்து விடுதலையும் ஆகிறது. இதுமட்டுமல்லாமல், அனைத்து துக்கங்களையும் பரிகரித்து பரலோகத்திலும் பற்பல விதமான போகங்களைக் கொடுத்து சுகத்தையும் கொடுக்கிறது. ஆகையால், இத்தகைய லோகபாவனனான, ஸ்ரீரமாபதியின் மங்கள

கதையை மிகுந்த மகிழ்ச்சியுடன் பக்தர்கள் அனைவரும் கேட்கவேண்டும்.

**ஶ்ரவணவே மஹ முக்[2]ய கர்மவு**
**ஶ்ரவணவே ப[4]வபீ[4]தி ஹரணவு**
**ஶ்ரவணதி[3]ந்த[3]லி ஞானப[4]க்தி விரக்தி ஸல்லுவுது[3] |**
**ஶ்ரவணதி[3]ம் து[3]ஷ்கர்ம நாஷன**
**ஶ்ரவண மனுஜகெ[3] மங்க[3]ளப்ரத[3]**
**ஶ்ரவண மாட[3]த[3]தனக தொ[3]ரெயது[3] ஹரிய ஸுக்[3]ஞான ||63**

ஸ்ரவணவே - சிரவணமே; மஹ முக்ய கர்மவு - மிகவும் முக்கியமான கர்மம் ஆகும்; பவபீதி ஹரணவு - பிறப்பு இறப்பு சுழற்சியின் பயத்தை போக்குகிறது; ஞான பக்தி விரக்தி - ஞான பக்தி விரக்தி ஆகியவற்றை; ஸல்லுவுது - அடையச் செய்கிறது; துஷ்கர்ம நாஷன - கெட்ட கர்மங்களை போக்குகிறது; மனுஜகெ - மனிதனுக்கு; மங்களப்ரத - மங்களத்தை கொடுக்கிறது; மாடததனக - செய்யாத வரைக்கும்; தொரெயது - கிடைக்காது; ஹரிய ஸுக்ஞான - ஸ்ரீஹரியைப் பற்றிய ஸுக்ஞானம் கிடைக்காது.

சிரவணத்தின் சிறப்பினை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

சிரவணமே மிகவும் முக்கியமான கர்மம் ஆகும். பிறப்பு இறப்பு சுழற்சியின் பயத்தினை இது போக்குகிறது. ஞான பக்தி விரக்தி ஆகியவற்றை அடையச் செய்கிறது. கெட்ட கர்மங்களை போக்குகிறது. மனிதனுக்கு மங்களத்தைக் கொடுக்கிறது. இதனை செய்யாத வரை, ஸ்ரீஹரியைப் பற்றிய ஸுக்ஞானம் கிடைக்காது.

ஸ்ரவணவே மஹா முக்ய கர்ம ஞானிகளிகெ
ஸ்ரவணவில்லத தனக ஆவது தொரகது
ஸ்ரவணதிந்தலி சதத ஞான பகுதி விரகுதி
ஸ்ரவணவெ சகலக்கு காரண காரணவோ
ஸ்ரவணவெ ஸ்ரீஹரிய தாத்விக ப்ரஸா
தவனு மாடிகொட்டு முக்திகெ ஐதிபரோ

என்று ஸ்ரீவிஜயதாஸர் தனது ஒரு ஸுளாதியில் ஸ்ரவணத்தின் சிறப்பினை விளக்குகிறார். பகவந்தனின் மகிமையை அறிவதற்கு, சத்கர்மங்களை செய்வதற்கு, நித்ய - நைமித்திக சாதனைகளை செய்வதற்கு, மற்றவரை ஞானாதிகாரியாக மாற்றுவதற்கு - இப்படி பல செயல்களுக்கு முதல் படி ஸ்ரவணமே ஆகும் - என்கிறார்.

**மேலெனிப ஸுக்3ஞான ப்ராப்திகெ3**
**மூலகாரண ஶ்ரவணவெனிபுது3**
**கேளதி3ருவரெ ஞானவில்லதெ3 த்4யானவேனெந்து3**
**ஶீல ஸத்கு3ருக3ளனு ஸேருத1**
**மேலெ மேலெட3பி3ட3தெ3 ஸேவிஸி**
**பேள்வ தத்வரஹஸ்ய லாலிஸி மனன மாடு3வுது3 ||64**

மேலெனிப - மேற்கூறிய; ஸுக்ஞான ப்ராப்திகெ - யதார்த்த ஞானத்தைப் பெறுவதற்கு; மூலகாரண - மூல காரணம்; ஷ்ரவணவெனிபுது - சிரவணமே ஆகும்; (இப்படியிருக்கையில்); த்யானவேனெந்து - தியானம் என்றால் என்ன என்று; ஞானவில்லதே - புத்தி இல்லாமல்; கேளதிருவரெ - கேட்காமல் இருப்பார்களா? (கேட்பார்கள்). ஷீல ஸத்குருகளனு - சிறந்த நல்ல குருகளை; ஸேருத- சேர்ந்தவாறு; மேலே மேலே - பல முறை; எரபிடதெ - தொடர்ந்து இடைவிடாமல்; ஸேவிஸி - அவரை வணங்கி; பேள்வ - அவர் கூறும்; தத்வரஹஸ்ய - தத்வ ரகசியங்களை; லாலிஸி - கேட்டு, புரிந்து கொண்டு; மனன மாடுவுது - மனனம் செய்ய வேண்டும்.

சிரவண, மனனத்தின் சிறப்புகளை தொடர்ந்து இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

மேற்கூறிய யதார்த்த ஞானத்தைப் பெறுவதற்கு, மூல காரணம், சிரவணமே ஆகும். இப்படியிருக்கையில், தியானம் என்றால் என்ன என்று அறிவில்லாமல் யாராவது கேட்பார்களா?. சிறந்த நல்ல குருகளை சேர்ந்து, பல முறை தொடர்ந்து இடைவிடாமல் அவரை வணங்கி, அவர் கூறும் தத்வ ரகசியங்களை கேட்டு புரிந்து கொண்டு, மனனம் செய்ய வேண்டும்.

ஸ்ரவண கேளதவனு ஜீவச்சவவென்னி |
பவனஸ்வாமி நம்ம விஜயவிட்டல மெச்ச ||

நவவித பக்தியில் முதலில் வருவது ஸ்ரவண பக்தியே ஆகும். பகவந்தனின் மகிமையை அறிவதற்கு முக்கிய வழி ஸ்ரவணம். அப்படி ஸ்ரவணம் செய்யாதவன், உயிரோடு இருக்கும் பிணம் என்று எண்ண வேண்டும் என்கிறார் ஸ்ரீவிஜயதாஸர்.

**இல்ல இன்னித$^{3}$கதி$^{4}$க கர்மவு**
**ப$^{3}$ல்லித$^{3}$ரு விதி$^{4}$ஸுதலி பேளிஹ**
**சில்லரெய நிஷ்காம கர்மகெ ப$^{2}$லத$^{3}$ ரூபத$^{3}$லி |**
**புல்லலோசன கடெ$^{3}$யலீவனு**
**நில்லத$^{3}$லெ ஶ்ரவணாதி$^{3}$ ஸாத$^{4}$ன**
**ஸல்லிஸதெ$^{3}$ ஸம்யஞான ஒலியனு ஸத்யஸங்கல்ப ||65**

விதிஸுதலி - விதிப்படி; இன்னிதகதிக கர்மவு இல்ல - இதைவிட வேறு கர்மங்கள் எவையும் இல்லை; பல்லிதரு பேளிஹ - அறிந்தவர்கள் கூறுகின்றனர்; சில்லரெய நிஷ்காம கர்மகெ - இப்படியாக செய்யப்படும் நிஷ்காம கர்மத்திற்கு; புல்லலோசன - மலர்களைப் போன்ற கண்களைக் கொண்டவன் (ஸ்ரீஹரி); கடெயலீவனு - கடைசியாக கொடுக்கிறான்; நில்லதலெ - இடைவிடாமல்; ஸ்ரவணாதி ஸாதன - ஸ்ரவண, மனன, தியான ஆகிய ஸாதனைகளை; ஸல்லிஸதெ - செய்யாமல்; ஸம்யஞான ஒலியனு - யதார்த்த ஞானத்தை (சரியான ஞானத்தை); ஒலியனு - கொடுக்க மாட்டான்; ஸத்யஸங்கல்ப - ஸத்யஸங்கல்பனான ஸ்ரீஹரி.

இதைவிட (மேற்கூறியதைத் தவிர) வேறு கர்மங்கள் எவையும் இல்லை என அறிந்தவர்கள் கூறுகிறார்கள். இப்படியாக செய்யப்படும் நிஷ்காம கர்மத்திற்கு, மலர்களைப் போன்ற கண்களைக் கொண்ட ஸ்ரீஹரி, கடைசியில் முக்தியைக் கொடுக்கிறான். இடைவிடாமல் சிரவண, மனன, தியானம் ஆகிய ஸாதனைகளை செய்யாமல், யதார்த்த ஞானத்தை, ஸத்ய ஸங்கல்பனான ஸ்ரீஹரி கொடுக்க மாட்டான்.

ஸ்ரீவிஜயதாஸர் தனது ஸதாசார ஸுளாதியில் இவ்வாறு கூறுகிறார்.
எரடொந்து உள்ளமேலு: ஸ்ரவண, மனன, நிதித்யாஸன என்னும் மூன்றும் மோட்சத்திற்கான உத்தம சாதனைகள். சிரவணாதிகள் இல்லாமல் ஒரு நொடியும் இருக்கக்கூடாது.

சாஸ்திர ஜன்ய ஞான - உபதேசத்தினால் உண்டாவது சிரவணம். வாக்யார்த்தங்களில் யுக்திகளை பயன்படுத்துவதி மனனம். பகவத் விஷயக விஷயங்கள் நிரந்தரமாக செய்து கொண்டிருப்பது - நிதித்யாஸனம்.

அடுத்த 4 பத்திகளில், ஞான, விக்ஞான, பக்தி, வைராக்கியங்களைப் பற்றியும், அவற்றின் லட்சணங்களைப் பற்றியும் தனித்தனியே விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

**தத்வதொ$^3$ளு மனபோகி$^3$ஸி ஸ்ரீஹரி**
**க்ருத்யவனு நெனெனெனெது$^3$ ஹர்ஷோ**
**ந்மத்தனாகு$^3$த ப்$^4$ருத்யபா$^4$வதி$^3$ உத்தமோத்தமன |**
**ஹெத்த$^1$வரிக$^3$தி$^4$கத$^3$லி ப்ரீதிஸி**
**சித்த நிர்மலனாகி$^3$ ப$^4$க்திலி**
**நித்யத$^3$லி பா$^4$விஸுதலிர்புதெ$^3$ ஞான லக்ஷணவு ||66**

தத்வதொளு மனபோகிஸி - பகவந்தனின் தத்வங்களில் மனதை ஈடுபடுத்தி; ஸ்ரீஹரி க்ருத்யவனு - ஸ்ரீஹரியின் செயல்களை; நெனெனெனெது - திரும்பத் திரும்ப நினைத்து; ஹர்ஷோன்மத்தனாகுத - மிக அதிகமான மகிழ்ச்சியில் திளைத்தவாறு; ப்ருத்யபாவதி - தாஸ்ய பாவத்துடன்; உத்தமோத்தமன - சர்வோத்தமனான ஸ்ரீஹரியை; ஹெத்தவரிகதிகதலி - தன்னைப் பெற்றவர்களைவிட அதிகமாக; ப்ரீதிஸி - அன்பு செலுத்தி; சித்த நிர்மலனாகி - சுத்தமான மனதுடன்; பக்திலி - பக்தியுடன்; நித்யதலி - தினம்தோறும்; பாவிஸுதலிர்புதெ - இப்படிப்பட்ட சிந்தனைகளுடன் இருப்பதே; ஞான லக்ஷணவு - உண்மையான ஞானத்தின் லட்சணம் ஆகும்.

ஞானத்தின் லட்சணங்களை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீராமகாந்த விட்டல தாஸர்.

பகவந்தனின் தத்வங்களில் மனதை ஈடுபடுத்தி, ஸ்ரீஹரியின் செயல்களை திரும்பத்திரும்ப நினைத்தவாறு, மிக அதிகமான மகிழ்ச்சியில் திளைத்தவாறு, தாஸ்ய பாவத்துடன் ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியை, தன்னைப் பெற்றவர்களைவிட அதிகமாக அன்பு செலுத்தி, சுத்தமான மனதுடன், பக்தியுடன்

தினம்தோறும் இப்படிப்பட்ட சிந்தனைகளுடன் இருப்பதே, உண்மையான ஞானத்தின் லட்சணம் ஆகும்.

**ஆலிபுது³ விக்³ஞான லக்ஷண**
**ஸ்தூ²ல ஸூக்ஷ்மத்³ரூப லக்ஷ்மீ**
**லோல தத்தத்³ரூப நாமகபி⁴ன்ன ஸர்வத்ர |**
**லீலெயிம் வ்யாப்திஸுத ஹ்ருத்கீ¹**
**லாலஜதி³ ஸமனெனிஸி சேதன**
**ஜாலத³லி க்ரீடி³பன பி³ம்பா³ன்வயதி³ திளியுவுது³ ||67**

விக்ஞான லக்ஷண - விசேஷ ஞானத்தின் லட்சணங்களை; ஆலிபுது - கேளுங்கள்; லட்சுமிலோல - ஸ்ரீலட்சுமியின் தலைவனான ஸ்ரீஹரி; ஸ்தூல ஸூக்ஷ்மத்ரூப - ஸ்தூல, ஸூக்ஷ்மங்களில்; தத்தத்ரூப - அந்தந்த ரூபங்களில்; நாமகபின்ன - வெவ்வேறு (அந்தந்த) நாமங்களை ஏற்று; ஸர்வத்ர - அனைத்து இடங்களிலும்; லீலெயிம் வ்யாப்திஸுத - தன்னுடைய லீலையினால் வியாபித்தவாறு; ஹ்ருத்கீலாலஜதி - நம் இதய கமலத்திலும்; சேதன ஸமனெனிஸி - ஜீவனும் அவனும் ஒன்றே என்று எண்ணும்படியாக; ஜாலதலி - அனைவரையும் மயக்கியவாறு; க்ரீடிபன - செயல்களை செய்விப்பவனை, பிம்பான்வயதி - நம் பிம்பமூர்த்தி என்ற பெயரில்; திளியுவுது - அறிய வேண்டும்.

பிம்பமூர்த்தியின் லட்சணங்களை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

விசேஷ ஞானத்தின் லட்சணங்களைப் பற்றி சொல்கிறேன், கேளுங்கள். ஸ்ரீலட்சுமியின் தலைவனான ஸ்ரீஹரி, ஸ்தூல ஸூக் ஷ்மங்களில், அந்தந்த ரூபங்களில் வெவ்வேறு (அந்தந்த) நாமங்களை ஏற்று, அனைத்து இடங்களிலும் தன்னுடைய லீலைகளால் வியாபித்தவாறு, நம் இதய கமலத்திலும், ஜீவனும் அவனும் ஒன்றே என்று எண்ணும்படியாக அனைவரையும் மயக்கியவாறு இருக்கிறான். அத்தகைய செயல்களை செய்விப்பவனை நம் பிம்பமூர்த்தி என்ற பெயரில் அறிய வேண்டும்.

சேதனாசேதன விலக்ஷண
நூதன பதா³ர்த்த²க³ளொளகெ³ பட³லு

நூதனதி ஸுந்த3ரகெ ஸுந்தர ரஸக்கெ ரஸரூப |
ஜாதரூபோத3ர ப4வாத்3யரோ
ளாததப்ரதிம ப்ரபா4வ த4
ராதளதொ3 ளெம்மொட3னெ ஆடுதலிப்ப நம்மப்ப ||(2-23)

நம்மைப் படைத்தவனான ஸ்ரீபரமாத்மன், ஜீவ ஜட பதார்த்தங்களிலிருந்து வேறுபட்டவன். புதிய பதார்த்தங்களில் புதிதாக இருப்பவன். அழகான பதார்த்தங்களில் அழகாக இருப்பவன். திரவ பதார்த்தங்களில் திரவமாக இருப்பவன். பிரம்ம ருத்ரர்களில் நிலைத்திருப்பவன். அபாரமான மகிமையுள்ளவன். ஆனாலும், அவன் எப்போதும் நம்முடன் ஆட்டம் ஆடிக்கொண்டிருப்பவன்.

ஸந்தியாவந்தன மந்திரத்தில் நாம் சொல்வது இது. த்யேயஸ்ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தி நாராயண ஸரஸிஜாஸன ஸன்னிவிஷ்ட: கேயூரவான் மகர குண்டலவான் கிரீடி ஹாரி த்ருத ஷங்க சக்ர: ... நம் இதய கமலத்தில் இருக்கும் பிம்பமூர்த்தியின் லட்சணம் இவ்வாறு இருக்கிறது என்று சிந்திக்க வேண்டும்.

ஜீவர்களில் பகவந்தன் பிம்பமூர்த்தியாக இருக்கிறான் என்று சொல்வதான ஹரிதாஸர்கள் தேவரநாமாக்கள் அனேகம் உண்டு. ஸ்ரீஜகன்னாததாஸர் தனது ஒரு கிருதியில் இவ்வாறு கூறுகிறார்.

ஜீவாந்தர்கத ஜீவநியாமக ஜீவபிரக்ஷண ஜீவனகம்
ஜீவாதாரக ஜீவரூப ராஜீவ பவ ஜனக ஜீவேஷ்வர ||
தாஸோஹம் தவ தாஸோஹம்

**த்3யுனதி3 ப்ரவஹன தெரதி3 லக்ஷ்மீ**
**வனிதெயரஸன ஞான பூர்வக**
**ஜனனி ஜனக களத்ர பா3ந்த4வ ப்ரீதிக3தி4கத3லி |**
**மனதொ3ளகெ3 பா4விஸுத ஒத3கு3வ**
**க4ன எட3ரிக3ளு கத3லெ த்4ருட3த3லி**
**தி3னதி3னதி3 பெச்சிஸுவ ப்ரேமவெ விமல ஸத்ப4க்தி ||68**

த்யுனதி - கங்கையின்; ப்ரவஹன தெரதி - பிரவாகங்களைப் போல (தொடர்ச்சியாக, இடைவிடாமல்); லட்சுமி வனிதெயரஸன - ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனை; ஞான பூர்வக - அவனுடைய

மஹிமா ஞானத்துடன்; ஜனனி ஜனக களத்ர பாந்தவ - தாய், தந்தை, கணவன்/மனைவி, உறவினர்; ப்ரீதிகதிகதலி - (அவர்களின்) அன்பினை விட அதிகமாக அன்பு செய்ய வேண்டும்; மனதொளகெ பாவிஸுத - மனதில் இவ்வாறாக நினைத்து; கன எடரிகளு கதலெ - மிகப்பெரிய தடைகள் வந்தாலும் (அவற்றை பொருட்படுத்தாமல்); த்ருடதலி - திடமாக இருந்து; தினதினதி - தினம்தோறும்; பெச்சிஸுவ - வளர்ந்து வரும்; ப்ரேமவெ - அன்பே; விமல ஸத்பக்தி - தூய்மையான பக்தி ஆகும்.

பக்தியின் லட்சணங்களை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

கங்கையின் பிரவாகங்களைப் போல, தொடர்ச்சியாக இடைவிடாமல், ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனை, அவனுடைய மஹிமா ஞானத்துடன் அறிந்து; நம் தாய் தந்தையர்களிடம் காட்டும் அன்பினை விட அதிகமாக அன்பு செய்ய வேண்டும். மனதில் இவ்வாறாக நினைத்து, மிகப்பெரிய தடைகள் வந்தாலும் அவற்றை பொருட்படுத்தாமல், திடமாக இருந்து, தினம்தோறும் வளர்ந்து வரும் அன்பே, தூய்மையான பக்தி எனப்படுகிறது.

தாயி தந்தெய பிட்டு தபவ மாடலு பஹுது
தாயாதி பந்துகள பிடலு பஹுது
ராய முனிதரெ ராஜ்யவ பிடபஹுது
காயஜாபித நின்ன அடிய பிடலாரது
(தொரெது ஜீவிஸ பஹுதே ஹரி நின்ன சரணவ -- ஸ்ரீகனகதாஸர்)

தாய் தந்தை உற்றார் உறவினர் என யாரை வேண்டுமானாலும் விடலாம், ஆனால் உன் அடியை மட்டும் விடமுடியாது என்று பகவந்தனிடம் வேண்டிக் கொள்கிறார் ஸ்ரீகனகதாஸர்.

ஸ்ரீஸ்ரீபாதராஜர் கூறுவது. பக்தி பேகு விரக்தி பேகு
ஸர்வ ஷக்தி பேகு முந்தெ முக்திய பயஸுவகெ

முக்தியை வேண்டுபவன், பக்தியை, விரக்தியை கொள்ள வேண்டும் என்கிறார்.

**வாரிஜோத்ப$^4$வ ஜனக விஶ்வா**
**தா$^4$ரகன ஸ்வாதந்த்ர்யகு$^3$ண வ்யா**
**பார விஸ்தாரத$^3$லி திளியுத விஷயபோ$^4$க$^3$க$^3$ள |**
**ஸார நிஸ்ஸாரவனு கனஸிலி**
**தாரத$^3$லெ அனுப$^4$விஸி நர ஸம்**
**ஸார மத்$^4$யதி$^3$ நலிது$^3$ சரிபுதெ$^3$ பரம வைராக்$^3$ய ||69**

வாரிஜோத்பவ ஜனக - தாமரையில் பிறந்தவரான பிரம்மனின் தந்தையான ஸ்ரீஹரியின்; விஷ்வாதாரகன - இந்த உலகிற்கே ஆதாரமான ஸ்ரீஹரியின்; ஸ்வாதந்த்ர்யகுண - ஸ்வாதந்த்ர்ய குணங்களை; வ்யாபார - அவனுடைய செயல்களை; விஸ்தாரதலி திளியுத - மிகவும் விளக்கமாக / ஆழமாக அறிந்தவாறு; விஷயபோககள - நாம் அனுபவிக்கும் விஷய சுகங்களை; ஸார நிஸ்ஸாரவனு - ஸாத்விக, அஸாத்விகமான எவ்வித பொருட்களையும்; கனஸிலி தாரதலெ - கனவில்கூட நினைக்காமல்; அனுபவிஸி - அவற்றை (நிர்லிப்தமாக) அனுபவித்து; நர ஸம்ஸார மத்யதி நலிது - இந்த ஸம்ஸாரத்தின் நடுவில் வசித்து; சரிபுதே - இருப்பதே; பரம வைராக்ய - பரம வைராக்கியம் எனப்படுகிறது.

வைராக்கியத்தின் லட்சணங்களை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

தாமரையில் பிறந்தவரான பிரம்மனின் தந்தையான ஸ்ரீஹரியின் ஸ்வாதந்த்ர்ய குணங்களை, அவனுடைய செயல்களை மிகவும் விளக்கமாக / ஆழமாக அறிந்தவாறு, நாம் அனுபவிக்கும் விஷய சுகங்களை ஸாத்விக, அஸாத்விகமான எவ்வித பொருட்களையும் கனவில்கூட நினைக்காமல், அவற்றை நிர்லிப்தமாக அனுபவித்து, இந்த ஸம்ஸாரத்தின் நடுவில் வசித்து இருப்பதே, பரம வைராக்கியம் எனப்படுகிறது.

வைராக்ய ஸுளாதியில், ஸ்ரீகோபாலதாஸர் வைராக்கியத்தின் பல்வேறு லட்சணங்களை ஒரு பெரிய பட்டியலாகக் கொடுத்திருக்கிறார்.

நீரு ஒளகெ$^3$ இன்னு கமல வித்த$^3$ந்தெ
காரணனாகி$^3$ கார்ய வில்லத$^3$லிரபே$^3$கு

மார ஜனக நம்ம கோபாலவிட்டலனு
தோரி கொட்ட வைராக்$^{3}$யவனெ தோருவெ ||1

தாமரை இலை தண்ணீரைப் போல சம்சாரத்தில் இருந்து, எவ்வித பலன்களையும் எதிர்பார்க்கமல் கர்மங்களை செய்தவாறு, நம் கோபாலவிட்டலனை நினைத்தால், அவனே நமக்கு வைராக்கியத்தைக் கொடுக்கிறான்.

வைராக்யஸாலி என்று சொல்லிக் கொண்டு சிலர் செய்யும் செயல்களை இந்தப் பாடலில் கேலி செய்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர்.

நானு எம்புது பிட்டு ஞானிகளொடனாடி
ஏனாதரு ஹரி ப்ரேரணெயெந்து
த்யானிஸி மௌனதி புரந்தர விட்டலன்ன
காணதெ மாடித கார்யகளெல்லவு (உதர வைராக்யவிது)

* நான், எனது என்னும் சிந்தனையை விடவேண்டும்
* ஞானிகளுடன் பழகியவாறு இருக்க வேண்டும்
* என்ன பலன் கிடைத்தாலும் அது ஹரி ப்ரேரணை என்று நினைக்க வேண்டும்
* தியானத்தினால், மௌனத்தினால் புரந்தர விட்டலனை காண வேண்டும்
-- இவ்வாறு செய்யாத காரியங்கள் அனைத்தும் தற்காலிக வைராக்கியம் மட்டுமே என்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர்.

**ப்ரணவதொ$^{3}$ளகெ$^{3}$ட$^{3}$பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ எரடொ$^{3}$ன்**
**தெ$^{3}$னிஸி வர்ணக$^{3}$ளட$^{3}$கி$^{3}$ருவ வோல்**
**க$^{4}$ன ஸு ஸாத$^{4}$னவெனிப ஸம்பத்தினொளு ஸேரிஹுது$^{3}$ |**
**வினய ப$^{4}$க்தி விரக்தி ஞானவு**
**அணு கொரதெ இத$^{3}$காத$^{3}$ காலகு**
**இனிது ப$^{2}$லகனுகூலவாக$^{3}$து$^{3}$ திளிவுத$^{3}$னுனயதி$^{3}$ ||70**

பிரணவதொளு - ஓம்காரம் என்னும் பிரணவத்தில்; எடபிடதெ - இடைவிடாமல்; எரடொந்தெனிஸி - 2+1=3 ஆக; வர்ணகளடகிருவ வோல் = அ,உ,ம என்னும் மூன்று வர்ணங்கள் அடங்கியிருப்பதைப் போல; கன ஸு ஸாதனவெனிப - மிகவும் நல்ல பொருட்கள் (அல்லது

வழிகள்) எனப்படும்; ஸம்பத்தினொளு - செல்வத்தில்; வினய பக்தி விரக்தி ஞானவு - பக்தி, விரக்தி, ஞானம் ஆகியவை; ஸேரிஹுது - சேர்ந்திருக்கின்றன; இனிது - இப்படியாக; இதகெ - இவற்றில்; அணு கொரதெ - சிறிதளவு குறைபாடு; ஆத காலகு - எக்காலத்தில் ஆனாலும்; பலகனுகூலவாகது - தக்க பலன்கள் கிடைக்காது; திளிவுதனுனயதி - இதனை எப்போதும் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஞான, பக்தி, விரக்தி ஆகியவற்றின் சிறப்புகளை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

ஓம்காரம் என்னும் பிரணவத்தில், 2+1=3 ஆக அ, உ, ம என்னும் மூன்று வர்ணங்கள் அடங்கியிருப்பதைப் போல, மிகவும் நல்ல பொருட்கள் (அல்லது வழிகள்) எனப்படும் செல்வத்தில், ஞான, பக்தி, விரக்தி ஆகியவை சேர்ந்திருக்கின்றன. இப்படியாக, இவற்றில் சிறிதளவு குறைபாடு எக்காலத்தில் ஆனாலும், தக்க பலன்கள் கிடைக்காது. இதனை எப்போதும் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஞான ப⁴க்தி விரக்தி வினய புராண
ஷாஸ்திர ஸ்ரவண சிந்தன
தா³ன ஷம த³ம யக்ஞ ஸத்ய அஹிம்ஸ பூ⁴தத³ய | (18-18)

ஞான, பக்தி, விரக்தி, வினய, புராண சாஸ்திர ஸ்ரவண ஆகிய அனைத்தும் ஸஜ்ஜனர்களின் ஸ்வபாவங்களாகும் / குணங்களாகும் என்று ஸ்ரீஜகன்னாததாஸர் விளக்குகிறார். இவற்றை பின்பற்றினால் தக்க பலன்கள் கிடைக்கும் என்கிறார்.

ஜலருஹேக்ஷண தன்னவர மன
தொளகெ³ ப⁴க்தி ஞான கர்மகெ
ஒலிது பொளெவுத தோருவனு கு³ண ரூப க்ரியெக³ளனு ||(7-21)

தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரி, தன் பக்தர்கள் ஞான பக்தியுடன் செய்யும் கர்மங்களுக்கு, (அவரவர்களின் யோக்யதைக்கேற்ப) தரிசனம் அளித்து தன்னை காட்டிக் கொள்கிறான் என்கிறார் ஸ்ரீஜகன்னாததாஸர்.

**ஹலவு கர்மகெ காரணெனிஸுவ**
**ப³லித தனுமன த⁴னத³ ஷுத்³தி⁴ய**

**நெலெயரிது கர்மக³ள ஆத்³யந்தவனு மனக³ண்டு³ |**
**நளினனாப⁴ன வலிஸித³வரீ**
**இளெயொளகெ³ இன்னுண்டெ¹ ப³லுஹிலி**
**திளியுவரு ஜட³ கர்ம தா¹ரகவென்னுத க்³ஞ ஜன ||71**

ஹலவு கர்மகெ - பல்வேறு கர்மங்களை செய்ததற்கு; காரணெனிஸுவ - காரணம் எனப்படும்; பலித - இவ்வாறு நமக்குக் கிடைத்த; தனு மன தனத - தேகம், மனம், செல்வத்தின்; ஷுத்திய நெலெயரிது - சுத்தமானதா என்பதை சரியாகப் புரிந்துகொண்டு; கர்மகள ஆத்யந்தவனு - செய்த கர்மங்களின் ஆதி, அந்தங்களை; மனகண்டு - புரிந்துகொண்டு; நளினனாபன - ஸ்ரீஹரியை; வலிஸிதவரு - மகிழ்வித்தவர்கள்; ஈ இளெயொளகெ - இந்த பூமியில்; இன்னுண்டெ - இருக்கிறார்களா?; அக்ஞ ஜன - மந்த மதி கொண்டவர்கள்; தாரகவென்னுத - ஜடங்களாலேயே கர்மங்கள் நடக்கின்றன என்று; பலுஹிலி திளியுவரு - தங்கள் சாமர்த்தியத்தினால் (யோக்யதையினால்) அறிவார்கள்;

இந்தப் பிறவியில் நமக்குக் கிடைத்துள்ள இந்த தேகமானது, (முன்பு) செய்த பல்வேறு கர்மங்களுக்கு காரணம் எனப்படுகிறது. அப்படி கிடைத்த இந்த தேகம், மனம், செல்வங்களின் நிலையை அறிந்துகொண்டு (தம் யோக்யதையை சரியாக புரிந்துகொண்டு), இப்போது ஸ்ரீஹரியை மகிழ்வித்தவர்களுக்கு, இந்த பூமியில் மறுபடி பிறவி இருக்கிறதா? (இல்லை).

அத்தகையவர்கள், தங்களின் கர்மங்களின் ஆதி, அந்தங்களை சரியாக புரிந்து கொண்டிருக்கிறார்கள். அதாவது, 5 கர்மேந்திரியங்கள், 5 ஞானேந்திரியங்களால் செய்யப்படும் கர்மங்களை, அந்தந்த தத்வாபிமானி தேவதைகளின் உதவியுடனேயே நடக்கின்றன என்பதை அறிந்து, அனைத்து கர்மங்களையும் பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீஹரிக்கே சமர்ப்பிக்கின்றனர்.

ஆனால், அஞ்ஞானி மக்கள், தங்கள் கர்மங்கள் அனைத்தும் ஜடங்களான தேகத்தினால், உறுப்பினால் நடக்கிறது என்று, அவரவர்களின் தகுதிக்கேற்ப தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.

கர்மங்களை செய்யும் இந்திரியங்களில் அடங்கியிருக்கும் தத்வாபிமானி தேவதைகளை சிந்திக்க வேண்டும் என்பது இந்த பத்யத்தின் கருத்தாக இருக்கிறது.

கர்மவே தாரகவு ஜீவரிகெல்ல
கர்ம தாரக கேளோ நிர்ணய ஈ மாது -
துர்மதியனு பிட்டு மர்மவனரியதெ (ஸ்ரீபுரந்தரதாஸர்)

ஸ்ரீபுரந்தரதாஸர் இந்தப் பாடலில் 7 பத்யங்களில் சொல்லியிருக்கும் விஷயங்களையே, இந்த ஒரு பத்யத்தில் சுருக்கமாக விளக்கியிருக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**ஸேவிஸதெ$^3$ ஸுக்$^3$ஞானதா$^3$த$^1$ர**
**பா$^4$வதி$^3$ம் க்$^3$ரஹிஸத$^3$லெ தத்வவ**
**ஈ வஸுந்த$^4$ரெ மெச்சுவந்த$^3$தி$^3$ தோர்பராசரணெ |**
**தே$^3$வனொலியுவ மார்க்$^3$க$^3$ திளியதெ$^3$**
**தா$^4$விஸுத ப$^3$ளலிபரு தே$^3$ஹவ**
**யாவ க$^3$தி மத்$^1$யாவ ஸாத$^4$ன மனதி$^3$ ப$^4$யஸுவரோ ||72**

ஸுக்ஞானதாதர பாவதிம் - ஸுக்ஞானத்தைப் பெறுவதான சிந்தனையுடன்; ஸேவிஸதெ - வணங்காமல்; தத்வவ - தத்வங்களை / அதன் ரகசியங்களை; க்ரஹிஸதலெ - புரிந்து கொள்ளாமல்; ஈ வஸுந்தரெ - இந்த பூமியே; மெச்சுவந்ததி - மெச்சுமாறு; தோர்பராசரணெ - செயல்களை செய்கிறார்கள்; தேவனொலியுவ - ஸ்ரீஹரியின் தரிசனம் பெறும்; மார்க்க திளியதெ - வழி தெரியாமல்; தாவிஸுத - குதித்தவாறு; தேஹவ பளலிபரு - தேகத்தை தண்டிப்பார்கள்; யாவ கதி - எந்த கதியை; மத்யாவ ஸாதன - வேறு எந்த ஸாதனையை; மனதி - தங்களின் மனதில்; பயஸுவரோ - விரும்புகிறார்களோ?

ஸுக்ஞானங்களைப் பெறுவதான சிந்தனையுடன், பலரும், ஸ்ரீஹரியை வணங்காமல், தத்வங்களை, அதன் ரகசியங்களை புரிந்து கொள்ளாமல், இந்த பூமியே மெச்சுமாறு, தங்கள் செயல்களை செய்கிறார்கள். ஸ்ரீஹரியின் தரிசனம் பெறும் வழி தெரியாமல், குதித்தவாறு, தங்களின் தேகத்தை தண்டிப்பார்கள். இத்தகையவர்கள்,

எந்த கதியை, அல்லது வேறு எந்த ஸாதனையை தங்களின் மனதில் விரும்புகிறார்களோ?.

ஸ்ரீஹரியின் தரிசனம் பெறும் வழி மிகவும் சுலபமானது என்பதை ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதஸாரத்தில் இவ்வாறு சொல்கிறார்.

ஸுலப4னோ ஹரி தன்னவரனர
க4ளிகெ3 பிட்டக3லனோ ரமாத4வன
ஒலிஸலரியதெ3 பாமரரு ப3ளலுவரு ப4வதொ3ளகெ3 ||5

மேலும், அவர் இன்னொரு பத்யத்தில், ஸாதனைக்கான வழிமுறைகளை தெரிந்து கொள்ளாமல் பல்வேறு முயற்சிகளை செய்யும் பக்தர்களைப் பற்றி இவ்வாறு கூறுகிறார்.

கண்ட3 நீரொளு முளுகி3 தே3ஹவ
த3ண்டிஸலு ப2லவேனு த3ண்ட3க
மண்டலுக3ளனெ த4ரிஸி யதியெந்தெ3னிஸி ப2லவேனு |
அண்டஜாதி4பனம்ஸக3ன பத3
புண்டரீகதி3 மனவஹர்னிஷி
ப3ண்டு3ணியவோலிரிஸி ஸுக2ப3ட3தி3ப்ப மானவனு ||15

தேனி எப்படி மலர்களையே சுற்றி வந்து கொண்டிருப்பதைப் போல, யார் எப்போதும் கருடாரூடனான ஸ்ரீபரமாத்மனின் பாத கமலங்களில் தன் மனதை வைப்பதில்லையோ, அத்தகைய மனிதன் கண்ணுக்குத் தெரியும் தண்ணீர் அனைத்திலும் மூழ்கி, குளிர் முதலானவைகளால் தேகத்தை தண்டித்தவாறு இருப்பதில் என்ன பலன்? தண்ட, காஷ்ட, கமண்டலம் ஆகியவற்றை தரித்து தான் ஒரு சன்னியாசி என்று புகழ்பெற்றால் அதனால் ஆகும் பலன்தான் என்ன?.

**ஸ்ருஷ்டியிந்த3லி கட்டி கர்மவ**
**புட்டிஸுவ பரமேஷ்டி பித ப3ஹு**
**கஷ்டத1ர யோனிக3ள மத்4யதி3 இஷ்டு தா திளிது3 |**
**ப்4ரஷ்டனெனிஸலி ப3ஹுதெ3 ஸர்வோ**
**த்க்ருஷ்ட நரஜன்மதொ3ளக3ரியதெ3**
**ஸ்பஷ்டத3லி ப3ந்த4னவ நீகு3வ கர்ம மார்க3வனு ||73**

ஸ்ருஷ்டியிந்தலி - படைத்ததிலிருந்தே; கர்மவ - கர்மங்களை; கட்டி - இணைத்து; புட்டிஸுவ - பிறக்க வைக்கும்; பரமேஷ்டி பித - ஸ்ரீஹரியானவன்; பஹு கஷ்டதர - மிகவும் கஷ்டப்படுவதான; யோனிகள மத்யதி - யோனிகளின் நடுவில்; இஷ்டு தா திளிது - மிகவும் கொஞ்சமாக அறிந்து (எதுவுமே அறியாமல்); ஸர்வோத்க்ருஷ்ட - மிகச் சிறந்ததான; நரஜன்மதொளகெ - இந்த மனிதப் பிறவியில்; பந்தனவ நீகுவ - சம்சார பந்தனத்தை விட்டு நீங்கும்; கர்ம மார்கவனு - வழிமுறைகளை / செய்ய வேண்டிய செயல்களை; ஸ்பஷ்டதலி - தெளிவாக; அரியதெ - தெரியாமல் (புரிந்து கொள்ளாமல்); ப்ரஷ்டனெனிஸலி பஹுதெ - நான் வீண் / இந்தப் பிறவி வீண் என்று சொல்லலாமா?

நம்மை படைத்ததிலிருந்தே, கர்மங்களை நம்முடன் இணைத்து பிறக்க வைக்கும் ஸ்ரீஹரியானவன், மிகவும் கஷ்டப்படுவதான, யோனிகளின் நடுவில், மிகச் சிறந்ததான இந்த மனிதப் பிறவியில், சம்சார பந்தனத்தை விட்டு நீங்கும் வழிமுறைகளை, செய்ய வேண்டிய செயல்களை தெளிவாக புரிந்து கொள்ளாமல் / அறியாமல், நான் வீண், இந்தப் பிறவி வீண் என்று சொல்லலாமா?

சம்சார பந்தனத்தை விட்டு நீங்கும் வழிமுறைகளை, இந்தப் பிறவி எடுத்ததற்கு செய்ய வேண்டிய விஷயங்களை, ஸ்ரீஜகன்னாததாஸர் தனது 'பலவிது பாள்துதக்கெ' என்னும் கிருதியில் 27 நுடிகளில் மிகவும் அற்புதமாக விளக்கியுள்ளார். அதிலிருந்து ஒரேயொரு பத்யத்தை அதன் அர்த்தத்துடன் பார்ப்போம்.

ப$^2$லவிது$^3$ பா$^3$ள்து$^3$த$^3$க்கே
ஸிரி நிலயன கு$^3$ணக஽ள திளிது$^3$ ப$^4$ஜிஸுவதே |ப|

ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிந்து, அதனால் உண்டாகும் அன்பே, பக்தி. பக்தியினால் வேண்டுவதே, இந்த மனிதப்பிறவியை அர்த்தமுள்ளதாக்குகிறது. ஆகையால், நம் தகுதிக்கேற்ப ஸ்ரீஹரியின் குணங்களை அறிவதற்கு முயலவேண்டும்.

க$^3$ருஹகர்மவ பே$^3$ஸரத$^3$லெ பரமோத்ஸஹத$^3$லி மாடுத மூர்ஜக$^3$த$^3$
மஹிதன ஸேவேயிதெ$^3$யெனுதலி மோத$^3$தி$^3$ அஹரஹர்மனதி$^3$
சமர்ப்பிசுதிப்புதே$^3$ |12|

கிருஹஸ்த தர்மங்களை உற்சாகத்துடன் செய்து அவற்றை ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்க வேண்டும் என்பது அனைத்து ஆசிரமங்களுக்கும் பொருந்தும் என்று அறிய வேண்டும். 'ஓம் விஹிதத்வாச்சாஸ்ரம கர்மாபி ஓம்' என்னும் பிரம்ம சூத்திரத்தில், அபரோக்ஷ ஞானியும்கூட தனக்கு விதிக்கப்பட்ட செயல்களை தவறாமல் செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**கர்மவாசரிஸுவுது3 ஜீவன**
**த4ர்ம க்ஷணலவகாலவாத3ரு**
**கர்ம வாங்மன தே3ஹதி3ந்த3ட3கி3புது3 து3ஸ்ஸாத்4ய |**
**மர்மவித3ரொளக3ரிது ப3ஹு வித4**
**கர்மதொ3ளகா3ஸக்தவாக3தெ3**
**கர்ம மாள்புது3 கர்த்ருவெனிஸதெ3 கர்மப2ல பி3ட்டு ||74**

கர்மவாசரிஸுவுது - கர்மங்களை செய்ய வேண்டியது; ஜீவன தர்ம - ஜீவனின் தர்மம் ஆகும்; க்ஷண லவகாலவாதரு - ஒரு சில நொடிகளே ஆனாலும்; வாங்மன தேஹதிந்த - மனோ, வாக்,காயத்தினால்; கர்ம அடகிபுது - கர்மங்களை செய்யாமல் இருப்பது; துஸ்ஸாத்ய - ஸாத்தியம் இல்லாத செயல் ஆகும்; மர்மவிதரொளகரிது - (ஆனால்), இதில் உள்ள மர்மங்களை / ரகசியங்களை அறிந்து; பஹு வித - பற்பல; கர்மதொளகெ - கர்மங்களில்; ஆஸக்தவாகதெ - ஈடுபடுத்திக் கொள்ளாமல்; கர்த்ருவனிஸதெ - தானே செய்கிறேன், தானே கர்த்ரு என்று எண்ணாமல்; கர்மபல பிட்டு - (மற்றும்) கர்ம பலன்களை விட்டு; கர்ம மாள்புது - கர்மங்களை செய்ய வேண்டும்.

கர்மங்களை செய்ய வேண்டியது, பிறந்திருக்கும் அனைத்து ஜீவர்களின் தர்மம் ஆகும். ஒரு சில நொடிகளே ஆனாலும், மனோ வாக் காயங்களினால் கர்மங்களை செய்யாமல் இருப்பது, ஸாத்தியம் இல்லாத செயல் ஆகும். ஆனால், இதில் உள்ள ரகசியங்களை அறிந்து, பற்பல கர்மங்களில் ஈடுபடுத்திக் கொள்ளாமல், தானே செய்கிறேன், தானே கர்த்ரு என்று எண்ணாமல், மற்றும் கர்ம பலன்களை விட்டு, கர்மங்களை செய்ய வேண்டும்.

கர்த்ருத்வ அபிமானத்தை விட்டு, அனைத்தும் ஸ்ரீஹரியினாலேயே நடக்கிறது, நடத்துபவன் அவனே, அவன் நடத்துவதையே நான் செய்கிறேன், செய்த அனைத்தையும் அவனுக்கே அர்ப்பிக்கிறேன்

என்று நினைக்க வேண்டும் என்னும் இந்த கருத்தினை ஸ்ரீஜகன்னாததாஸர் ஹரிகதாம்ருதஸாரத்தில் பல பத்யங்களில் விளக்கியுள்ளார். அதில் ஒன்றை மட்டும் இங்கு பார்ப்போம்.

நதி3ய ஜல நதி3கெ3ரெவ தெரத3
ந்த3த3லி ப4கவத்3தத்த த4ர்மக3
ளுத3தி4 ஷயனனிக3ர்ப்பிஸுத வ்யாவ்ருத்த நீனாகி3 |
விதி4 நிஷேதா4தி3க3ளிகொளகா3
க3த3லெ மாடு3த த3ர்வியந்த3தி3
பது3மனாப4ன சகலகர்மக3ளல்லி நெனெயுதிரு ||36

ஆற்று நீரை ஆற்றிலேயே (அர்க்யத்தை) கொடுப்பதைப் போல பரமாத்மன் கொடுத்த தர்மங்களை பாற்கடலில் படுத்திருக்கும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தவாறு நீ நானே செய்தேன் என்னும் சிந்தனையை விட்டு, அதாவது ஸ்வதந்த்ர கர்த்ருத்வ அபிமானத்தை விட்டு செய்ய வேண்டியதை, செய்யக்கூடாதவற்றை, நானே செய்தேன், நானே விட்டேன் என்ற புத்திக்கு (அஹங்காரத்தை) ஆளாகாமல் அ-ஸ்வதந்த்ரனான நான், பரமாத்மன் செய்வதைப்போல செய்வேன் என்னும் சிந்தனையுடன் கர்மங்களை செய்ய வேண்டும்.

இதே கருத்தினை ஸ்ரீபுரந்தரதாஸர் தனது ஒரு கிருதியில் இவ்வாறு கூறியிருக்கிறார்.
கர்மவே தாரகவு ஜீவரிகெல்ல கர்மவே தாரகவு ||ப
கர்ம தாரக காணோ நிஸ்சய ஈ மாது
துர்மதியனு பிட்டு மர்மவனரியதே ||அப

ஜீவர்களுக்கு, முக்திக்கான வழி கர்மங்களை செய்வதே. ஆனால், இதன் மர்மங்களை அறிந்து இதனை செய்ய வேண்டும் என்கிறார் ஸ்ரீபுரந்தரதாஸர்.

**தே4னிஸுத ஸ்வாதந்த்ர்ய அனு ஸந்**
**தா4ன ஹரியொளு நிலிஸி சலிஸத3**
**ஞானயோக3தொ3ளனிது கர்மவ நிர்கு3ணாத்மககெ3 |**
**மாணத3லெ அர்ப்பிஸலு கைகொ3ண்**
**டா3னதே3ஷ்டப்ரதனு பொரெவனு**
**தானே பேளிஹனர்ஜுனகெ கீ3தெயொளு ஸ்ரீகிருஷ்ண ||75**

ஸ்வாதந்த்ர்ய - ஸ்ரீஹரியின் ஸ்வாதந்த்ர்யத்தை; தேனிஸுத - தியானம் செய்தவாறு; ஹரியொளு - ஸ்ரீஹரியில்; அனு ஸந்தான - அனுசந்தானத்தை; நிலிஸி - நிறுத்தி; சலிஸத - சலனமில்லாத (திடமான) ; ஞானயோகதொளு - ஞானயோகங்கள்; இனிது - (செய்யப்பட்ட) அனைத்து; கர்மவ - கர்மங்களையும்; மாணதலெ - தவறாமல்; அர்ப்பிஸலு - அர்ப்பணம் செய்ய; ஆனதேஷ்டபிரதனு - வணங்குபவர்களுக்கு இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவனான ஸ்ரீஹரி; கைகொண்டு - அவற்றை ஏற்றுக் கொண்டு; பொரெவனு - காக்கிறான்; கீதெயொளு - ஸ்ரீபகவத்கீதையில்; ஸ்ரீகிருஷ்ண - ஸ்ரீகிருஷ்ணன்; அர்ஜுனகெ - அர்ஜுனனுக்கு; தானே பேளிஹனு - தானே கூறியிருக்கிறான்.

ஸ்ரீஹரியின் ஸ்வாதந்த்ர்யத்தை தியானம் செய்தவாறு, ஸ்ரீஹரியின் அனுசந்தானத்தை நிறுத்தி, திடமான ஞானயோகங்களால் அனைத்து கர்மங்களையும் தவறாமல் அவனுக்கே அர்ப்பணம் செய்ய, இவ்வாறு செய்பவர்களுக்கு இஷ்டார்த்தங்களை அந்த ஸ்ரீஹரி நிறைவேற்றுகிறான். ஸ்ரீபகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு இதையே கூறியிருக்கிறான் என்பதை அறிய வேண்டும்.

ந கர்மணாமனாரம்பான் நைஷ்கர்ம்யம் புருஷோஷ்னுதே |
ந ச ஸன்யஸனாதேவ ஸித்திம் ஸமதி கச்சதி ||
நியதம் குரு கர்மத்வம் கர்மஜ்யாயோஹ்ய கர்மண: |
ததர்த்தம் கர்மகௌந்தேய முக்தஸங்க: ஸமாசர || (பகவத் கீதை)

அனைத்து கர்மங்களையும் விடுவதே நைஷ்காம்யம் என்றில்லை. காம்யகர்மங்களை விடுவதாலேயே புருஷர்கள் சத்கதியை அடைவதில்லை. வர்ணாசிரமத்திற்கேற்ப நித்யகர்மங்களை செய். 'தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர' அதாவது, கர்மத்தின் பலனை எதிர்பார்க்காமல், ஸ்ரீவிஷ்ணு ப்ரீதிக்காக கர்மத்தை செய் என்று பொருள்.

**இந்தி$^3$ரேஷன ஞானயோக$^3$கெ**
**ப$^3$ந்த$^4$னங்க$^3$ளனெல்ல நீக$^3$லு**
**இந்த்$^3$ரியங்க$^3$ள ஜயிஸு மொத$^3$லிகெ$^3$ நியமவ்ரததி$^3$ந்த$^3$ |**
**குந்த$^3$த$^3$லெ அடி$^3$க$^3$டி$^3$கெ$^3$ மனவனு**

**ப$^{4}$ந்தி$^{3}$ஸுத ஸச்சாஸ்த்ர ஸ்ரவணதி$^{3}$**
**பொந்தி$^{3}$ ஶாந்த பிரஸன்ன சித்தவ தா$^{3}$டு$^{1}$ ப$^{4}$வஸிந்து$^{4}$ ||76**

இந்திரேஷன - ஸ்ரீஹரியின்; ஞானயோககெ - ஞானத்தை அடைவதற்கு; பந்தனங்களனெல்ல - அதற்குண்டான தடைகள் அனைத்தும்; நீகலு - நீங்குவதற்கு; மொதலிகெ - முதன்முதலில்; நியமவ்ரததிந்த - விதிப்படி செய்யப்படும் விரதங்களால்; இந்திரியங்கள - இந்திரியங்களை; ஜெயிஸு - ஜெயிப்பாயாக; அடிகடிகெ - அவ்வப்போது; மனவனு - மனதினை; குந்ததலெ - எவ்வித தடைகளும் இன்றி; பந்திஸுத - கட்டுப்படுத்தியவாறு; ஸச்சாஸ்த்ர ஸ்ரவணதி - நற்சாஸ்திரங்களை கேட்டவாறு; ஷாந்த - அமைதியான; பிரஸன்ன - மகிழ்ச்சியான; சித்தவ - மனதினை; பொந்தி - அடைந்து; பவஸிந்து - சம்சாரக் கடலை; தாடு - தாண்டுவாயாக.

ஸ்ரீஹரியைப் பற்றிய ஞானத்தை அடைவதற்கு, அதற்குண்டான தடைகள் அனைத்தும் நீங்குவதற்கு, முதன்முதலில் விதிப்படி செய்யப்படும் விரதங்களால், இந்திரியங்களை ஜெயிப்பாயாக. அவ்வப்போது மனதினை, எவ்வித தடைகளும் இன்றி, கட்டுப்படுத்தியவாறு, நற்சாஸ்திரங்களை கேட்டவாறு, அமைதியான மகிழ்ச்சியான மனதினை அடைந்து, அதன் பலனாக சம்சாரக் கடலினை தாண்டுவாயாக.

மனதினை கட்டுப்படுத்தும் விஷயத்தைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதஸாரத்தின் ஒரு பத்யத்தில் இவ்வாறு கூறுகிறார்.

ஸித்தி$^{4}$யெனிஸுவ ஸங்கருஷண ப்ர
ஸித்த$^{4}$னாமக வாஸுதேவ ன
வத்$^{3}$ய ரூப சதுஷ்டயக$^{3}$ளரிதவனெ பண்டிதனு ||6

அனைத்து இந்திரியங்களுக்கும் மனமே காரணம். பத்து இந்திரியங்களின் செயல்கள் நடைபெற வேண்டுமெனில், மனஸ் இல்லாமல் எந்த வேலையும் நடைபெறுவதில்லை. மனோ நிக்ரஹத்தினாலேயே மனிதன், ஜிதேந்திரியன் என்று ஆகிறான். மனோ நிக்ரஹம் செய்யாமல், தன் இஷ்டம் போல செயல்களை செய்பவன் பாவியாகிறான். இத்தகைய மனதைக் கட்டுப்படுத்தும்

விஷயங்களில், வாசுதேவ நாமக பரமாத்மன் இருந்து, பிரசித்தன் என்னும் பெயரைப் பெறுகிறான்.

**மனவ நிக்3ரஹிஸத3லெ மாடு3வ**
**க4னத1பவு ஜபதா3ன மௌனக3**
**ளினிது1 டா3ம்பீ4கவெனிஸி வ்யர்த்த2தி3 போபுத3னு திளிது3 |**
**க்ஷண பி3ட3தெ3 ஹரி பாத3 பத்3மதி3**
**அனுனயதி3 மனெமாடி3 நிலிஸுத**
**அனுப4வத3 ஸாத4னதி3 ஸாதி4ஸு த்4யானகோ3சரன ||77**

மனவ - மனதினை; நிக்ரஹிஸதலெ - அடக்காமலேயே; மாடுவ - செய்யப்படும்; கனதபவு - கடுமையான தவம்; ஜபதான - ஜபம், தானம்; மௌனகளு - மௌன விரதங்கள்; இனிது - இவை; டாம்பீகவெனிஸி - ஆடம்பரம் எனப்பட்டு; வ்யர்த்ததி - வீணாக; போபுதனு - செல்கின்றன என்பதை; திளிது - அறிந்து; க்ஷண பிடதெ - ஒரு நொடியும் விடாமல்; ஹரிபாத பத்மதி - ஹரி பாத பத்மங்களில்; அனுனயதி மனெமாடி நிலிஸுத - இடைவிடாமல் நிலை நிறுத்தி; அனுபவத - அந்த அனுபவத்தின்; ஸாதனதி - ஸாதனத்தினால்; த்யானகோசரன - தியானத்தினால் கண்டறியப்படுபவனை; ஸாதிஸு - கண்டறிவாயாக (அடைவாயாக).

பிம்பரூப தரிசனத்தின் வழிமுறையை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

மனதினை அடக்காமல் செய்யப்படும் கடுமையான தவம், ஜபம், தானம், மௌன விரதங்கள் ஆகியவை, ஆடம்பரம் எனப்பட்டு, வீணாகப் போகின்றன என்பதை அறிந்து, ஒரு நொடியும் விடாமல் ஹரிபாத பத்மங்களில் மனதினை இடைவிடாமல் நிலை நிறுத்தி, அந்த அனுபவத்தின் ஸாதனத்தினால், தியானத்தினால் கண்டறியப்படுபவனை கண்டறிவாயாக.

மனதில் பகவந்தனை நிறுத்தி, செய்யப்படும் காரியங்களால் ஆகும் பலன்களை ஸ்ரீஜகன்னாததாஸர், இந்த ஹரிகதாம்ருத பத்யத்தில் இவ்வாறு விளக்கியுள்ளார்.

ஹலவு ப$^{3}$கெ$^{3}$யலி ஹரிய மனத$^{3}$லி
ஒலிஸி நில்லிஸி ஏனு மாடு$^{3}$வ
கெலஸக$^{3}$ளு அவனங்க்$^{4}$ரி பூஜெக$^{3}$ளெந்து$^{3}$ நெனெவுதிரு |
ஹலத$^{4}$ரானுஜ தானெ ஸர்வ
ஸ்த$^{2}$லக$^{3}$ளலி நெலெஸித்து$^{3}$ நிஸ்ச
ஞ்சல ப$^{4}$கு$^{3}$தி ஸுக்$^{3}$ஞான பா$^{4}$க்$^{3}$யவ கொட்டு ஸந்தெயிப ||28

அனைத்து விதங்களிலும் பரமாத்மனிடம் திடமான பக்தியை வைத்து, அந்த பக்தியினால் பரமாத்மன் தரிசனம் கொடுப்பது போல செய்து, சஞ்சலமற்ற மனதுடன் பரமாத்மனை நிறுத்தி, நீ செய்யும் ஒவ்வொரு வேலையும் பரமாத்மனின் பூஜை என்றே நினைத்திரு. இப்படி செய்வதால், ஸ்ரீகிருஷ்ணன் தானே அனைத்து இடங்களிலும் இருந்து, நீ செய்யும் அனைத்து செயல்களையும் தன் பூஜையென்றே ஏற்றுக்கொண்டு, சிறந்த பக்தியை, திவ்யஞான செல்வத்தைக் கொடுத்து உனக்கு அருள்வான் என்று தாஸராயர் அன்புடன் சஜ்ஜனர்களுக்கு உபதேச ரூபமாக சொல்லியிருக்கிறார்.

**அடி$^{3}$க$^{3}$டி$^{3}$கெ$^{3}$ ஹரிதோ$^{3}$டு$^{3}$திஹ மன**
**தடெ$^{3}$து$^{3}$ ப$^{3}$ஹு கஷ்டத$^{3}$லி நில்லிஸி**
**பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ அப்$^{4}$யாஸத$^{3}$லி ஸாதி$^{4}$பதொ$^{3}$ந்து$^{3}$ ப$^{3}$கெ$^{3}$ மத்தெ |**
**நடு$^{3}$கு$^{3}$தலி து$^{3}$ர்விஷய போ$^{4}$க$^{3}$க்கெ**
**எட$^{3}$பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ ஸத்$^{3}$விஷய மாத்ரவ**
**த்$^{4}$ருட$^{3}$தி$^{3}$ பு$^{4}$ஞ்சிஸி ஹரிகெ$^{3}$ அர்ப்பிப ப$^{3}$கெயு மத்தொந்து$^{3}$ ||78**

அடிகடிகெ - அடிக்கடி; ஹரிதோடுதிஹ - பாய்ந்தோடும்; மன - மனதினை; பிடதெ - விட்டுவிடாமல்; பஹு கஷ்டதலி - மிகவும் கஷ்டப்பட்டு; தடெது - தடுத்து; நில்லிஸி - நிறுத்தி; அப்யாஸதலி - இப்படிப்பட்ட பயிற்சியால்; ஸாதிபதொந்து பகெ - சாதிப்பது ஒரு வகை; மத்தெ - இன்னொன்று என்னவெனில்; துர்விஷய போகக்கெ - கெட்ட விஷயங்களை செய்வதற்கு; நடுகுதலி - நடுங்கியவாறு; த்ருடதி - திட மனதுடன்; ஸத்விஷய மாத்ரவ - ஸத்விஷயங்களை மட்டுமே; எடபிடதெ - தொடர்ந்து; புஞ்சிஸி - செய்தவாறு; ஹரிகெ அர்ப்பிப - அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்வது; மத்தொந்து பகெயு - இன்னொரு விதமாகும்.

மனதினை எப்படி கட்டுப்படுத்துவது என்பதை இந்த பத்யத்தில் அழகாக விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

அங்கங்கே அலைபாயும் மனதினை, விட்டுவிடாமல், மிகவும் கஷ்டப்பட்டு பயிற்சி செய்து, மனதினை தடுத்து நிறுத்துவது ஒரு வகை. இன்னொன்று என்னவெனில், கெட்ட விஷயங்களை செய்வதற்கு, நடுங்கியவாறு, திட மனதுடன், ஸத்விஷயங்களை மட்டுமே தொடர்ந்து செய்தவாறு, அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்வது இன்னொரு விதமாகும்.

மன வசன காய ப்ரத3க்ஷிணெ
அனுதி3னதி3 ஸர்வத்ர வியாபக
வன ருஹேக்ஷண க3ர்ப்பிசுத மோதி3ஸுதலிரு ஸதத |

மனதால், வாக்கினால், தேகத்தால் செய்யும் அனைத்து காரியங்களையும், ஸ்ரீபரமாத்மனுக்கு செய்யப்படும் பிரதட்சிணை என்று நினைத்து, அவற்றை ஸ்ரீபரமாத்மனுக்கு அர்ப்பித்து, மகிழ்ச்சி அடைந்துகொண்டிரு. இந்த விஷயங்களை சொல்லிப் பலனில்லை. அனுபவத்திற்குக் கொண்டு வா. முக்திக்கு இதைவிட சாதனை என்று எதுவும் இல்லை - என்று ஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாததாஸர் கூறுகிறார்.

**மனுஜ ஸாமான்யரிகெ3 பேளித3**
**இனிதுபாயவு ஸல்வுதி3த3ரொளு**
**மனவ நிக்3ரஹிஸுவனு ஞானியு தத்வவனு க்3ரஹிஸி |**
**அனுப4விப விஷயதொ3ளு ஹரி இ**
**த்3த3னுப4விஸி நிர்லேப மனதொ3ளு**
**உணிஸுதனப4வகீவனென்னுத ஸதத திளியுவனு ||79**

பேளித - மேலே கூறிய; இனிதுபாயவு - இந்த உபாயங்கள் (வகைகள்); மனுஜ ஸாமான்யரிகெ - பாமர மனிதர்களுக்கு; ஸல்வுது- பொருந்துகிறது; இதரொளு - இதில்; மனவ நிக்ரஹிஸுவனு - மனதை கட்டுப்படுத்துபவன்; ஞானியு - ஞானி எனப்படுகிறான்; தத்வவனு - மத்வ மதத்தின் தத்வங்களை; க்ரஹிஸி - புரிந்துகொண்டு; அனுபவிப விஷயதொளு - தான் அனுபவிக்கும் விஷயங்கள் அனைத்திலும்; ஹரி இத்து - ஸ்ரீஹரி இருக்கிறான் என்று அறிந்து; அனுபவிஸி - அந்த

அனுசந்தானத்துடன் அனுபவித்து; நிர்லேப மனதொளு - பட்டும் படாமலும் ஆன மனதுடன்; உணிஸுதன - உண்பவனுக்கு; பவகீவனென்னுத - (அதன் பலன்களை) அவனுக்கு கொடுக்கிறான் என்று; ஸதத திளியுவனு - (ஞானியானவன்) எப்போதும் அறிகிறான்.

இவ்வாறு கூறிய இந்த வகைகள், பாமர மக்களுக்கு சரியாக பொருந்துகின்றன. இவற்றை செய்து, மனதை கட்டுப்படுத்துபவன், ஞானி எனப்படுகிறான். மத்வ மதத்தின் தத்வங்களை புரிந்துகொண்டு, தான் அனுபவிக்கும் விஷயங்கள் அனைத்திலும் ஸ்ரீஹரி இருக்கிறான் என்று அறிந்து, அந்த அனுசந்தானத்துடன், நிர்லேபமான மனதுடன் இருப்பவனுக்கு, ஸ்ரீஹரி அதன் பலன்களை அவனுக்கே கொடுக்கிறான்.

அனுப4வக்கெ தந்து3கோ ஸகல ஸா
த3னக3ளொளகி3து3 முக்2ய பாமர
மனுஜரிகெ3 பேளித3ரெ திளியது3 பு3த4ரிக3ல்லத3லெ ||16

மனதால், வாக்கினால், தேகத்தால் செய்யும் அனைத்து காரியங்களையும், ஸ்ரீபரமாத்மனுக்கு செய்யப்படும் பிரதட்சிணை என்று நினைத்து, அவற்றை ஸ்ரீபரமாத்மனுக்கு அர்ப்பித்து, மகிழ்ச்சி அடைந்துகொண்டிரு. இந்த விஷயங்களை சொல்லிப் பலனில்லை. அனுபவத்திற்குக் கொண்டு வா. முக்திக்கு இதைவிட சாதனை என்று எதுவும் இல்லை. ஆனால், இது சாதாரண மக்களின் மனதிற்கு புரிவது கஷ்டம். ஞானிகளுக்கு மட்டுமே புரியும் விஷயம் இது. அஞ்ஞானிகளுக்கு உபதேசம் செய்து என்ன பலன்? என்று உதாசீனம் செய்யவேண்டாம். புரியாத விஷயங்களை, குருகளிடமிருந்து அறிந்து, அனுபவத்திற்குக் கொண்டு வரவேண்டும் என்பதே ஸ்ரீஜகன்னாததாஸரின் கருத்து.

**ஈ பரிய சிந்தனெய மாடு3த**
**பாப புண்ய த்3வந்த்3வ கர்மகெ1**
**லேபனாக3தெ3 முக்2ய கர்தனு ஹரியு எந்த3ரிது |**
**லோபகெ3ய்ஸத3லர்ப்பிஸலு ஹரி**
**பாபகர்மத3 ப2லவனீயதெ3**
**ஸ்ரீபதியு ப்ரீதியனெ வருத்3தி4ஸி தன்னனே தோர்ப்ப ||80**

ஈ பரிய சிந்தனெய மாடுத - மேற்கூறிய வகையில் சிந்தனையை செய்தவாறு; பாப புண்ய த்வந்த்வ கர்மகெ - பாப புண்ய என்னும் இரு கர்மங்களுக்கும்; லேபனாகதெ - அடிமையாகாமல் ; முக்ய கர்தனு - அவற்றை செய்பவன்; ஹரியு எந்தரிது - ஸ்ரீஹரியே என்று அறிந்து; லோபகெய்ஸதெ - அவற்றை வீணடிக்காமல்; அர்ப்பிஸலு - ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்தால்; ஹரி - ஸ்ரீஹரியானவன்; பாபகர்மத - பாவ கர்மங்களின்; பலவனீயதெ - பலன்களைக் கொடுக்காமல்; ஸ்ரீபதியு ப்ரீதியனெ - ஸ்ரீஹரியின் மேலான அன்பினையே; வ்ருத்திஸி - வளர்த்து; தன்னனே தோர்ப்ப - கடைசியில் தன்னையே கொடுப்பான்.

தாம் வெறும் ஒரு கருவியே என்றும் அனைத்தையும் செய்பவன், செய்விப்பவன் ஸ்ரீஹரியே என்று அறிந்து அந்த செயல்களை செய்து, பின் அவற்றை ஸ்ரீஹரிக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும் என்கிறார் ஸ்ரீதாஸர்.

மேற்கூறிய வகையில் சிந்தனையை செய்தவாறு, பாப புண்ய என்னும் இரு கர்மங்களுக்கும் அடிமையாகாமல், அவற்றை செய்பவன், ஸ்ரீஹரியே என்று அறிந்து, அவற்றை வீணடிக்காமல், ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்தால், ஸ்ரீஹரியானவன், பாவ கர்மங்களின் பலன்களைக் கொடுக்காமல், ஸ்ரீஹரியின் மேலான அன்பினையே வளர்த்து, கடைசியில் தன்னையே கொடுப்பான்.

ஹரிகதாம்ருதஸாரத்தில் பல இடங்களில் இதைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாஸர் கூறியிருந்தாலும், ஒரேயொரு பத்யத்தை உதாரணமாக பார்க்கலாம்.

ஹரியெ முக்$^{2}$ய நியாமகனு எ
ந்த$^{3}$ரிது$^{3}$ புண்யாபுண்ய ஹருஷா
மருஷ லாபா$^{4}$லாப$^{4}$ ஸுக$^{2}$துக்கா$^{2}$தி$^{3}$ த்$^{3}$வந்த்$^{3}$வக$^{3}$ள |
நிருத அவனங்க்ரிகெ$^{3}$ ஸமர்ப்பிஸு
நரக பூ$^{4}$ ஸ்வர்க்கா$^{3}$பவர்க$^{3}$தி$^{3}$
கரண நியாமகன ஸர்வத்ரத$^{3}$லி நெனெவுதிரு ||(11-14)

ஸ்ரீஹரியே அனைத்து செயல்களையும் செய்விக்கிறான் என்று அறிந்து புண்ய பாவங்களை, ஸ்ரீபரமாத்மனுக்கு சமர்ப்பணம் செய்யவேண்டும். மகிழ்ச்சி, கோபம், லாபம், நஷ்டம், சுக, துக்கம், என

அனைத்தையும், எது வந்தாலும், அவை அனைத்தும் பகவத் விருப்பமே என்று சிந்தித்து, பரமாத்மனுக்கு சமர்ப்பித்து, நரக, பூமி, ஸ்வர்க்க, முக்தி முதலான எந்த இடத்திற்கு நாம் சென்றாலும், நம் இந்திரிய நியாமகனான ஸ்ரீஹரியே அங்கும் இருந்து, அந்தந்த சுக துக்கங்களை கொடுக்கிறான் என்று அனைத்து இடங்களிலும் பரமாத்மனை சிந்திக்க வேண்டும்.

**ஸுத்தி ப$^{3}$ளலுத கர்மவஶதை$^{3}$ம்**
**ப$^{3}$த்துனாலகு லக்ஷ யோனிக$^{3}$**
**ளெத்தி ஹரி கருணிஸலு ப$^{3}$ருவனு மனுஜ யோனியொளு |**
**தெ$^{1}$த்தி$^{1}$ ப$^{3}$ஹு ஜன்மக$^{3}$ள இத$^{3}$ரொளு**
**ப$^{4}$க்தி ஞானத$^{3}$ க்ரமதி$^{3}$ பெ$^{1}$ச்சிஸி**
**ப்$^{4}$ருத்யனாத$^{3}$ ஸுயோக்$^{3}$ய ஜீவனு காம்ப$^{3}$ பி$^{3}$ம்ப$^{3}$வனு ||81**

ஸுத்தி பளலுத - எங்கெங்கோ (எப்படியோ) சுற்றித் திருந்து; கர்மவஷத - கர்ம வஷத்தினால்; எம்பத்துனாலகு லக்ஷ யோனிகளெத்து - 84 லக்ஷ யோனிகளில் பிறவிகளை எடுத்து; ஹரி கருணிஸலு - கடைசியில் ஸ்ரீஹரியின் அருளால்; மனுஜ யோனியொளு பருவனு - மனித யோனியில் வருகிறான்; பஹு ஜன்மகள தெத்தி - பல பிறவிகளை எடுத்து; இதரொளு - இவற்றில்; பக்தி ஞானத - பக்தி ஞானம் ஆகியவை; க்ரமதி பெச்சிஸி - படிப்படியாக வளர்ந்து; ப்ருத்யனாத - ஸ்ரீஹரியின் சேவகனான; ஸுயோக்ய ஜீவனு - தக்க யோக்யதையைக் கொண்ட ஜீவன்; பிம்பவனு - தன் பிம்பமூர்த்தியை; காம்ப - காண்பான்.

எங்கெங்கோ எப்படியோ சுற்றித் திரிந்து, கர்ம வஷத்தினால், 84 லட்ச யோனிகளில் பிறவிகளை எடுத்து, கடைசியில் ஸ்ரீஹரியின் அருளால், இந்த மனிதப் பிறவியில் ஜீவன் வருகிறான். பல பிறவிகளை எடுத்து, இவற்றில், பக்தி ஞானம் ஆகியவற்றை படிப்படியாக வளர்த்து, ஸ்ரீஹரியின் சேவகனான தக்க யோக்யதையைக் கொண்ட இந்த ஜீவன், தம் பிம்பமூர்த்தியை காண்பான்.

ஏஸு காயங்கள களெது 84 லட்ச யோனி
ஜீவ ராஷிகள தாடி பந்த ஈ ஷரீர
தானல்ல தன்னதல்ல - ஆஷெ தரவல்ல முந்தெ பாஹோதல்ல
தாஸனாகு விசேஷனாகு

இத்தகைய அரிதாக வந்திருப்பதான பிறவியைப் பற்றி பல ஹரிதாஸர்களும் பாடியிருகின்றனர். முன்னர் எப்படி இருந்தோம் என்றும் தெரியாது; இத்தகைய பிறவி இனி அடுத்து வருமா என்றும் தெரியாது; ஆகையால், இப்போது நீ உடனடியாக ஸ்ரீஹரியின் தாஸன் ஆகு; விசேஷமான ஞானத்தைப் பெறுபவன் ஆகு; அதன் மூலம், ஸ்ரீஹரியின் அதாவது தன் பிம்பமூர்த்தியின் தரிசனத்தைப் பெறுபவன் ஆகுவாயாக.

**ஜனிஸி போகு$^{3}$வ தே$^{3}$ஹ க$^{3}$ணிஸதெ$^{3}$**
**ஜனுமக$^{3}$ள ப$^{3}$ஹு த$^{4}$ரிஸி ஸத் ஸா**
**த$^{4}$னெய கெ$^{3}$ய்வுதெ$^{3}$ ஸத்வஜீவிய ஸாத$^{4}$னத$^{3}$ ஆயு |**
**இனிது காலவனெணிஸி யோக்$^{3}$யதெ**
**க$^{3}$னுகு$^{3}$ணத$^{3}$ லக்ஷணவ காணுத**
**அனுனயதி$^{3}$ திளியுவுது$^{3}$ தே$^{3}$ஹிய பா$^{3}$ல்ய வ்ருத்$^{3}$தா$^{4}$ப்ய ||82**

ஜனிஸி போகுவ தேஹ - (இந்த பிறவியில்) வந்து போகும் தேகம் பற்றி; கணிஸதெ - எண்ணாமல் (கவனிக்காமல்) ; பஹு - பற்பல; ஜனுமகள - பிறவிகளை; தரிஸி - எடுத்து; ஸத் ஸாதனெய கெய்வுதே - நல்ல ஸாதனைகளை செய்வதே; ஸத்வஜீவிய - ஸத்வ ஜீவனின்; ஸாதனத ஆயு - ஸாதன ஆயுள் ஆகும்; இனிது காலவனெனிஸி - (ஸாதன செய்வதற்கு இதுவே) சரியான காலம் என்று எண்ணி; யோக்யதெக அனுகுணத - தங்களின் யோக்யதைகேற்பதான; லக் ஷணவ காணுத - செயல்களை கண்டறிந்து (அவற்றை செய்பவர்களை); தேஹிய பால்ய வ்ருத்தாப்ய - இத்தகைய தேகம் கொண்டவர்களை, பாலகன், வயதானவன் என்று அவர்களுக்குத் தக்கவாறு; அனுனயதி திளியுவுது - என்று தெளிவாக அறிய வேண்டும்.

இந்தப் பிறவியில் வந்திருக்கும் தேகத்தைப் பற்றி எண்ணாமல், பற்பல பிறவிகளை எடுத்து, நல்ல ஸாதனைகளை செய்வதே, ஸத்வ ஜீவனின் ஸாதன ஆயுள் ஆகும். அத்தகைய ஸாதனைகளை செய்வதற்கு இதுவே சரியான காலம் என்று எண்ணி, தங்களின் யோக்யதைகளுக்கு ஏற்ப, செயல்களை கண்டறிந்து, அவர்களது ஸாதன ஆயுள் (ஸாதனை சரீரத்தின் வயது) என்ன என்பதை நாம் அறிந்து கொள்ளலாம்.

இந்த பௌதிக தேகத்தின் ஆயுள் என்ன என்பது நமக்குத் தெரியும்; இத்தகைய செயல்களை செய்தால், இவ்வளவு வயது ஆகியிருக்கிறது என்பதையும் நாம் அறிகிறோம். அதாவது 10ம் வகுப்பு தேர்ச்சி அடைந்திருக்க்கிறார் என்றால் 15-16 வயது என்றும்; மேற்படிப்பு படிக்கிறார் என்றால் 22-23 வயது என்றும்; வேலையிலிருந்து ஓய்வு பெறுகிறார் என்றால் 58-60 வயது என்றும் சில உதாரணங்களை சொல்லலாம்.

ஆனால், அது போல, ஸாதன ஷரீரத்திற்கும் வயது சொல்லமுடியுமா? என்றால், முடியும் என்று சொல்லி, அடுத்து வரும் பத்யங்களில், ஜீவன் எத்தகைய ஸாதனங்களை செய்தால், அவன் எந்த 'ஸாதன வயதில்' இருக்கிறான் என்பதை சொல்கிறார். பௌதிக ஷரீரத்திற்கும், ஸாதன ஷரீரத்திற்கும் சம்பந்தம் இல்லை என்பதை நாம் பார்க்கப்போகிறோம்.

**அஸுவ த[4]ரிஸுத மனுஜ தே[3]ஹதி[3]**
**ஶ்வஸன மத லாஞ்சனவ ரக்ஷிஸி**
**பி[3]ஸஜனாப[4]கெ[3] அதி[4]க ஸமரின்னில்லவெந்தெம்ப[3] |**
**ஹஸனதீ[3] ஸாமான்ய ஞானதி[3]**
**நிஶி ஹக[3]லு வஸுதெ[4]யலி களெவகெ[3]**
**முஸுகி[1]த[3]ரு வ்ருத்[3]தா[4]ப்ய அவனது[3] ஶைஶவாவஸ்தெ[2] ||83**

அஸுவ தரிஸுத - இந்த வாழ்க்கையில்; மனுஜ தேஹதி - மனித தேகத்தில் இருந்து கொண்டு; ஷ்வஸன மத - வாயுதேவரின் மதத்தின்; லாஞ்சனவ - குறியீடுகளை (கோபிசந்தன, முத்திரைகளை); ரக்ஷிஸி - தரித்துக் கொண்டு; பிஸஜனாபகெ - ஸ்ரீபத்மனாபனுக்கு; அதிக ஸமரின்னில்ல - அதிகமோ, சமமானவரோ இல்லை; எந்தெம்ப - என்று சொல்லும்; ஹஸனத - சிறந்ததான - ஈ ஸாமான்ய ஞானதி - இத்தகைய சாமான்ய ஞானத்துடன்; நிஷி ஹகலு - இரவும் பகலும்; வஸுதெயலி - இந்த உலகில்; களெவகெ - காலத்தைக் கழிப்பவர்களுக்கு; அவனது - அவனுடைய; வ்ருத்தாப்ய - வயது (நிலை); ஷைஷவாவஸ்தெ - குழந்தை (மழலை) நிலை என்று; முஸுகிதரு - கூறினார்கள்.

இந்த வாழ்க்கையில், மனித தேகத்தில் இருந்துகொண்டு, வாயுதேவரின் மதத்தின் குறியீடுகளை (கோபிசந்தன முத்திரைகளை) தரித்துக் கொண்டு, ஸ்ரீபத்மனாபனுக்கு அதிகமோ, ஸமமானவரோ

இல்லை என்று சொல்லும் சிறந்ததான இந்த சாமான்ய ஞானத்துடன், இரவும் பகலும், இந்த உலகில், காலத்தை கழிப்பவர்களுக்கு, அவனுடைய வயது / நிலை (ஸாதன சரீரத்தின் வயது), குழந்தை (மழலை) நிலை என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

கோபிசந்தன முத்திரைகளை தரித்து, ஹரி ஸர்வோத்தமா வாயு ஜீவோத்தமா என்று கூறிக்கொண்டு மட்டுமே இருப்பவர்கள், ஸாதனைக்கான படியில் குழந்தை நிலையில் இருக்கின்றனர் என்று ஸ்ரீதாஸர் கூறுகிறார்.

**மீரத3லெ விதி4க3ளனு நித்3ரா**
**ஹார வர்ஜிஸி வ்ரதகெ3ய்து3 ஶ**
**ரீர த3ண்டி3ஸி பா3ஹ்ய தனுமன ஶுத்3தி4 ஸாத4னதி3 |**
**வாரிஜாக்ஷன கருண ஜயஸுத**
**தா4ருணியொளீரீதி1 இருவவ**
**தீ4ரக்ஞானிக3ளிந்த3 கரெஸுவ பாலகனு எந்து3 ||84**

விதிகளனு மீரதலெ - விதி / விதிமீறல்களை பின்பற்றியவாறு; நித்ரா ஹார வர்ஜிஸி - தூக்கம் / ஆகாரங்களை தவிர்த்து; வ்ரதகெய்து - விரதங்களை செய்து; ஷரீர தண்டிஸி - இந்த தேகத்தினை வருத்திக் கொண்டு; பாஹ்ய தனுமன - புற தேக, மனதின்; ஷுத்தி ஸாதனதி - சுத்தங்களை செய்தவாறு; வாரிஜாக்ஷன - ஸ்ரீஹரியின்; கருண ஜயஸுத - கருணையை ஜெயித்தவாறு; தாருணியொளு - பூமியில்; ஈ ரீதி - இப்படியாக; இருவவ - இருப்பவன்; பாலகனு எந்து - சிறுவன் என்று; தீர ஞானிகளிந்த - கற்றறிந்த ஞானிகளால்; கரெஸுவ - அழைக்கப்படுகிறான்.

ஸாதனைக்கான படியில், குழந்தை நிலையிலிருந்து அடுத்த படிக்கு முன்னேறியிருப்பவர்களை பாலகன் என்று அழைக்கின்றனர். அது என்ன என்றால்:

விதி மற்றும் விதிமீறல்களை பின்பற்றியவாறு, தூக்கம் ஆகாரங்களை தவிர்த்து, கடுமையான விரதங்களை செய்து, இந்த தேகத்தினை வருத்திக் கொண்டு, புற தேக மற்றும் மனதினை ஷுத்தி செய்தவாறு, ஸ்ரீஹரியின் கருணையை ஜெயித்தவாறு, இந்த பூமியில் இருப்பவன், 'பாலகன்' என்று ஞானிகள் கூறுகின்றனர்.

சந்தியாவந்தனம், ஏகாதசி உபவாசம், ஸ்ரீகோகுலாஷ்டமி விரதங்கள் மற்றும் பிற விரதங்களை விதிப்படி செய்து, புற தேக மற்றும் மனதினையும் சுத்தம் செய்து கொண்டிருப்பவர்கள், அடுத்த நிலையில் 'பாலகன்' என்று அறியப்படுகிறார்கள் என்று ஸ்ரீதாஸர் கூறுகிறார்.

**ப$^{4}$த்$^{3}$ரக$^{3}$தியனு மனதி$^{3}$ ப$^{3}$யஸுத**
**பத்$^{3}$த$^{4}$தியனனுஸரிஸி மானவ**
**மத்$^{4}$வ விரசித தத்வஸாரவ ஸத்கு$^{3}$ரு த்$^{3}$வாரா**
**ஶுத்$^{3}$த$^{4}$து$^{3}$பதே$^{3}$ஶத$^{3}$லி திளியுத**
**ஶ்ரத்$^{3}$தெ$^{3}$யிந்த$^{3}$லி க்$^{3}$ரஹிஸி வித்$^{4}$யெய**
**ஹ்ருத்$^{3}$குஹாவாஸியனு காம்பு$^{3}$வ ஹம்ப$^{3}$லனு தாளி ||85**

பத்ரகதியனு - முக்திக்கான வழியை; மனதி பயஸுத - மனதில் விரும்பியவாறு; பத்ததியனனுஸரிஸி - அதற்கான தக்க வழிகளை அனுசரித்து; மானவ - மனிதனானவன்; ஸத்குரு த்வாரா - ஒரு நல்ல குருவின் மூலமாக; மத்வ விரசித - ஸ்ரீமதாசார்யர் கூறியுள்ள; தத்வஸாரவ - தத்வங்களின் ஸாரத்தினை; ஷுத்ததுபதேஷதலி - யதார்த்த ஞானத்தின் உபதேசம் மூலமாக; திளியுத - அறிந்து கொண்டு; ஷ்ரத்தெயிந்தலி - மிகவும் சிரத்தையுடன்; வித்யெய - அந்த வித்யையை; க்ரஹிஸி - புரிந்து கொண்டு; ஹ்ருத்குஹாவாஸியனு - மனதில் இருப்பவனை; காம்புவ - காணும்; ஹம்பலனு தாளி - விருப்பத்தினைப் பெற்று; (அடுத்த பத்யத்தில் தொடர்கிறது).

இந்த மற்றும் அடுத்த பத்யத்தில், குழந்தை, பாலகன் ஆகிய நிலைகளைத் தாண்டி, அடுத்த நிலையான 'ப்ராயதவ - வாலிபன்' என்னும் நிலையில் உள்ளவர்கள் செய்யும் செயல்களை சொல்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

முக்திக்கான வழியை மனதில் விரும்பியவாறு, அதற்கான தக்க வழிகளை அனுசரித்து மனிதனானவன், ஒரு நல்ல குருவின் மூலமாக, ஸ்ரீமதாசார்யர் கூறியுள்ள தத்வங்களின் ஸாரத்தினை யதார்த்த ஞானத்தின் உபதேசம் மூலமாக அறிந்து கொண்டு, மிகவும் சிரத்தையுடன் அந்த வித்யையை புரிந்து கொண்டு, மனதில் இருக்கும் பிம்பமூர்த்தியை காணும் விருப்பத்தினைப் பெற்று...

பிம்ப உபாஸனை முறையை அறிந்து, அதற்கான பாதையில் செல்பவர்களை, ஸாதனை சரீரத்தின் அடுத்த படியில் இருப்பவர்கள் என சொல்லலாம். மேலும் அவர்கள் என்ன செய்கிறார்கள் / செய்ய வேண்டும் என்பதை அடுத்த பத்யத்திலும் தொடர்கிறார் ஸ்ரீதாஸர்.

**தத்வவனு தன்னொளகெ3 தர்க்கிஸி**
**ஹொத்து ஹொத்திகெ3 அளலி ப3ளலுத**
**நித்ய ஸுக2 ஸம்ப்ராப்திகோ3ஸுக3 ஸதத யத்னிஸுத |**
**தத்தளிப ஆ நரனு மர்த்யதி3**
**தெத்திரலு தன்னாயுமானவ**
**தத்வவேத்தரு திளிவரவனனு ப்ராயத3வனெந்து3 ||86**

தத்வவனு - ஸ்ரீமதாசார்யரின் தத்வங்களை; தன்னொளகெ தர்க்கிஸி - தனக்குள்ளே தர்க்கம் செய்து; ஹொத்து ஹொத்திகெ - அனைத்து சமயங்களிலும்; அளலி பளலுத - அழுது புரண்டவாறு; நித்ய ஸுக - முக்தி; ஸம்ப்ராப்திகோஸுக - அடைய வேண்டும் என்பதற்காக; ஸதத யத்னிஸுத - எப்போதும் முயற்சி செய்தவாறு; தத்தளிப ஆ நரனு - இருப்பவனான அந்த மனிதன்; தன்னாயுமானவ - தன் ஆயுட் காலத்தை; மர்த்யதி - பிற மனிதர்களுடன்; தெத்திரலு - சேர்ந்திருக்க; தத்வவேத்தரு - தத்வாபிமானி தேவதைகள்: அவனனு- அவனை; ப்ராயதவனெந்து - வாலிபன் என்று; திளிவரு - அறிவார்கள்.

ஒரு தக்க குருவின் மூலமாக கற்றறிந்த ஸ்ரீமதாசார்யரின் தத்வங்களை, தனக்குள்ளே தர்க்கம் செது, அனைத்து சமயங்களிலும் அழுது புரண்டவாறு, முக்தி அடைய வேண்டும் என்பதற்காக, எப்போதும் முயற்சி செய்தவாறு, இருப்பவனான அந்த மனிதன், தன் ஆயுட் காலத்தை இவ்வாறாக பிற மனிதர்களுடன் கழிப்பவன், தத்வாபிமானி தேவதைகளால், வாலிபன் என்று அழைக்கப்படுகிறான்.

ஸாதனைக்கான படியில், அடுத்த நிலையில் இருப்பவர்களை ‘வாலிபன்’ என்று கூறி, அவர்கள் செய்யும் / செய்ய வேண்டிய செயல்களை இந்த இரு பத்யங்களிலும் விளக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

**அனுநயதி3 நிஜகு3ருவு லபி4ஸலு**
**ஜனும ஜனும ஜனுமாந்தரத3 வாஸனெ**
**யனுஸரிஸி ப3ந்தி3ருவ ஶாஸ்த்ரார்த்த2க3ளு க4னதரதி3 |**

**க்ஷணதி³ கன்னடி³ கரதி³ பிடி³த³ந்**
**த¹னுப⁴வகெ¹ ப³ந்தொ³த³க³லு நர**
**ஸுகி²ஸலவனனு ப்ராக்ஞரரிவரு தீ⁴ர நரனெந்து³ ||87**

அனுநயதி - மிகவும் அன்புடன்; நிஜகுருவு - ஒரு உண்மையான குரு; லபிஸலு - கிடைக்க; ஜனும ஜனும ஜனுமாந்தரத - முன்னர் சென்ற மூன்று பிறவிகளின்; வாஸனெயனுஸரிஸி - சிந்தனைகளை அனுசரித்து; பந்திருவ - தற்போது வந்திருக்கும்; ஷாஸ்த்ரார்த்தகளு - சாஸ்திர அர்த்தங்கள் அனைத்தும்; கனதரதி - மிகவும் விரைவாக; கன்னடி - ஒரு கண்ணாடியை; கரதி பிடிதந்த - பிடித்ததைப் போலான; அனுபவகெ - அனுபவத்தை; க்ஷணதி - ஒரு நொடிப்பொழுதில்; பந்ததொதகலு - வந்து சேர; நர ஸுகிஸலு - அந்த மனிதன் மகிழ்ந்திருக்க; அவனனு - அவனை; ப்ராக்ஞரு - அறிஞர்கள்; தீர நரனெந்து - (நன்கு வளர்ந்த) மனிதன் என்று; அரிவரு - அறிவார்கள்.

வாலிபனுக்கு அடுத்த நிலையாக ‘மனிதன்’ என்னும் நிலையில் லட்சணங்களை இந்த பத்யத்தில் கூறுகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

மிகவும் அன்புடன், ஒரு உண்மையான குரு கிடைக்க, முன்னர் சென்ற மூன்று பிறவிகளின் சிந்தனைகளை அனுசரித்து, தற்போது வந்திருக்கும் சாஸ்திர அர்த்தங்கள் அனைத்தும், மிகவும் விரைவாக ஒரு கண்ணாடியைப் போல அனுபவத்தை ஒரு நொடிப்பொழுதில் பெறுகிறான். இவ்வாறான அனுபவத்தைப் பெற்று, அந்த மனிதன் மகிழ்ந்திருக்க, அவனை அறிஞர்கள், ‘தீர நரன்’ மனிதன் என்று கூறுகிறார்கள்.

**அன்ய வஸ்துவ மனதி³ ஸ்மரிஸதெ³**
**ஜன்ய ஸுக² து³க்க²க³ள ஸமனிஸி**
**ஸன்னுத ஸ்ரீஹரிய கு³ண கர்மக³ள கொண்டா³டி³ |**
**க³ண்யவித³ல்லபார மஹிமன**
**உன்னதத³ ஸத்ப⁴க்தி ஞானதி³**
**தை³ன்யதி³ம் ப்ரார்த்திஸுத நிஸ்சல த்⁴யானதொ³ளு நிலிஸி ||88**

அன்ய வஸ்துவ மனதி ஸ்மரிஸதெ - வேறு எதைப் பற்றியும் சிந்திக்காமல்; ஜன்ய ஸுக துக்ககள ஸமனிஸி - வருவதான சுக

துக்கங்கள் என இந்த இரண்டையும் ஒன்றாகவே (சமமாக) பாவித்து; ஸன்னுத ஶ்ரீஹரிய - தேவதைகள் கொண்டாடுவதான ஶ்ரீஹரியின்; குண கர்மகள - நற்குணங்களை, செயல்களை; கொண்டாடி - போற்றியவாறு; கண்யவிதல்லபார மஹிமன - ஸர்வோத்தமனான, அபார மஹிமனைக் குறித்தான; உன்னதத ஸத்பக்தி ஞானதிம் - மிகச்சிறந்த ஸத்பக்தி, ஞானத்துடன்; தைன்யதிம் - பக்தியுடன்; ப்ரார்த்திஸுத - வணங்கியவாறு; நிஷ்சல த்யானதொளு - இடைவிடாத தியானத்தில்; நிலிஸி - மனதினை நிறுத்த வேண்டும்.

குழந்தை, பாலகன், வாலிபன், மனிதன் ஆகிய நான்கு நிலைகளைக் கடந்து வரும் ஜீவி, அடுத்த நிலையில் என செய்கிறார் / என்ன செய்ய வேண்டும் என்பதை, அந்த லட்சணங்களை இந்த மற்றும் அடுத்த பத்யத்தில் விளக்குகிறார் ஶ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

வேறு எதைப் பற்றியும் சிந்திக்காமல், நமக்கு வருவதான சுக துக்கங்கள் என இந்த இரண்டையும் ஒன்றாகவே / சமமாக பாவித்து; தேவதைகள் கொண்டாடுவதான ஶ்ரீஹரியின் நற்குணங்களை கொண்டாடியவாறு; ஸர்வோத்தமனான அபார மஹிமனைக் குறித்தான மிகச்சிறந்த ஸத்பக்தி, ஞானத்துடன் பக்தியுடன் வணங்கியவாறு, இடைவிடாத தியானத்தில் மனதினை நிறுத்த வேண்டும்.

இதற்கான தொடர்ச்சி அடுத்த பத்யத்தில் வருகிறது.

**ஈ வித⁴தி³ தல்லீனனாகு³த**
**தே³வ தே³வன ஹ்ருத³ய மத்⁴யதி³**
**பா⁴வதி³ந்த³லி கண்டு³ ஹர்ஷிபனன்னு பு⁴வியொளகெ³ ।**
**பா⁴வி ஜீவன்முக்தனென்னுத**
**கோவித³ரு திளியுவரு ஆதனெ**
**கேவலதி³ ப³லிதி¹ருவ ஸாத⁴னதா³யு கண்ட³வனு ।।89**

ஈ விததி - முந்தைய பத்யத்தில் கூறியவாறு; தல்லீனனாகுத - ஈடுபட்டு; தேவ தேவன - ஶ்ரீஹரியை; ஹ்ருதய மத்யதி - இதயத்தின் நடுவில்; பாவதிந்தலி கண்டு - மிகவும் அனுசந்தானத்துடன் கண்டு; ஹர்ஷிபனன்னு - மகிழ்பவனை; புவியொளகெ - இந்த உலகில்; பாவி ஜீவன்முக்தனு - எதிர்காலத்தில் முக்தி அடையப் போகிறவன்;

என்னுத கோவிதரு திளியுவரு - என்று கற்றறிந்த அறிஞர்கள் அறிவார்கள்; ஆதனெ - அத்தகையவனே; கேலவதி பலிதிருவ - மிகவும் முதிர்ந்ததான (பக்குவமடைந்த); ஸாதனதாயு - ஸாதனை செய்வதற்கான ஆயுளை; கண்டவனு - பெற்றவன் ஆகிறான்;

இப்படியாக பகவந்தனைக் குறித்தான த்யானத்தில் ஈடுபட்டு, ஸ்ரீஹரியை தன் இதயத்தின் நடுவில் கண்டு மகிழ்பவனை, இந்த உலகில், ஜீவன் முக்தன் என்கின்றனர். அதாவது, எதிர்காலத்தில் முக்தி அடையப் போகிறவன் என்கிறார்கள். அத்தகையவனே, மிகவும் முதிர்ந்ததான (பக்குவமடைந்த) ஸாதனை செய்வதற்கான ஆயுளைப் பெற்றவன் ஆகிறான்.

குழந்தை, பாலக, வாலிப, மனிதன் என்னும் பல ஸாதனை ஆயுளின் நிலைகளைத் தாண்டி அடுத்த நிலையான பக்குவமடைந்த நிலையினைக் குறித்தே இந்த மேற்கண்ட இரு பத்யங்களில் ஸ்ரீதாஸர் விளக்கியிருக்கிறார்.

இத்தகைய நிலைகளில் நாம் எந்த நிலையில் இருக்கிறோம் என்பதை கண்டறிந்து, நம்மை அடுத்தடுத்த நிலைகளுக்கு முன்னேற்றி, ஸாதனைகளை செய்ய வேண்டும் என்பது ஸ்ரீதாஸர் சொல்ல வருவதான கருத்து என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

**முந்தி3வரு அனுப4விப மஹதா3**
**நந்த3 வைப4வ பேளலஸத3ள**
**ச2ந்த3தா3 க்ருபெயிந்த3 ஹ்ருத3யத3 மந்தி3ரவ மத்4யெ |**
**ஸுந்த3ராக்ருதி பி3ம்ப3த3ர்ஷன**
**தி3ந்த3 த்ருப்தரு திளிவுதி3வரு வ**
**ஸுந்த4ரெய மேலிர்து3 வர்தி1ப லக்ஷணக3ளிந்த3 ||90**

(முந்தைய பத்யத்தில் பார்த்தவரை) முந்திவரு - அடுத்து இவர்; அனுபவிப மஹதானந்த - மிகப்பெரிய ஆனந்தத்தை (முக்தியை); வைபவ - அதன் சிறப்புகளை; பேளலஸதள - வர்ணிக்க முடியுமா? (முடியாது); சந்ததா - (பகவந்தனின்) அற்புதமான; க்ருபெயிந்த - அருளால்; ஹ்ருதயத மந்திரவ மத்யெ - இதயக் கோயிலின் நடுவில்; ஸுந்தராக்ருதி பிம்பதர்ஷனதிந்த - மிகவும் அழகான பிம்ப தரிசன மூர்த்தியினால்; த்ருப்தரு - மிகவும் திருப்தியுடன் காணப்படுபவார்கள்;

வஸுந்தரெய - இந்த உலகில்; மேலிர்து வர்திப - இருந்து, இவர்கள் செய்யும் செயல்களால்; லக்ஷணகளிந்த - இவர்களின் லட்சணங்களிலிருந்து; திளிவுது - இது தெரிகிறது.

இத்தகைய பக்குவமடைந்த நிலையில் இருப்பவரின் லட்சணங்களை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

அடுத்து இந்த பக்குவமடைந்த ஸாதனா ஜீவி, அடுத்து அனுபவிக்க இருப்பதான முக்தியைப் பற்றி வர்ணிக்க முடியுமா? (முடியாது). பகவந்தனின் அற்புதமான அருளால், இதயக் கோயிலின் நடுவில் மிகவும் அழகான பிம்ப தரிசன மூர்த்தியினால் மிகவும் திருப்தியுடன் காணப்படுவார்கள். இந்த உலகிலிருந்து, இவர்கள் செய்யும் இத்தகைய செயல்களால், இவர்களுடைய லட்சணங்களிலிருந்து இது தெரிகிறது.

**ஸாத4னத3 வ்ருத்3தா4ப்1ய ஸார்த்த2க**
**கெ3ய்து3 ஸாத4ன பூர்ண மாடி3த3**
**ஸாது4க3ளு இவரெந்து3 திளிவுது3 பே4த3வெணிஸத3லெ |**
**ஆதி3மூருதி விஜயஸக2ன ப்ர**
**ஸாத3 படெ3த3தி1மோத3தி3ந்த3லி**
**மேதி3னியமே3லிர்து3 ஸுஜனகெ ஹாதி3 தோருவரு ||91**

(இத்தகையவர்கள்) ஸாதனத - ஸாதனையின்; வ்ருத்தாப்ய - காலத்தினை; ஸார்த்தக கெய்து - அற்புதமாக நிறைவேற்றி; ஸாதன பூர்ண மாடித - தங்கள் ஸாதனைகளை பூர்த்தி செய்துகொண்ட; ஸாதுகளு - அறிஞர்; இவரெந்து - இவரே என்று; பேதவெணிஸதலெ - எவ்வித சந்தேகமும் இல்லாதவாறு; திளிவுது - அறிய வேண்டும்; ஆதிமூருதி - ஆதி மூர்த்தியான; விஜயஸகன - ஸ்ரீகிருஷ்ணனின்; ப்ரஸாத படெது - தரிசனத்தை (அருளை) பெற்று; அதி மோததிந்தலி - மிகவும் மகிழ்ச்சியுடன்; மேதினியமேலிர்து - இந்த பூமியில் வாழ்ந்து; ஸுஜனகெ - ஸஜ்ஜனர்களுக்கு; ஹாதி தோருவரு - நல்வழியைக் காட்டுகிறார்கள்.

இத்தகையவர்கள், ஸாதனையின் காலத்தினை அற்புதமாக நிறைவேற்றி, தங்கள் ஸாதனைகளை பூர்த்தி செய்துகொண்ட இவரே அறிஞர் என்று, எவ்வித சந்தேகமும் இன்றி அறிய வேண்டும். ஆதி மூர்த்தியான ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனத்தை / அருளைப் பெற்று,

மிகவும் மகிழ்ச்சியுடன் இந்த பூமியில் வாழ்ந்து, ஸஜ்ஜனர்களுக்கு நல்வழியைக் காட்டுகிறார்கள்.

**அந்தரதி3 பா3ஹ்யத3லி ஶ்ரீஹரி**
**சிந்தனெயளோலயிஸி மனவனு**
**கந்துபிதனேகாந்த த்4யானதொ3ளாந்து1 முத3வன்னு |**
**ஸந்தததொ3ளீரீதி பரவஶ**
**ரந்திரலு லெக்கிஸரு ப்ராக்3ஞரு**
**ஸந்தெகூ1ட1த3 தெரதி3 இஹஸுக2 ப3யஸுவக்3ஞரனு ||92**

அந்தரதி பாஹ்யதலி - உள்ளும் புறமும்; ஶ்ரீஹரி சிந்தனெயளு - ஶ்ரீஹரியைப் பற்றிய சிந்தனையிலேயே; ஓலயிஸி - ஈடுபட்டு; மனவனு - மனதினை; கந்துபிதன - ஶ்ரீஹரியின்; ஏகாந்த த்யானதொளாந்து - ஏகாந்தமான தியானத்தில் ஈடுபடுத்தி; ஸந்தததொளு - நிரந்தரமாக (எப்போதும்); முதவன்னு - மகிழ்ச்சியாக இருக்கிறார்கள்; ஈரீதி பரவஷரந்திரலு - இப்படியாக மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள்; ஸந்தெகூடத தெரதி - காய்கறிச் சந்தையைப் போல; இஹஸுக பயஸுவ - இஹ சுகத்தினை விரும்பும்; அக்ஞரனு - அஞ்ஞானிகளை; ப்ராக்ஞரு - பகவத் பக்தர்களான ஞானிகள்; லெக்கிஸரு - புறக்கணிப்பார்கள்.

நன்கு பக்குவமடைந்த ஶ்ரீஹரி பக்தர்கள், எப்படி இருப்பார்கள் என்ன செய்வார்கள் என்று அவர்களின் லட்சணங்களை இந்த பத்யத்தில் கூறுகிறார் ஶ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

உள்ளும் புறமும் ஶ்ரீஹரியைப் பற்றிய சிந்தனையிலேயே ஈடுபட்டு, இவர்கள் தங்களின் மனதினை ஶ்ரீஹரியின் ஏகாந்த தியானத்தில் ஈடுபடுத்தி, நிரந்தரமாக மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள். எப்போதும், காய்கறிச் சந்தையைப் போல கூச்சலிட்டுக்கொண்டு, இஹ சுகத்தினை விரும்பும், அஞ்ஞானிகளை, பகவத் பக்தர்களான ஞானிகள் புறக்கணிப்பார்கள்.

இதை ஹரிகதாம்ருதஸாரத்தில் ஶ்ரீஜகன்னாத தாஸர் எவ்வாறு ஒரு பத்யத்தில் விளக்கியிருக்கிறார் என்பதை பார்க்கலாம்.

கன்னடி3ய கைபிடி3து3 நோள்பன

கண்ணுக3ளு கண்ட3ல்லி எரக3தெ3
தன்ன ப்ரதிபி3ம்ப3வனெ காம்பு3வ த3ர்ப்பணவ பி3ட்டு |
த4ன்யரிளெயொளகெ3ல்ல கடெ3யலி
நின்ன ரூபவ நோடி3 ஸுகி2ஸுத
ஸன்னுதிஸுதானந்த3 வாரிதி4யொளகெ3 முளுகி3ஹரு ||(31-13)

கையில் கண்ணாடியைப் பிடித்து பார்த்தால், நம் கண்கள் கண்ட இடத்தில் பாயாமல், அதில் தெரியும் நம் பிரதிபிம்பத்தை மட்டுமே பார்க்கும். இப்படி சாதாரண மக்களான நாம், கண்ணாடியில் தெரியும் நம் பிரதிபிம்பத்தை பார்த்து மகிழ்கிறோம். ஆனால், உன் ஏகாந்த பக்தர்கள், கண்ணாடி இல்லாமலேயே, அனைத்து இடங்களிலும் வியாப்தனான, பிம்ப ரூபியான உன் ரூபத்தை, எங்கு வேண்டுமோ அங்கு பார்த்து, மகிழ்ச்சி அடைந்தவாறு, ஸ்தோத்திரம் செய்தவாறு, மகிழ்ச்சிக் கடலில் மூழ்குகின்றனர். ஆஹா, அவர்கள் எத்தகைய தன்யர்கள்!!.

**வேத3ஶாஸ்த்ர புராண விதி4கெ3 வி**
**ரோத4 பாரத3 ரீதி தத்வவ**
**போ3தி4பரு கு3ரு மத்4வராயர ஸேவெ ஸல்லிஸுத |**
**ஶ்ரீத3னொலிமெலி விதி4 நிஷேத4த3**
**பா3தெ4க3ளுக1தெ3 சர்ய தோர்பரு**
**மேத3னியொளச்சரியெ காம்ப3ரு மந்த3 ஜனததிகெ3 ||93**

வேதஷாஸ்த்ர புராண விதிகெ - வேத சாஸ்திரங்கள், புராணங்களில் சொல்லப்பட்டுள்ள விதிகளுக்கு; விரோத பாரத ரீதி - எவ்வித விரோதமும் வராதவாறு; தத்வவ போதிபரு - தத்வங்களை போதிப்பார்கள்; குரு மத்வராயர - ஜகத்குரு ஸ்ரீமதாசார்யரின்; ஸேவெ ஸல்லிஸுத - சேவையை செய்தவாறு; ஶ்ரீதனொலிமெலி - ஸ்ரீஹரியின் அருளால்; விதி நிஷேதத பாதெ - விதி விதிவிலக்குகளின் பிரச்னைகளைப் பற்றி; அளுகதெ - பயப்படாமல்; சர்ய தோர்பரு - தங்கள் செயல்களை நடத்துவார்கள்; மேதினியொளு - பூமியில் உள்ள; மந்த ஜனததிகெ - மற்ற பாமர மக்களுக்கு; ஆச்சரியெ காம்பரு - வியப்பினை காட்டுவார்கள்.

அதே ஏகாந்த பக்தர்களின் லட்சணங்களை இந்த பத்யத்திலும் தொடர்ந்து விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

வேத சாஸ்திரங்கள், புராணங்களில் சொல்லப்பட்டுள்ள விதிகளுக்கு எவ்வித விரோதங்களும் வராதவாறு, தத்வங்களை போதிப்பார்கள். ஜகத்குரு ஸ்ரீமதாசார்யரின் சேவையை செய்தவாறு, ஸ்ரீஹரியின் அருளால், விதி விதிவிலக்குகளின் பிரச்னைகளைப் பற்றி பயப்படாமல் தங்கள் செயல்களை செய்வார்கள். பூமியில் உள்ள மற்ற பாமர மக்களுக்கு வியப்பினை காட்டுவார்கள்.

மாணவக தத்ப$^{2}$லக$^{3}$ளனுஸ
ந்தா$^{3}$னவில்லதெ$^{3}$ கர்மக$^{3}$ள ஸ்வே
ச்சானுஸாரதி$^{3}$ மாடி$^{3}$ மோதி$^{3}$ஸுவந்தெ ப்ரதிதி$^{3}$னதி$^{3}$ |
ஞானபூர்வக விதி$^{4}$ நிஷேத$^{4}$க$^{3}$
ளேனு நோட$^{3}$தெ$^{3}$ மாடு$^{3}$ கர்ம ப்ர
தா$^{4}$ன புருஷேஷனலி ப$^{4}$கு$^{3}$தி$^{1}$ய பே$^{3}$டு$^{3}$ கொண்டா$^{3}$டு$^{3}$ ||(11-15)

சிறுவர்கள் தான் செய்யும் செயல்களின் பலன்களை பெறவேண்டும் என்னும் விருப்பம் இல்லாமல் அந்த செயல்களை தன் இஷ்டத்திற்கு செய்து மகிழ்ச்சியடைவதைப் போல தினந்தோறும் தெளிவான ஞானத்துடன் இது செய்யலாம், இது செய்யக்கூடாது என்றெல்லாம் பார்க்காமல் அனைத்தையும் செய்விப்பனான புருஷோத்தமனே பிரதான கர்த்தன் என்று அறிந்து பக்தி செய்து, ஸ்தோத்திரம் செய்.

**கா$^{3}$ளிகொ$^{3}$ட்$^{3}$ட$^{3}$தெ$^{3}$ பூ$^{3}$தி$^{3}$ முச்சித$^{3}$**
**மூலெயலி ப்ரஜ்வலிப கெண்ட$^{3}$வ**
**போலுவரு ஸாது$^{4}$க$^{3}$ளு மஹிமெய தோரத$^{3}$லெ ஜக$^{3}$கெ |**
**பா$^{3}$லரந்தாடு$^{3}$வரு ஆளுவரு**
**வேளெ வேளெகெ$^{3}$ நகு$^{3}$த நமிபரு**
**காலகாலகெ ஹரிய ரூபவ நோடி$^{3}$ ஸர்வத்ர ||94**

காளிகொட்டதெ - காற்றுகூட இருக்காத; மூலெயலி - ஒரு மூலையில்; ப்ரஜ்வலிப - ஒளிர்வதான; பூதி முச்சித - சாம்பல் மூடிய; கெண்டவ போலுவரு - கங்கினைப் போன்றவர்கள்; ஸாதுகளு - இவர்கள் அறிஞர்கள்; ஜககெ - இவர்கள், உலகிற்கு; மஹிமெய தோரதலெ - தங்களின் மகிமையைக் காட்டாமல்; பாலரந்தாடுவரு - குழந்தைகளைப் போல திரிவார்கள்; வேளெ வேளெகெ நகுத - அவ்வப்போது சிரித்தவாறு; காலகாலகெ - எல்லா சமயங்களிலும்; ஸர்வத்ர - எல்லா இடங்களிலும்; ஹரிய ரூபவ நோடி - ஸ்ரீஹரியின்

ரூபத்தினை பார்த்து; நமிபரு - வணங்குவார்கள்; ஆளுவரு - சஞ்சரிப்பார்கள்.

காற்றுகூட புகாத ஒரு மூலையில் ஒளிர்வதான, சாம்பல் முடிய கங்கினைப் போன்றவர்கள் இவர்கள். அறிஞர்கள் எனப்படுகின்றனர். உலகிறகு தங்களின் மகிமைகளை காட்டாமல், குழந்தைகளைப் போல திரிவார்கள். அவ்வப்போது சிரித்தவாறு, எல்லா சமயங்களிலும், எல்லா இடங்களிலும், ஸ்ரீஹரியின் ரூபத்தினை பார்த்து வணங்குவார்கள். இப்படியே எப்போதும் சஞ்சரிப்பார்கள்.

இத்தகைய லட்சணங்களைக் கொண்டவர்கள், ஞானி என்று அழைக்கப்படுகின்றனர் என்று ஹரிகதாம்ருதஸாரத்தில் ஸ்ரீஜகன்னாத தாஸர் கூறுகிறார்.

மேதி3னிய மேலுள்ள கோ3ஷ்பா
தோ3த்3கக3ளெல்ல மலதீர்த்த2வு
பாத3பாத்3ரி த4ராதளவெ ஸுக்ஷேத்ர ஜீவக3ண
ஸ்ரீத3ன ப்ரதிமெக3ளு அவரு
ம்போ3த3னவெ நைவேத்3ய நித்யதி3
ஹாதி3னடெ3வுதெ3 நர்தன க3ளெந்த3ரிதவனெ யோகி3 ||(10-3)

சாதாரணமான மாட்டுக் குளம்பில் தேங்கும் நீர் மிகவும் குறைவாகவே இருக்குமல்லவா? அவ்வளவு சிறிய நீரிலிருந்து, குளம் குட்டை ஏரி வரையிலான நீர்நிலைகள் அனைத்தும் தீர்த்தங்கள் என்றும், மரங்கள், மலைகள், பூமி முதலான அனைத்தும் உத்தம க்ஷேத்திரங்கள் என்றும், ஜீவகணங்கள் அனைத்தும் பரமாத்மனின் பிரதிமைகள் என்றும், அவர்கள் உண்ணும் அன்னாதிகளே நைவேத்தியம் என்றும், தினமும் வழியில் நடப்பதே நடனம் என்றும் யார் அறிகிறாரோ, அவர் சாமான்யமானவர் அல்ல. அவரையே மஹா ஞானிகள் என்று சொல்ல வேண்டும்.

**பா4க3வதரெனிபிவர மாதுக3**
**ளாக3ம ஷ்ருதிவாக்1ய தே3ஹவு**
**யோகி3னுதகா3ஸ்ரயவு பூஜாயோக்3ய சலப்ரதிமெ |**
**பா3கி3தொ3டெ3 இவரடி3கெ3 ஶிரவனு**
**நீகு3வுது3 ப4வரோக3 பா3தெ4யு**

**போ4கி3வர பர்யங்கஶயனன க்ருபெகெ3 காரணவு ||95**

பாகவதரெனிப - பாகவதர் எனப்படும்; இவர மாதுகளு - இவர் பேசும் பேச்சுகள்; ஆகம ஷ்ருதி வாக்ய - ஆகம ஸ்ருதி வாக்கியங்களே ஆகின்றன; யோகினுதகெ - யோகி எனப்படுவதற்கு; ஆஷ்ரயவு - சமமானது; தேஹவு - இவரது தேகம்; பூஜாயோக்ய - பூஜைக்குத் தக்கதான; சலப்ரதிமெ - சலபிரதிமை எனப்படுகிறது; இவரடிகெ - இவரின் பாதங்களில்; ஷிரவனு - தலையை; பாகிதொடெ - குனிந்து வணங்கினால்; பவரோக பாதெயு - மறுபிறப்பு என்னும் தொல்லை; நீகுவுது - நீங்குகிறது; போகிவர - சேஷதேவரே; பர்யங்கஷயனன - படுக்கையாகக் கொண்டவனின் (ஸ்ரீஹரியின்); க்ருபெகெ - கருணைக்கு; காரணவு - இது காரணம் ஆகும்.

இத்தகையவர்களை நாம் சந்தித்தால், வணங்கினால் என்ன பலன் கிடைக்கிறது என்பதை ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர் இந்த பத்யத்தில் விளக்குகிறார்.

பாகவதர் எனப்படும் இத்தகையவர் பேசும் பேச்சுகள், ஆகம ஸ்ருதி வாக்கியங்களே ஆகின்றன. இவர்களை யோகி எனலாம். இவர்களது தேகம் பூஜைக்குத் தக்கதான சலப்ரதிமெ எனப்படுகிரது. இவர்களின் பாதங்களில் தலையை குனிந்து வணங்கினால், மறுபிறப்பு என்னும் தொல்லை நீங்குகிறது. சேஷதேவரே படுக்கையாகக் கொண்டவனின் (ஸ்ரீஹரியின்) கருணைக்கு இதுவே காரணம் ஆகும்.

இதை ஸ்ரீஜகன்னாததாஸர் ஹரிகதாம்ருதஸாரத்தில் இவ்வாறு விளக்குகிறார்.

ஏனு மாடு3வ புண்ய பாபக3
ளானெ மாடு3வெனெம்பு3வ னத4ம
ஹீனகர்மகெ பாத்ர நா புண்யக்கெ ஹரியெம்ப3
மானவனு மத்4யமனு த்3வந்த்3வகெ
ஸ்ரீனிவாஸனெ கர்த்ருவெந்து3 ஸ
தா3னுராக3தி3 நெனெது3 ஸுகி2ஸுவவனெ நரோத்தமனு ||(13-8)

தான் செய்த பாவ புண்ணியங்களை, ஸ்வதந்திரமாக தானே செய்தேன் என்று நினைப்பவன் மனிதர்களில் அதமன் (கீழானவன்). பாவம்

செய்பவன் நான், புண்ணியத்தை செய்விப்பவன் பரமாத்மன் என்று நினைப்பவன் மத்யமன். ஏனெனில், ஜீவர்களுக்கு ஸ்வதந்த்ர கர்த்ருத்வம் இல்லை என்றானபிறகு, பாவம் மட்டும் எப்படி அவனால் செய்ய முடியும்? ஆகையால், பாவமோ புண்ணியமோ, அனைத்திற்கும் காரணம் பரமாத்மனே என்று அந்த பலன்களை பரமாத்மனிடம் ஒப்பித்து, அவனையே நினைத்தவாறு சுகப்பட்டுக் கொண்டிருப்பவனே மனுஷ்யோத்தமன் ஆவான்.

ஈ உபாஸனெகை3வ ரிளெயொளு
தே3வதெக3ளல்லத3லெ நரர
ல்லாவ ப3கெ3யிந்தா3த3ரிவரர்சனவெ ஹரிபூஜெ |
கேவல ப்ரதிமெக3ளெனிபரு ர
மாவினோதி3கெ3 இவரனுக்3ரஹ
வெ வரானுக்3ரஹவெனிஸுவுது முகுதியோக்3யரிகெ3 ||(13-9)

அனைத்தையும் செய்வது பரமாத்மனே என்று உபாசனை செய்பவர்களை, இந்த பூமியில் தேவதைகள் என்று அறிந்து, அனைத்து விதங்களிலும் அவரின் பூஜையை செய்தால், அது சாட்சாத் பரமாத்மனின் பூஜையென்றே ஆகிறது. இவர்களை பகவந்தனின் சல-பிரதிமை என்றே நினைக்க வேண்டும். முக்தி யோக்யர்கள் இவரின் அருளைப் பெற்று, அதையே பரமாத்மனின் அருள் என்று நினைக்க வேண்டும்.

**இளெயொளிவரே த4ன்ய மான்யரு**
**திளியலாக3து3 நரரு இவரெந்3**
**தி3ளெயொளிளிதி3ஹ தி3விஜரே ஸரி மனுஜ தே3ஹத3லி |**
**திளியுதீ1பரி வலிஸிகொள்வுது3**
**க3ளிஸிஹரு தா3ஸத்வ ஸித்3தி4ய**
**கலியுக3தொ3ளுத்3தா4ர கெ3ய்வரு மலின ஸுஜனரனு ||96**

இளெயொளிவரே - இந்த பூமியில் இத்தகையவரே; தன்ய மான்யரு - மிகவும் தன்யர், மரியாதைக்குரியவர்; நரரு இவரெந்து - இவர் சாதாரண மனிதர் என்று; திளியலாகது - அறியக்கூடாது; இளெயொளு - இந்த பூமியில்; இளிதிஹ - இறங்கியிருக்கும்; மனுஜ தேஹதலி - மனித தேகத்தில் உள்ள; திவிஜரே ஸரி - தேவதையே ஆகிறார்; திளியுதீபரி - இவ்வாறு தெரிந்து கொண்டு; வலிஸிகொள்வுது - அவரை

தரிசனம் செய்ய வேண்டும்; தாஸத்ய ஸித்திய - தாஸத்வத்தின் ஸித்தியை; களிஸிஹரு - பெற்றிருக்கிறார்; (இப்படிப்பட்டவர்கள்) கலியுகதொளு - கலியுகத்தில்; மலின ஸுஜனரனு - பாமர மக்களை; உத்தார கெய்வரு - உத்தாரம் செய்கிறார்கள்.

இத்தகையவர்களின் மகிமைகளை மேலும் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

இந்த பூமியில் இத்தகையவர்களே மிகவும் தன்யர். மரியாதைக்குரியவர். இவர் சாதாரண மனிதர் என்று அறியக்கூடாது. இந்த பூமியில் இறங்கியிருக்கும் மனித தேகத்தில் உள்ள தேவதையே ஆகிறார். இவ்வாறு தெரிந்து கொண்டு, இவரை தரிசனம் செய்ய வேண்டும். தாஸத்வத்தின் ஸித்தியை இவர் பெற்றிருக்கிறார். கலியுகத்தில், பாமர மக்களை உத்தாரம் செய்வதற்காக இவர்கள் வந்திருக்கின்றனர் என்பதை அறிய வேண்டும்.

அடுத்து ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்களின் சிறப்பினைக் கூறுவதாக பல அற்புத விஷயங்களை விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

**ஏகமேவாத்³விதீயவெனிஸுத**
**ஏகரூபதி³ ஸகல ஜீவரொ**
**ளே³கவாக³தெ³ பி⁴ன்னனாகி³ருதிர்ப ஹரி எந்து³ |**
**ஏகசித்ததி³ சலிஸத³லெ அவ**
**லோகிஸுத ஸௌக்²யவனு ஸுரிவரு**
**லோகதொ³ளகே³காந்த ப⁴க்தரு ஸோகத³லெ தா¹வு ||97**

ஏகமேவாத்விதீய எனிஸுத - ஸ்ரீஹரி ஒருவனே பிரளய காலத்தில் இருந்தான் என்பதை புரிந்து கொண்டு; ஸகல ஜீவரொளகெ - அனைத்து ஜீவர்களிலும்; ஏகரூபதி - ஒரு ரூபத்தில் (பிம்ப மூர்த்தியாக); ஏகவாகதெ - அவர்களுடன் சேராமல்; பின்னனாகிருதிர்ப - வேறுபட்டு இருக்கிறான்; ஹரி - ஸ்ரீஹரி; எந்து - என்று; ஏகசித்ததி - ஒரு மனதுடன் (திடமாக); சலிஸதலெ - மனம் அலைபாயாமல் (குழப்பம் இல்லாமல்); அவலோகிஸுத - அனுசந்தானம் செய்தவாறு; ஸௌக்யவனு ஸுரிவரு - அனைவரிடமும் அன்பாக இருப்பார்கள்; ஏகாந்த பக்தரு - ஸ்ரீஹரியின் ஏகாந்த பக்தர் எனப்படுபவர்கள்; லோகதொளகெ - இந்த

உலகத்தில்; தாவு - அவர்கள்; ஸோகதலெ - கர்வப்படாமல் இருப்பார்கள்.

ஒன்று என்னும் எண்ணின் சிறப்பினை விளக்கும் விதமாக இந்த பத்யத்தில் தத்வங்களை விளக்கியிருக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர். ஏகாந்த பக்தர் என்றால் யார் என்பதன் விளக்கமும் இந்த பத்யத்தில் இருக்கிறது.

ஸ்ரீஹரி ஒருவனே பிரளய காலத்தில் இருந்தான் என்பதை புரிந்து கொண்டு, அவனே அனைத்து ஜீவர்களிலும் அவர்களின் பிம்பமூர்த்தியாக, அவர்களுடன் சேராமல் வேறுபட்டு இருக்கிறான் என்று ஒரு மனதுடன் திடமாக சிந்தித்தவாறு, அனைவரிடம் அன்பாக இருப்பார்கள். இவர்களே ஸ்ரீஹரியின் ஏகாந்த பக்தர் எனப்படுகிறார்கள். அவர்களிடம் கர்வம் இருக்காது.

ஒப்ப3 நாராயணனு லயத3ல்லிஹனு க3ட3
அப்3ஜஸம்ப4வனாக3 எல்லிஹனோ
அப்3ப3ரத3 ருத்3ர மத்திர்த3 தே3வர்க3ளு
ஒப்3ப3 ரிஷிக3ளு எல்லிஹரோ ||1

ஸ்ரீவாதிராஜர் தனது வைகுண்ட வர்ணனெ கிரந்தத்தில் இவ்வாறு கூறுகிறார். லயத்தில் (பிரளய காலத்தில்) ஸ்ரீமன் நாராயணன் ஒருவன் மட்டுமே இருந்தான். பிரம்மன், ருத்ரர், மற்ற தேவதைகள் என வேறு யாருமே அப்போது இருந்திருக்கவில்லை.

ஏகாந்த பக்தர்களின் லட்சணங்களை ஸ்ரீஜகன்னாததாஸர் ஹரிகதாம்ருதஸாரத்தில் விளக்கியிருக்கிறார். அதே பொருளையே இந்த பத்யத்தில் ஸ்ரீதாஸர் கூறியிருக்கிறார் என்பதை நாம் அறியலாம்.

கன்னடி3ய கைபிடி3து நோள்பன
கண்ணுக3ளு கண்ட3ல்லி எரக3தெ3
தன்ன ப்ரதிபி3ம்ப3வனெ காம்பு3வ த3ர்ப்பணவ பி3ட்டு |
த4ன்யரிளெயொளகெ3ல்ல கடெ3யலி
நின்ன ரூபவ நோடி3 ஸுகி2ஸுத
ஸன்னுதிஸுதானந்த3 வாரிதி4யொளகெ3 முளுகி3ஹரு ||(31-13)

கையில் கண்ணாடியைப் பிடித்து பார்த்தால், நம் கண்கள் கண்ட இடத்தில் பாயாமல், அதில் தெரியும் நம் பிரதிபிம்பத்தை மட்டுமே பார்க்கும். இப்படி சாதாரண மக்களான நாம், கண்ணாடியில் தெரியும் நம் பிரதிபிம்பத்தை பார்த்து மகிழ்கிறோம். ஆனால், உன் ஏகாந்த பக்தர்கள், கண்ணாடி இல்லாமலேயே, அனைத்து இடங்களிலும் வியாப்தனான, பிம்ப ரூபியான உன் ரூபத்தை, எங்கு வேண்டுமோ அங்கு பார்த்து, மகிழ்ச்சி அடைந்தவாறு, ஸ்தோத்திரம் செய்தவாறு, மகிழ்ச்சிக் கடலில் மூழ்குகின்றனர். ஆஹா, அவர்கள் எத்தகைய தன்யர்கள்!!.

**எரடு$^3$ மார்க்க$^3$தொ$^3$ளரிது விஹிதவ**
**எரடு$^3$ மன மாட$^3$த$^3$லெ த்$^3$ருட$^3$த$^3$லி**
**எரடு$^3$ வித$^3$ ஹரிரூப த$^4$ரெயொளு திளிது$^3$ விஸ்தரதி$^3$ |**
**எரடு$^3$ ஸ்தா$^2$னதி$^3$ நிருத பூஜிஸி**
**எரடு$^3$ வித$^4$ கர்மவனு களெவரு**
**எரட$^3$னெய தெ$^3$ய்வவனு நெனெயதெ$^3$ ஶரணஜன ஸங்க$^4$ ||98**

எரடு மார்க்கதொளு - ப்ரவ்ருத்தி / நிவ்ருத்தியான இரு மார்க்கங்களில்; விஹிதவ அரிது - செய்யத்தக்க செயல்களை அறிந்து; எரடு மன மாடதலெ - சஞ்சல மனம் கொள்ளாமல்; த்ருடதலி - திடமான மனதில்; எரடு வித ஹரிரூப - அண்டாண்ட மற்றும் பிண்டாண்டத்தில் இருக்கும் இரு வித ஹரிரூபங்களை; தரெயொளு திளிது - இந்த உலகில் அறிந்து; விஸ்தரதி - மிகவும் விஸ்தாரமாக; எரடு ஸ்தானதி - அக மற்றும் புறத்தில்; நிருத பூஜிஸி - விதிப்படி பூஜை செய்து; எரடு வித கர்மவனு களெவரு - பாப, புண்ய ஆகிய இரு வித கர்மங்களையும் போக்கிக் கொள்வார்கள்; எரடனெய தெய்வவனு நெனெயதெ - ஸர்வோத்தமனான ஹரியை விட்டு வேறு தெய்வங்களை நினைக்காமல்; ஷரணஜன ஸங்க - சஜ்ஜனர்களின் சங்கத்தையே நாடுவார்கள்.

அத்தகைய ஏகாந்த பக்தர்களின் சிறப்புகளை தொடர்ந்து இந்த மற்றும் பின்வரும் பத்யங்களிலும் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர். இந்த பத்யத்தில் ‘இரண்டு’ என்னும் சிறப்பு எண்ணைப் பற்றி சொல்கிறார்.

ப்ரவ்ருத்தி / நிவ்ருத்தி முதலான இரு மார்க்கங்களில் செய்யத்தக்க செயல்களை அறிந்து, திடமான மனதினால், நமக்குள் மற்றும் வெளியே இருப்பதான இரு வித ஹரிரூபங்களையும் அறிந்து, அவனை விதிப்படி பூஜை செய்து, பாப, புண்ய என்னும் இரு வித கர்மங்களையும் போக்கிக் கொள்வார்கள். ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியை விட்டு வேறு தெய்வங்களை நினைக்காமல், ஸஜ்ஜனர்களின் சங்கத்தையே அத்தகைய ஏகாந்த பக்தர்கள் நாடுவார்கள்.

ஸ்வோசித1 கர்மக3ளாசரிஸுத ப3லு நீசரல்லிகெ3 போ1கி3 யாசிஸதெ3
கே1சரவாஹ சராசர பந்த4க1 மோசக1னஹுதெந்து3 யோசிஸுதிப்புதே3

நம் வர்ணாசிரமத்திற்கேற்ப கர்மங்களை செய்தவாறு, ஸ்ரீஹரியைத் தவிர வேறு எந்த பிற தெய்வங்களிடமும் சென்று வேண்டாமல், நம் சம்சார பந்தனத்தை விலக்கத் தக்கவன் அவன் ஒருவனே என்பதை அறிந்து அவனை வணங்குவதே, நம் இந்த வாழ்க்கையின் சிறந்த அர்த்தமாகும் என்கிறார் ஸ்ரீஜகன்னாத தாஸர்.

**மூரு ரூபதி3 மூரு மாள்பன**
**மூரு மூர்த்திய மூரரிந்த3லி**
**மூரு காலதி3 மூரவஸ்தெ2 யொள் நித்ய த்4யானிஸுத |**
**மூரு ப3கெ3யிந்தே3கமாடு3த**
**மூரு வர்ணாத்மகன ப4ஜிபரு**
**மூரு க3தியனு மூரு வித4ரிகெ3 கடெ3யலீயுவன ||99**

அடுத்து மூன்று என்ற எண்ணினைச் சொல்லி, அதன் மூலம் சில தத்வங்களை விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

மூரு ரூபதி – பிரம்மா, விஷ்ணு, ருத்ர என்று மூன்று ரூபங்களில் இருந்துகொண்டு; மூரு மாள்பன – ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகிய மூன்றினையும் செய்பவனின்; மூரு மூர்த்திய – அக்ரேஷ, ப்ராணேஷ, மூலேஷ என்னும் மூன்று மூர்த்திகளை; மூரரிந்தலி – உடல், மனம், வாக்கு ஆகிய மூன்றினாலும்; மூரு காலதி – ப்ராத:கால, மத்யான்ன, மாலை என்னும் மூன்று காலங்களிலும்; மூரவஸ்தெயொள் – ஜாக்ரத, நித்ரா, ஸ்வப்ன ஆகிய மூன்று நிலைகளிலும்; மூரு பகெயிந்த – விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ

என்று மூன்று விதமாக இருப்பதை; ஏக மாடுத - ஒன்றாக சேர்த்து தியானம் செய்தவாறு; மூரு வர்ணாத்மகன - புருஷ ரூப த்ரயர்களை பஜிப்பவர்களுக்கு - (மஹத்தத்வாதிகளின் படைப்பிற்குக் காரணமான புருஷரூபம் 1, பிரம்மாண்டத்தில் நுழைந்த ரூபம் 2, நாபி கமலத்திலிருந்து பிரம்மதேவரைப் படைத்து, பத்பனாப என்னும் பெயரைப் பெற்ற புருஷ சூக்தத்தில் புகழப்பட்டுள்ள ரூபம் 3, என மூன்று புருஷ ரூபங்களை பாகவதம் விளக்குகிறது); மூரு கதியனு - ஸ்வர்க்க, மோக்ஷ, நரக என்னும் மூன்று கதியினை; மூரு விதரிகெ -ஸாத்விக, ராஜஸ, தாமஸ ஆகிய மூவருக்கும்; கடெயலீயுவன - கடைசியில் அருள்கிறான் ஸ்ரீஹரி.

இவ்வாறு பகவந்தனின் அத்யந்த பக்தர்கள், அனைத்து சமயங்களும், பகவந்தனை சிந்தித்தவாறே இருப்பார்கள் என்பதையும், அத்தகையவர்களுக்கு (கூடவே மூன்று விதர்களுக்கும்), பகவந்தன் தக்க பலன்களைக் கொடுக்கிறான்.

தா$^{1}$ ரசிஸி ஸாத்வரிகெ$^{3}$ ஸுக$^{2}$ ஸம்<br>
ஸார மிஸ்ரரிக$^{3}$த$^{4}$ம ஜனரிக$^{3}$<br>
பார து$^{3}$க்க$^{2}$க$^{3}$ளீவ கு$^{3}$ருபவமான ஸலஹெம்ம ||4

என்று ஸ்ரீஜகன்னாததாஸர், பவமானரை சொல்வது, பகவந்தனின் காரியங்களே என்று சிந்திக்க வேண்டும்.

**நால்கு தே$^{3}$ஹதொ$^{3}$ளிருவ தே$^{3}$வன**<br>
**நால்கு ரூபவ திளிது$^{3}$ பு$^{3}$த$^{4}$ரிம்**<br>
**நால்கு புரவார்த்த$^{2}$க$^{3}$ள ப$^{3}$யஸதெ$^{3}$ நால்குமொக$^{3}$ பிதன**<br>
**நால்கு வேத$^{3}$க$^{3}$ளரியவென்னுத**<br>
**நால்கு காலதி$^{3}$ ப$^{4}$க்தி மாத்ரவ**<br>
**நால்கு கு$^{3}$ண தொ$^{3}$ளுபாஸ்ய தே$^{3}$வன ப$^{3}$யஸி பே$^{3}$டு$^{3}$வரு ||100**

நால்கு தேஹதொளிருவ -ஸ்தூல, அனிருத்த, ஸூக்ஷ்ம, லிங்க; தேவன - தேவனின்; நால்கு ரூபவ - அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாஸுதேவ என்னும் நான்கு ரூபங்களைப் பற்றி; புதரிம் திளிது - அறிஞர்களிடமிருந்து அறிந்து; நால்கு புரவார்த்தகள் - தர்ம, அர்த்த, காம, மோக்ஷ ஆகியவற்றை; பயஸதெ - விரும்பாமல்; நால்குமொக பிதன - பிரம்மனின்

தந்தையான ஶ்ரீஹரியை; நால்கு வேதகளு – ரிக், யஜுர், ஸாம, அதர்வ ஆகிய நான்கு வேதங்களும்; அரிய வென்னுத – முழுமையாக அறியாது என்றவாறு; நால்கு காலதி – ஜீவனின் நான்கு காலங்களான பால்ய, யௌவன, கௌமார, வ்ருத்தாப்ய காலங்களில்; பக்தி மாத்ரவ – பக்தியை மட்டும் செலுத்தி; நால்கு குணதொளு – படுத்திருக்கும்போதும், அமர்ந்திருக்கும்போதும், நின்றிருக்கும்போதும், ஓடியாடும்போதும் என நான்கு குணங்களிலும் (நிலைகளிலும்); உபாஸ்ய தேவன – தங்களின் ஶ்ரீஹரியை; பயஸி பேடுவரு – வணங்கி வேண்டிக் கொள்கிறார்கள்.

பகவந்தனை பக்தர்கள் வணங்கும் விதத்தினை இந்த பத்யத்தில் நான்கு என்னும் எண்ணினைக் கொண்டு விளக்கியிருக்கிறார் ஶ்ரீதாஸர்.

**பஞ்ச ரூபன பஞ்ச கோஶதி$^{3}$**
**பஞ்ச ஸிரி ஸஹிதத$^{3}$லி சிந்திஸி**
**பஞ்ச பஞ்சேந்த்$^{3}$ரியத$^{3}$ தே$^{3}$ஹதொ$^{3}$ள் பஞ்ச அக்$^{3}$னி யொளு |**
**பஞ்சவித$^{3}$ மானஸிக யக்$^{3}$ஞதி$^{3}$**
**பஞ்ச ப்ராணாந்தர்க$^{3}$ர்ப்பிஸி**
**பஞ்சவித$^{3}$ முக்தியனு படெ$^{3}$வரு பஞ்ச ஸாத்விகரு ||101**

பஞ்ச ரூபன - அனிருத்த, பிரத்யும்ன, ஸங்கர்ஷண, வாஸுதேவ, நாராயண என்னும் ஐந்து ரூபங்களைக் கொண்டவனை; பஞ்ச கோஷதி - அன்னமய, பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்னும் ஐந்து கோஷங்களில்; பஞ்ச ஸிரி ஸஹிததலி - ஷாந்தி, க்ருதி, ஜயா, மாயா, லட்சுமி ஆகிய ஐந்து லட்சுமியின் ரூபங்களுடன்; சிந்திஸி - சிந்தித்து; பஞ்ச பஞ்சேந்த்ரியத - ஐந்து ஞானேந்த்ரியங்கள் + ஐந்து கர்மேந்திரியங்களைக் கொண்ட; தேகதொள் - தேகத்தில்; பஞ்ச அக்னியொளு - ஜனனி, பித, பூமி, வாரித, அம்பர ஆகிய ஐந்து அக்னிகளில்; பஞ்சவித யக்ஞதி - தேவ, பித்ரு, ரிஷி, பூத, அதிதி ஆகிய ஐந்து வித யக்ஞங்களால்; மானஸிக - மனதில் இருக்கக்கூடிய; பஞ்ச ப்ராணாந்தர்கெ - பிராண, அபான, வ்யான, உதான, ஸமான ஆகிய பிராணந்தர்யாமியாக இருப்பவனுக்கு (ஶ்ரீஹரிக்கு); அர்ப்பிஸி - அர்ப்பணம் செய்து; பஞ்ச ஸாத்விகரு - தேவதைகள், ரிஷிகள், பித்ருகள், சக்ரவர்த்திகள், மனுஷ்யோத்தமர்கள் ஆகிய ஐந்து வித

ஸாத்விகர்கள்; பஞ்சவித முக்தியனு - ஸாரூப்ய, ஸாலோக்ய, ஸாமீப்ய, ஸாயுஜ்ய, ஸாரிஷ்டி ஆகிய முக்திகளை (தங்களின் யோக்யதைக்கேற்ப); படெவரு - பெறுகிறார்கள்.

பகவந்தனிடம் பக்தர்கள் பக்தி செய்து, அதற்கேற்ப பலனாக பஞ்சவித முக்தியைப் பெறுவதை இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**ஆரு ஸ்தா$^{2}$னவ திளிது$^{3}$ தனுவினொ**
**ளாரு ப$^{3}$கெ$^{3}$ கமலக$^{3}$ள மத்$^{4}$யதி$^{3}$**
**ஆரு நாமதி$^{3}$ பொளெவ ஹரி வ்யாபாரவனு க்$^{3}$ரஹிஸி |**
**ஆரரொஷவாக$^{3}$த$^{3}$லெ ஜயிஸுத**
**ஆரு கர்மதி$^{3}$ நிருதனாகி$^{3}$ரு**
**தா$^{1}$ரு ப்ராக்ருத ருசிய ப$^{3}$யஸுவரு வீர வைஷ்ணவரு ||102**

தனுவினொளு - இந்த தேகத்தில்; ஆரு ஸ்தானவ - மூலத்தில், நாபியில், ஹ்ருதயத்தில், இந்த்ரயோனியில், புருவ நடுவில், தலையில் - என ஆறு ஸ்தாங்களை அறிந்து; ஆறு பகெ கமலகள மத்யதி - 1). 4 தளங்களைக் கொண்ட முக்கோண தாமரை, 2). 6 தளங்களைக் கொண்ட அறுகோண தாமரை, 3). 8 தளங்களைக் கொண்ட 12 கோண தாமரை, 4). 2 தளங்களைக் கொண்ட வட்ட தாமரை; 5). 4 தளங்களைக் கொண்ட முக்கோண தாமரை, 6). 12 தளங்களைக் கொண்ட வட்ட தாமரை என உள்ள ஆறு தாமரைகளின் நடுவில்; ஆரு நாமதி பொளெவ - அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண (ப்ராதேஷ), வாஸுதேவ, நாராயண, வாஸுதேவ என்னும் ஆறு பெயர்களால் நிலைத்திருக்கும்; ஹரி வ்யாபாரவனு - ஸ்ரீஹரியின் செயல்களை; க்ரஹிஸி - புரிந்து கொண்டு; ஆரரொஷவாகதலெ - காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்ய என்னும் அரிஷட் வர்க்கங்களுக்கு கட்டுப்படாமல்; ஜயிஸுத - வென்றவாறு; ஆரு கர்மதி - யஜன, யாஜன, அத்யயன, அத்யாபன, தான, ப்ரதிக்ரஹ என்னும் ஆறு கர்மங்களில்; நிருதனாகிருத - ஈடுபட்டவாறு; ஆரு ப்ராக்ருத ருசிய - அறுசுவைகளையும் (அனைத்தையும் சமமாக பாவிப்பார்கள் என்பது கருத்து); வீர வைஷ்ணவரு - உண்மையான வைஷ்ணவர்கள்.

உண்மையான வைஷ்ணவர்களின் செயல்களை இந்த பத்யத்தில் ஆறு என்னும் எண்ணினைக் கொண்டு அற்புதமாக விளக்கியிருக்கிறார் ஶ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

**ஏளு ஹோாதி3கெய பீ3ளு தே3ஹவ**
**ஏளு வாரதி3 போஷிஸதெ3 ம**
**த்தேளு குது3ரெயன்னேரி ப3ருவன உத3யகாலக்கெ |**
**ஏளுத1லெ எஸகு3வரு கர்மவ**
**ஏளு நாலிகெ3 யவனிகு3ணிஸலு**
**ஏலிகெ3ய ப1ருமஸுக2தொ3ளீவனு ஶ்ரீ லகுமீலோல ||103**

ஏளு ஹோாதிகெய - த்வக், சர்ம, மாம்ஸ, ரக்த, மேதஸ், மஜ்ஜை, அஸ்தி என்னும் ஏழு உறைகளைக் கொண்ட; பீளு தேஹவ - விழுந்துவிடும் இந்த தேகத்தினை; ஏளு வாரதி - வாரத்தின் ஏழு நாட்களில் (எப்போதும்) போஷித்துக் கொள்ளாமல் (சோம்பேறியாக இருக்காமல்); மத்தெ - மேலும்; ஏளு குதுரெயன்னேரி - காயத்ரி, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதி, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதி - ஆகிய ஏழு குதிரைகளில் ஏறி வருபவனை (சூரியனை); ஏளுதலெ - வணங்கி (அர்க்யம் கொடுத்து); கர்மவ எஸகுவரு - கர்மத்தினை செய்பவர்கள்; ஏளு நாலிகெ - காலி, கராலி, மனோஜவா, ஸுலோஹிதா, ஸுதூம்ரவர்ண, ஸ்பலிங்கினி, விஷ்வருசி; யவனிகுணிஸலு - அக்னிக்கு உணவு அளிப்பவர்கள் (அக்னி கார்யம், ஹோமம், யக்ஞம் ஆகியவை செய்பவர்களுக்கு) ஏலிகெய - முன்னேற்றத்தின் பாதையைக் காட்டி; பருமஸுகதொளு - முக்தியில்; ஈவனு - வைப்பான்; ஶ்ரீலகுமிலோல - ஶ்ரீலட்சுமியின் தலைவனான ஶ்ரீஹரி.

தன் பக்தர்களை பகவந்தன் எப்படி அருள்கிறான் என்பதை ஏழு என்னும் எண்ணினைக் கொண்டு அற்புதமாக இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஶ்ரீதாஸர்.

**அஷ்2டவித3 ஸம்பத் ப்ரதா4தன**
**அஷ்2டாங்க3க3ள்யோக3 ப3லதி3ம்**
**தஷ்2ட த3ளதி3ந்த3ரளி ஶோபி4ப1 ஹ்ருதயகமலத3லி |**
**அஷ்2ட வெரடு3பசார பூர்வக**
**அஷ்2டபா4வத3 புஷ்பவர்ச்சிஸி**
**அஷ்2டபா4வ பொந்தி3 ஸுகி2பரு ஶ்ரேஷ்ட கோவித3ரு ||104**

அஷ்டவித ஸம்பத் - அன்ன, அர்த்த, விபவ, தாருண்ய, லாவண்ய, அஹங்கார, ஸாஹஸ, ப்ரபுத்வ - ஆகிய அஷ்ட விதமான செல்வங்களை; ப்ரதாதன - கொடுப்பவனை; அஷ்டாங்ககள் யோக பலதிம் - இந்திரிய நிக்ரஹ, நியம, ஆஸன, பிராணாயாம, ப்ரத்யஹார, தாரண, த்யான, ஸமாதி அஷ்ட தளதிந்த - எட்டு தளங்களால்; அரளி - மலர்ந்து; ஷோபிப - அழகாக காட்சி தரும்; ஹ்ருதய கமலதலி - இதய கமலத்தில்; அஷ்ட வெரடு உபசார - 16 உபசாரங்கள்; பூர்வக - செய்து; அஷ்டபாவத புஷ்ப - அகிம்சை, இந்திரிய நிக்ரஹம், அனைவரிடமும் கருணை, சகிப்புத்தன்மை, ஞானம், தவம், தியானம் மற்றும் ஸத்யம்; அர்ச்சிஸி - இவற்றைக் கொண்டு அர்ச்சனை செய்து; அஷ்டபாவ பொந்தி - மேற்கண்ட அஷ்ட பாவங்களைப் பெற்று; ஸ்ரேஷ்ட கோவிதரு - சிறந்த அறிஞர்கள்; ஸுகிபரு - சுகமாக இருப்பார்கள்.

எட்டாம் எண்ணின் சிறப்பினை விளக்கியவாறு, அத்தகைய பக்குவமடைந்த பக்தர்கள், ஸ்ரீஹரியை இவ்வாறாக பூஜித்து, சுகமாக இருப்பார்கள் என்பதை ஸ்ரீரமாகோவிந்த விட்டல தாஸர் இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார்.

**நவனவ ஞானத$^{3}$லி தி$^{3}$னதி$^{3}$ன**
**நவவித$^{3}$த$^{3}$ ப$^{4}$க்தியனு வ்ருத்$^{3}$தி$^{4}$ஸி**
**நவயுத த்$^{3}$வாரக$^{3}$ள தனுவனு ரத$^{2}$வனெந்த$^{3}$ரிது |**
**தி$^{3}$விஜபதி ஸிரிப$^{1}$வன மிக்கா**
**தி$^{3}$விஜத$^{1}$தி$^{1}$ விவரத$^{3}$லி சிந்திஸி**
**அவனியொளு நவமாஸத$^{3}$னுப$^{4}$வ ஜரிது$^{3}$ ப்ரார்த்திபரு ||105**

நவனவ ஞானதலி - புதிது புதிதாக ஞானம் பெற்று; தினதின - தினம்தோறும்; நவவித பக்தியனு - ஸ்ரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாத ஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம் என்னும் பக்தியை; வ்ருத்திஸி - வளர்த்துக் கொண்டு; நவயுத த்வாரகள - நவ த்வாரங்களைக் கொண்ட; தனுவனு - இந்த தேகத்தினை; ரதவனெந்தரிது - ரதம் என்று அனுசந்தானம் செய்து கொண்டு; திவிஜபதி - தேவதைகளின் தலைவனான ஸ்ரீஹரி; ஸிரிபவன - ஸ்ரீமுக்யபிராண தேவர்; மிக்கா திவிஜததி - மற்றும் மற்ற அனைத்து தேவதைகளின் (இருப்பிடம் என்பதை); விவரதலி சிந்திஸி - விவரமாக சிந்தித்து; அவனியொளு - இந்த பூமியில்; நவமாஸதனுபவ

ஜரிது - பிறப்பு என்னும் அனுபவத்தை விலக்குமாறு; பிரார்த்திபரு - பிரார்த்தனை செய்வார்கள்.

ஒன்பது என்னும் எண்ணின் சிறப்பினை விளக்கியவாறு, இந்த பத்யத்தில் ஹரிபக்தர்கள் செய்ய வேண்டிய நவ வித பக்திகளை விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

**ஹத்து கரணக$^3$ளிந்த$^3$ கெ$^3$ய்வ ஸ**
**மஸ்த கர்மவ ஹத்து ரூபனு**
**தத்வரொளு தானிந்து$^1$ ப்ரேரிஸி நித்ய நடெ$^3$ஸுதிரெ |**
**ஸத்ய ஸத்யத$^3$ நுடி$^3$ இதெ$^3$ம்ப$^3$கெ$^3$**
**ஹத்துவவெ மத்த$^1$த$^3$ர ப$^2$லக$^3$ளு**
**ஹத்து மாதுக$^3$ள்யாகெ ஹத்திரலித்$^3$து$^3$ ஹரி காய்வ ||106**

ஹத்து கரணகளிந்த - பஞ்ச கர்மேந்திரியங்கள் + பஞ்ச ஞானேந்திரியங்களால்; கெய்வ - செய்த; ஸமஸ்த கர்மவ - அனைத்து கர்மங்களையும்; ஹத்து ரூபனு - நீத, ஸாதாரண, விசேஷ, ஸஜாதி, நைஜ, அஹித, ஸஹஜ, விஜாதி, கண்ட, அகண்ட; தத்வரொளு தானிந்து - அனைத்து தத்வாபிமானி தேவதைகளில் தான் இருந்து; ப்ரேரிஸி - ப்ரேரணை செய்து; நித்ய நடெஸுதிரெ - எப்போதும் நடத்துகிறான்; ஸத்ய ஸத்யத நுடி - இதுவே உண்மையான பேச்சு; இதெம்பகெ - இது என்பவருக்கு; ஹத்துவவெ - வருமா?; மத்ததர பலகளு - வேறு (கெட்ட) பலன்கள்; ஹத்து மாதுகள்யாகெ - வேறு பேச்சுகள் எதற்கு?; ஹத்திரலித்து - அருகில் இருந்து; ஹரி காய்வ - ஸ்ரீஹரி அவனே காக்கிறான்.

பத்து என்னும் எண்ணின் சிறப்பினை விளக்கியவாறு, 10 கரணங்களால் செய்த கர்மங்களை, 10 ரூபங்கள் கொண்ட பகவந்தன் அருகில் நின்று அவனே காப்பான் என்று விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

இதையே ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதஸாரத்தில் இவ்வாறு ஒரு பத்யத்தில் கூறியுள்ளார்.

தோத$^3$கனு தானாகி$^3$ மனமொத$^3$
லாத$^3$ கரணதொளித்து$^3$ விஷயவ

நைது3வனு நிஜபூர்ண ஸுக2மய க்3ராஹ்ய க்3ராஹகனு |

மனம் முதலான 10 கரணங்களில் இருந்து, அவனே அனைத்தையும் செய்கிறான், செய்விக்கிறான். இப்படி அறிபவர்களுக்கு ஸ்ரீஹரி அவனே காக்கிறான்.

**ஶிஷ்2டஜன ஔ த்3ருஷ்டியிம் ஹ்ருத3**
**யஷ்2டகமலதி3 இஷ்டபி3ம்ப3ன**
**ஸ்பஷ்2ட மூருதி தி3ட்டிஸுத பூஜிபரு கு3ட்டினலி |**
**எஷ்2டு பா3ஹ்யதொ3ளஷ்2டு மனத3லி**
**ஸ்ருஷ்2டிஸுத ஸந்துஷ்2டனாகெ3ம்**
**திஷ்2ட ப்ரார்த்த2னெ ஸல்லிஸி துஷ்2டியபட்டு1 ஸுகி2ஸுவரு ||107**

சிஷ்டஜன - விஷயங்களை அறிந்தவர்கள்; ஔ த்ருஷ்டியிம் - அகப் பார்வையினால்; ஹ்ருதயத - இதயத்தில்; அஷ்டகமலதி - அஷ்ட தள கமலத்தில் இருப்பவனான; இஷ்ட பிம்பன - இஷ்ட பிம்பமூர்த்தியின்; ஸ்பஷ்ட மூருதி - தெளிவான தரிசனத்தை; திட்டிஸுத - பார்த்தவாறு; குட்டினலி - ரகசியமாக; பூஜிபரு - பூஜிப்பார்கள்; எஷ்டு பாஹ்யதொளு - எவ்வளவு (எப்படி) வெளியில் (தெரிகிறதோ); அஷ்டு மனதலி - அவ்வளவே ரூபங்களை மனதில்; ஸ்ருஷ்டிஸுத - உருவாக்கியவாறு; ஸந்துஷ்டனாகி - மகிழ்ந்து; எந்திஷ்ட - என இதையே பிரார்த்தனை; ஸல்லிஸி - செய்து; துஷ்டியபட்டு - மகிழ்ந்து; ஸுகிஸுவரு - சுகமாக இருப்பார்கள்.

வெளியில் தெரியும் க்ஷேத்திர மூர்த்திகளை, சிலா ரூபங்களை தம் மனதில் இருக்கும் பிம்பமூர்த்தியுடன் ஐக்ய சிந்தனை செய்ய வேண்டிய விஷயத்தை இங்கு சொல்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

விஷயங்களை அறிந்தவர்கள், தங்களின் அகப்பார்வையினால், தங்களின் இதயத்தில் அஷ்டதள கமலத்தில் இருப்பவனான, இஷ்ட பிம்பமூர்த்தியின் தெளிவான தரிசனத்தை பார்த்தவாறு, அவனையே ரகசியமாக பூஜிப்பார்கள். எவ்வளவு ரூபங்கள் வெளியில் தெரிகின்றனவோ, அவ்வளவே ரூபங்களை மனதிலும் உருவாக்கியவாறு, மகிழ்ந்து, இதனால் திருப்தியடைந்து, சுகமாக இருப்பார்கள்.

**ஊட மாடு$^{3}$த ப$^{3}$ரிதெ$^{3}$ லௌகிக**
**பூ$^{3}$ட$^{1}$கவ ஹரடத$^{3}$லெ விவித$^{2}$**
**ராட மூர்த்தி த்$^{4}$யான மனதொ$^{3}$ளகா$^{3}$ந்து மோதி$^{3}$புத$^{3}$ |**
**பாடு$^{1}$ பட$^{3}$த$^{3}$லெ கால காலகெ**
**கோ$^{4}$டகாஸ்யனு இத்துத$^{3}$கெ மிகெ$^{3}$**
**ஸாடி$^{1}$ இல்லெந்த$^{3}$ரிது பு$^{4}$ஞ்சிஸெ ப$^{4}$வவ தா$^{3}$டிபனு ||108**

ஊட மாடுத - சாப்பிடும்போது; பரிதெ - வெறும்; லௌகிக - லௌகிகமான; பூடகவ - கடப பேச்சுக்களை; ஹரடதலெ - அரட்டை அடிக்காமல்; விவித - பற்பல; ராட மூர்த்தி த்யான - விராட மூர்த்தி தியானத்தை; மனகொளகாந்து - மனதில் கொண்டு வந்து; மோதிபுத - மகிழ்ச்சி அடைந்தவாறு; கால காலகெ - அனைத்து காலங்களிலும் (எப்போதும்); கோடகாஸ்யனு - ஸ்ரீஹரி; பாடு படதலெ - கஷ்டப்படாமல்; இத்துதகெ - கொடுத்ததற்கு; மிகெ ஸாடி - சரிசமம்; இல்லெந்தரிது - இல்லை என்று அறிந்து; புஞ்சிஸெ - உண்டால்; பவவ தாடிபனு - சம்சாரக் கடலை தாண்டச் செய்வான்.

உணவு உண்ணும்போது, வீணான லௌகிக அரட்டைகளில் ஈடுபடாமல், பகவந்தனின் விராட மூர்த்தி தியானத்தை மனதில் கொண்டு வந்து, மகிழ்ச்சி அடைந்தவாறு எப்போதும் ஸ்ரீஹரி கொடுத்ததற்கு சமமாக வேறு எதுவும் இல்லை என்று அறிந்து உண்டால், ஸ்ரீஹரி நம்மை சம்சாரக் கடலை தாண்டச் செய்வான்.

இதையே ஸஜ்ஜனர்களின் குணங்களாக ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதஸாரத்தில் இவ்வாறு ஒரு பெரிய பட்டியலையே கூறுகிறார். வீண் அரட்டைகளில் ஈடுபடாமல், இத்தகைய பட்டியலில் சிலவற்றையாவது செய்தால், பகவந்தன் நம்மை பவ ஸாகரத்தை கடக்கச் செய்கிறான் என்கிறார் ஸ்ரீதாஸர்.

ஞான ப$^{4}$க்தி விரக்தி வினய புராண
ஷாஸ்திர ஸ்ரவண சிந்தன
தா$^{3}$ன ஷம த$^{3}$ம யக்ஞ ஸத்ய அஹிம்ஸ பூ$^{4}$தத$^{3}$ய |
த்$^{3}$யான ப$^{4}$க$^{3}$வன்னாம கீர்த்தன
மௌன ஜப தப வ்ரத ஸுதீர்த்த$^{2}$
ஸ்னான மந்த்ர ஸ்தோத்திர வந்த$^{3}$ன ஸஜ்ஜனர கு$^{3}$ணவு ||
(ஸர்வ ஸ்வாதந்த்ர்ய ஸந்தி #18)

**எடெ3யொளகெ3 ப3டி3ஸிருவ நானா**
**ஷ2டு3ர ஸான்ன பதா3ர்த்த2தொ3ளகி3**
**த்3த3டகி3த4பிமானிக3ள தத்3க3த ஹரிய ரூபக3ள |**
**பி3ட3தெ3 சிந்திஸி ஸர்வஜீவர**
**ஒட3லிகொ3த3கி3ஸி நிருத ஸலஹுவ**
**ம்ருடஸக2ன ஸம்ஸ்மரிஸி உம்பு3தெ3 நித்ய உபவாஸ ||109**

எடெயொளகெ - இலையில்; படிஸிருவ - பரிமாறியிருக்கும்; நானா - பற்பல விதமான; ஷடுரஸான்ன - அறுசுவை கொண்ட; பதார்த்ததொளு - பதார்த்தங்களில்; இத்தடகித - அடங்கியிருக்கும்; அபிமானிகளின் - தத்வாபிமானிகளின்; தத்கத - அந்தர்யாமியான; ஹரிய ரூபகள - ஸ்ரீஹரியின் ரூபங்களை; பிடதெ சிந்திஸி - தொடர்ந்து சிந்தித்து; ஸர்வஜீவர - அனைத்து ஜீவர்களின்; ஒடலிகொதகிஸி - உடலில் இருந்து கொண்டு; நிருத ஸலஹுவ - எப்போதும் நிறைந்திருந்து காக்கும்; ம்ருடஸகன - விஷ்ணுவை; ஸம்ஸ்மரிஸி - சிந்தித்துக் கொண்டே; உம்புதே - உண்பதே; நித்ய உபவாஸ - (அந்த சாப்பாடும்) உபவாஸத்தைப் போன்றதே ஆகும்.

உணவுப் பதார்த்தங்களில் செய்ய வேண்டிய அனுசந்தானங்களைப் பற்றி ஸ்ரீதாஸர் இந்த பத்யத்தில் விளக்குகிறார்.

இலையில் பரிமாறியிருக்கும் பற்பல விதமான அறுசுவை கொண்ட பதார்த்தங்களில் அடங்கியிருக்கும் தத்வாபிமானிகளின் அந்தர்யாமியான ஸ்ரீஹரியின் ரூபங்களை தொடர்ந்து சிந்தித்து, அனைத்து ஜீவர்களின் உடலில் எப்போதும் நிறைந்திருந்து காக்கும் விஷ்ணுவை சிந்தித்துக் கொண்டே உண்பதானது, உபவாஸத்தைப் போன்றதாகும்.

இதையே ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருதஸார நைவேத்ய பிரகரண ஸந்தியில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

நூதன ஸமீசீன ஸுரஸோ
பேத ஹ்ருத்3ய பதார்த்த2தொ3ளு விதி4
மாதெ தத்தத் ரஸக3ளொளு ரஸரூப தானாகி3 |
ப்ரீதிப3டி3ஸுத நித்யதி3 ஜக3
ந்னாத2விட2லன கூடி3 தா நி

ர்பீ⁴தளாகி³ஹளெந்த³ரிது³ நீ ப⁴ஜிஸி ஸுகி²ஸுதிரு ||25

புதியதாகவும், உத்தமமாகவும், மிகச்சிறந்த சுவைகளால் நிரம்பியும் இருக்கும் பதார்த்தங்களில் ரமாதேவியர் அந்தந்த சுவைகளில் தானே சுவையின் ரூபமாக இருந்து, ஸ்ரீஹரியை திருப்திப்படுத்தியவாறு, பரமாத்மனுடன் பிரியாமல் சேர்ந்திருந்து, பயப்படாமல் இருக்கிறாள் என்று அறிந்து, ஸ்ரீஜகன்னாதவிட்டலனை வணங்கியவாறு மகிழ்ச்சியோடு இரு

**உத்தமத³ நரதே³ஹ ஸாத⁴ன**
**கி¹த்திரலு கொப்³பி³ஸதெ³ காயவ**
**க்லிப்தத³லி போஷி²புது³ ஸாத்விக ஹரி நிவேத³னத³ |**
**ஹத்து மூர்மேலேர³டு துத்தனு**
**தத்திகா³த்ரதி³ மாடி³ பு³ஞ்சிஸு**
**துத்து துத்திகெ³ கர்த ஸ்ரீகோ³விந்த³னனு ஸ்மரிஸி ||110**

உத்தமத நரதேஹ - உத்தமமான இந்த நரதேகம்; ஸாதன கித்திரலு - ஸாதனை செய்வதற்காக வந்திருக்க; காயவ கொப்பிஸதெ - இந்த தேகத்தை வீணாக பயன்படுத்தாமல்; க்லிப்ததலி போஷிபுது - விதி / விதிவிலக்குகளின்படி காக்க வேண்டும்; ஸாத்விக - ஸாத்விகமான; ஹரி நிவேதனத - ஸ்ரீஹரிக்கு நிவேதனம் செய்யப்பட்ட; ஹத்து மூர்மேலேரடு - 32; தத்திகாத்ரதி - முட்டை அளவு உள்ள; துத்தனு - கைப்பிடிகளை; கர்த - கர்த்ருவான; ஸ்ரீகோவிந்தனனு - ஸ்ரீகோவிந்தனை; ஸ்மரிஸி - நினைத்தவாறு; புஞ்சிஸு - உண்பாயாக.

ஸாதன ஷரீரத்தை எப்படி பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று ஸ்ரீதாஸர் இங்கு விளக்குகிறார்.

உத்தமமான இந்த நரதேகம், ஸாதனை செய்வதற்காக வந்திருக்கையில், இந்த தேகத்தை வீணாக பயன்படுத்தாமல், விதி விதிவிலக்குகளின்படி காக்க வேண்டும். ஸாத்விகமான, ஸ்ரீஹரிக்கு நிவேதனம் செய்யப்பட்ட 32 முட்டை அளவு உள்ள கைப்பிடிகளை, கர்த்ருவான ஸ்ரீகோவிந்தனை நினைத்தவாறு உண்ண வேண்டும்.

இதையே ஸ்ரீஜகன்னாததாஸர், தனது கிருதியான ‘பலவிது பாளுதுதக்கெ’ வில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஹ்ருதயதி ரூபவு வதனதி நாமவு உதரதி நைவேத்யவு ஷிரதி
பதஜல நிர்மால்யவனெ தரிஸி கோவிதர ஸதனதலி ஹெக்கதவ
காயுவுதே -- பலவிது பாள்துதக்கெ

எப்போதும் நம் இதயத்தில் பகவந்தன் இருக்கிறான் என்னும் அனுசந்தானம் செய்தவாறு; நம் வாயில் பகவந்தனின் நாமத்தை எப்போதும் ஜெபித்தவாறு; வயிற்றில் நைவேத்தியம் செய்யப்பட்ட உணவுகளை மட்டுமே உண்டு; தலையில் அவனது நிர்மால்யங்களை தரித்து, அறிஞர்களின் வாயிற்கதவுகளில் நின்று அவர்கள் சொல் வதைக் கேட்டுக் கொண்டிருப்பதே, இந்த பிறவி எடுத்ததற்கான பலன்.

**போ4ஜனத3 ஸமயத3லி நெனெவுது3**
**மூஜக3த்பதி பஞ்சரூபவ**
**போ4ஜ்ய போ4ஜக போ4க்த்ரு போ4க்3யனு ஹரியெ எந்த3ரிது |**
**வாஜிவத3னகெ3 ஆத்மயக்ஞத3**
**பூஜெ எந்தி3த3னர்ப்பிஸலு தா**
**நைஜ ஸுக2பத3வித்து ஸலஹுவ ப4க்தவத்ஸலனு ||111**

போஜனத ஸமயதலி - இவ்வாறு உணவு உண்ணும் சமயத்தில்; மூஜகத்பதி - மூவுலகின் தலைவனின்; பஞ்சரூபவ - அனிருத்தாதி ஐந்து ரூபங்களை; போஜ்ய - உணவு பதார்த்தங்கள்; போஜக - பரிமாறுபவர்; போக்த்ரு - உணவு உண்பவன்; போக்யனு - உணவின் ரஸத்தினை அனுபவிப்பவன்; ஹரியே - ஸ்ரீஹரியே; எந்தரிது - என்று தெரிந்து கொண்டு; வாஜிவதனகெ - குதிரை முகத்தினைக் கொண்டவனுக்கு; ஆத்மயக்ஞத - ஆத்ம யக்ஞத்தின்; பூஜெ - பூஜை; எந்து - என்று அனுசந்தானம் செய்து; இதனர்ப்பிஸலு - இதனை அர்ப்பணம் செய்தால்; பக்தவத்ஸலனு - பக்தவத்ஸலனான ஸ்ரீஹரி; தா - தான்; நைஜ ஸுகபதவித்து - நிரந்தர சுகமான முக்தி பதவியைக் கொடுத்து; ஸலஹுவ - காக்கிறான்.

உணவு உண்ணும் சமயத்தில் செய்ய வேண்டியதை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

உணவு உண்ணும் சமயத்தில், மூவுலகின் தலைவனை, அவனது அனிருத்தாதி ஐந்து ரூபங்களையும்; பரிமாறுபவர், உண்பவர், மற்றும் அந்த உணவின் ரஸத்தினை அனுபவிப்பவன், ஸ்ரீஹரியே என்பதை

அறிந்து, அந்த குதிரை முகத்தினைக் கொண்டவனுக்கு, இது ஆத்ம யக்ஞத்தின் பூஜை என்று அனுசந்தானம் செய்தவாறு, இதனை அர்ப்பணம் செய்தால், பக்தவத்ஸலனான ஸ்ரீஹரி, தான் நிரந்தர சுகமான முக்தி பதவியைக் கொடுத்து காக்கிறான்.

ஜது3லக்ஷெம்ப3த்த1 ரொம்ப3
த்தாத3 ஸாவிரனேளுனூர்மே
லைது3 ரூப1வ த4ரிஸி போ3க்த்ருக3 போ4ஜ்ய னெந்தெ3னிஸி |
ஸ்ரீத4ரா து3ர்கா3ரமண பா
தா3தி3 ஷிரபரியந்த வியாபிஸி
காது3கொண்டி3ஹ ஸந்தத ஜகன்னாத2விட்டலனு ||(4-30)

ஸ்ரீ பூ துர்கா ரமணனான, நம் தாஸராயரின் பிம்பரூபியான ஸ்ரீஜகன்னாதவிட்டலன், அன்னமயாதி கண்டரூபங்கள் 585400, அன்னாதி கண்ட ரூபங்கள் 4305 (ஆக மொத்தம் 589705) என உணவை உண்பவரில் அதாவது அவரின் பஞ்சபிராணர்களிலும், அந்த தத்வாபிமானி தேவதைகளிலும், ஜீவரிலும், அனைத்து இந்திரியங்களிலும், வியாப்தனாக இருக்கிறான். இது மட்டுமல்லாமல், போஜ்ய பதார்த்தங்களில் மொத்தம் 589705 ரூபங்களை தரித்து, பிராணிகளின் கால் முதல் தலை வரையிலும் நிலைத்திருந்து, எப்போதும் அவர்களை காத்துக் கொண்டிருக்கிறார். இப்படியாக பரமாத்மனை தியானித்தால், நாம் நிர்லிப்தராக பரமாத்மனை அடையமுடியும் என்று பொருள்.

**நுடி3து3 ப3ரெயுவ ஓது3வெடெ3யொளு**
**வட3னெ தத்வத்3வர்ண வாச்யன**
**பி3ட3தெ3 திளியுத1ஜாதி3 ஐவத்தொந்து3 ரூபக3ள |**
**த்4ருட3தி3 ஈர்த3ஶ சதுர மூர்த்தி2ய**
**தடெ3யத3லெ தத்வரொளு சிந்திஸி**
**கடு3 ஸுபூஜெ இதெ3ந்து3 ஹரிக3ர்ப்பிபரு நிர்மமரு ||112**

நுடிது - பேசும்; பரெயுவ - எழுதும்; ஓதுவ - படிக்கும்; எடெயொளு - எழுத்துக்களின்; வடனெ - எப்போதும்; தத்வத்வர்ண - அந்தந்த எழுத்துக்களின்; வாச்யன - தலைவனை; பிடதெ திளியுத - எப்போதும் அறிந்தவாறு; ஐவத்தொந்து ரூபகள - 51 ரூபங்களை; ஜாதி - எழுத்துக்களை; ஈர்தஷ சதுர மூர்த்திய - 24 மூர்த்திகளை; தடெயதலெ -

தொடர்ந்து இடைவிடாமல்; தத்வரொளு சிந்திஸி - தத்வாபிமானி தேவதைகளில் சிந்தித்து; கடு - சிறந்த; ஸுபூஜெ - பூஜை; இதெந்து - இதுவே என்று; நிர்மமரு - வைராக்கியசாலிகள்; ஹரிகர்ப்பிபரு - ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்வார்கள்.

வர்ணாபிமானி தேவதைகள் அவர்களில் அந்தர்யாமியாக இருக்கும் பகவந்தனை சிந்திக்கும் விதங்கள் பற்றிய விஷயத்தை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

நாம் பேசும், எழுதும், படிக்கும் எழுத்துக்களின்; அந்தந்த எழுத்துக்களின் தலைவனை எப்போதும் அறிந்தவாறு, அந்த 51 ரூபங்களை, 24 மூர்த்திகளை தொடர்ந்து விடாமல், அந்த தத்வாபிமானி தேவதைகளில் சிந்தித்து, இதுவே சிறந்த பூஜை என்று வைராக்கியசாலிகள் ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்வார்கள்.

இந்த அனுசந்தானத்தை, ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருத ஸாரத்தில் இவ்வாறு விளக்கியிருக்கிறார்.

ஸுதபனேகோத்தர ஸுபஞ்சா
ஷத வரண கரணதி[3] சதுரவிம்
ஷதி ஸுதத்வதி[3] தா[4]துக[3]ளொளித்த[3]விர த[3]னிருத்[3]த[4] |
ஜதனமாள்பனு ஜக[3]தி[3]ஜீவ
ப்ரததிக[3]ள ஷண்ணவதி நாமக
சதுரமூர்த்தி க[3]ளர்ச்சிஸுவ ரத[3]ரிந்த[3] ப[3]ல்லவரு ||23

சூரியனில் இருந்துகொண்டு உலகத்தில் நன்றாக வெப்பத்தை உருவாக்குவதால் சுதப என்று பெயரைக் கொண்ட பரமாத்மன் 51 அ-முதலான அனைத்து எழுத்துக்களில், மனோ இந்திரியத்திற்கு, காரணமான இதய கமலத்தின் 12 இதழ்களிலும், 24 தத்வங்களிலும் எலும்பு, தோல் முதலான 7 தாதுகளில் இருந்து அனிருத்த நாமக ஸ்ரீபரமாத்மன் இடைவிடாமல் (தொடர்ந்து) உலகத்தில் ஜீவர்களை காப்பாற்றுவான், ஆகையால் ஷண்ணவதி என்று பெயரைக் கொண்ட 96 ரூபங்களைக் கொண்ட ஸ்ரீபரமாத்மன், அனிருத்த அனிருத்த, அனிருத்த பிரத்யும்ன, அனிருத்த சங்கர்ஷண, அனிருத்த வாசுதேவ என்னும் அனிருத்தனின் நான்கு ரூபங்களை, அறிந்தவர்கள் / ஞானிகள் அர்ச்சிக்கின்றனர்.

**ஈ ஶரீரதி$^3$ பரிவ நாடி$^3$க$^3$**
**ளா ஸுஷும்ன இடா$^3$ ஸுபிங்க$^3$ள**
**ஸாஸிரக$^3$ளெப்பத்தெரடு$^3$ அத$^3$ரொளு ஶ்ரீஶ ஸிரி ஸஹித |**
**ஸூஸுதிரெ ஸ்த்ரீ புருஷ பே$^4$த$^3$தி$^3$**
**யீஸலிந்தா$^3$ நாடி$^3$ நதி$^3$க$^3$ளொ**
**ளீஸி மஜ்ஜனகெ$^3$ய்து$^3$ ப்ரதிதி$^3$ன ஹரிய ஸேவிபரு ||113**

அடுத்து இந்த சரீரத்தில் பாயும் நாடிகளையும், அதில் அனுசந்தானம் செய்ய வேண்டிய விஷயத்தைப் பற்றியும் ஸ்ரீதாஸர் விளக்குகிறார்.

ஈ ஷரீரதி - இந்த சரீரத்தில்; பரிவ - பாயும்; நாடிகளு - நாடிகள்; ஸுஷும்ன இடா ஸுபிங்களா - ஸுஷும்ன, இடா, பிங்களா ஆகியவை; ஸாஸிரகளெப்பத்தெரடு - 72,000; அதரொளு - அவற்றில்; ஸ்ரீஷ ஸிரி ஸஹித - ஸ்ரீலட்சுமியுடன் ஸ்ரீஹரி; ஸூஸுதிரெ - வசித்திருக்க; ஸ்த்ரீ புருஷ பேததி - ஆண் நாடிகள் / பெண் நாடிகள் என்ற பேதத்தில்; யீஸலிந்த - இருக்க; ஆ நாடி நதிகளொளு - அந்த நாடி நதிகளில்; ஈஸி மஜனகெய்து - நீச்சல் / ஸ்னானம் செய்து; ப்ரதிதின - தினமும்; ஹரிய ஸேவிபரு - ஸ்ரீஹரியை வணங்குகிறார்கள்.

இந்த சரீரத்தில் பாயும் நாடிகள், ஸுஷும்னா, இடா, பிங்களா ஆகியவை. அவை மொத்தம் 72,000. அவற்றில், ஸ்ரீஹரி ஸ்ரீலட்சுமிதேவியுடன் வசித்திருக்க, ஆண் நாடிகள் / பெண் நாடிகள் என்ற பேதத்தில் இருக்க; அந்த நாடி நதிகளில் நீச்சல் / ஸ்னானம் செய்து, தினமும் அந்த ஸ்ரீஹரியை அறிஞர்கள் வணங்குகிறார்கள்.

இதையே ஸ்ரீஜகன்னாததாஸர், ஒரு ஹரிகதாம்ருதஸார பத்யத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஸூரிக$^3$ளு சித்தைஸுவுது$^3$ பா$^4$
கீ$^3$ரதியெ மொத$^3$லாத$^3$ தீர்த்த$^2$க$^3$
ளீரதி$^3$க வெப்பத்து ஸாவிர நாடி$^3$யொளகி$^3$ஹவு |
ஈ ரஹஸ்யவனல்ப ஜனரிகெ$^3$
தோரி பேளதெ$^3$ நாடி$^3$நதி$^3$யொளு
தீ$^4$ரரனுதி$^3$ன மஜ்ஜனவ மாடு$^3$தலெ ஸுகி$^2$ஸுவரு ||(12-9)

மேற்சொன்ன 72,000 நாடிகளில் கங்கா, துங்கா முதலான அனைத்து தீர்த்தாபிமானி தேவதைகளும் வசிக்கின்றனர். இந்த விஷயம் மிகவும் ரகசியமானது. பாமரருக்குக் கூறினால் அவர்கள் நகைச்சுவை என்று சிரிப்பார்கள். அத்தகையவர்களுக்கு இதை சொல்லக்கூடாது. இந்த நம்பிக்கை உள்ளவர்கள், எப்போதும் தம் நாடிகளில் அனைத்து நதிகளும் இருக்கின்றன என்று சிந்தித்து, அவற்றில் ஸ்னானம் செய்கிறோம் என்று மனதில் நினைத்தால், அனைத்து தீர்த்தங்களில் ஸ்னானம் செய்த பலன் கிடைக்கும்.

**நித்ய ஶௌச ஸ்னான ஜபதப**
**ஹொாத்து மீரதெ$^{3}$ பா$^{4}$னுக$^{3}$ர்க்$^{4}$யவ**
**நித்து ஆஹாராதி$^{3}$ நித்$^{4}$ரெகெ$^{3}$ தி$^{3}$னவ மிதகொ$^{3}$ளிஸி |**
**அர்த்தி$^{2}$யிந்த$^{3}$லி மிக்க காலவ**
**வ்யர்த்த$^{2}$ லௌகிக வார்த்தெகெ$^{3}$ளஸதெ$^{3}$**
**மத்தெ அவலோகிபுது$^{3}$ தா$^{3}$ஸர பத$^{3}$ ஸுளாதி$^{3}$க$^{3}$ளு ||114**

நித்ய ஷௌச ஸ்னான ஜபதப - நித்ய கர்மானுஷ்டானங்களான ஸ்னான, ஜபதப ஆகியவற்றை செய்து; ஹொாத்து மீரதெ - காலம் தவறாமல்; பானுகர்க்யவனித்து - சூரியனுக்கு அர்க்யத்தைக் கொடுத்து; ஆஹாராதி நித்ரெகெ - சாப்பாடு, தூக்கம் ஆகியவற்றிற்கு; தினவ மிதகொளிஸி - இவ்வளவு நேரம் என்று ஒதுக்கி வைத்துவிட்டு; மிக்க காலவ - மிச்சம் இருக்கும் காலங்களில்; வ்யர்த்த லௌகிக வார்த்தெகெளஸதெ - வீணான லௌகிக அரட்டைகளில் ஈடுபடாமல்; அர்த்தியிந்தலி - மிகவும் பக்தி மரியாதையுடன்; தாஸர - ஹரிதாஸர்களின்; பத ஸுளாதிகளு - பத ஸுளாதிகளை; மத்தெ அவலோகிபுது - திரும்பத் திரும்ப படிக்கவேண்டும்;

நாள் முழுக்க செய்ய அனுசந்தானத்தினை ஸ்ரீதாஸர் இவ்வாறு விளக்குகிறார்.

நித்ய கர்மானுஷ்டானங்களான ஸ்னான, ஜபதப ஆகியவற்றை செய்து, காலம் தவறாமல், சூரியனுக்கு அர்க்யம் கொடுத்து, சாப்பாடு தூக்கம் ஆகியவற்றிற்கு இவ்வளவு நேரம் என்று ஒதுக்கி வைத்து, மிச்சம் இருக்கும் காலங்களில் வீணான லௌகிக அரட்டைகளில் ஈடுபடாமல் மிகவும் பக்தி மரியாதையுடன், ஹரிதாஸர்களின் பத ஸுளாதிகளை திரும்பத் திரும்ப படிக்க வேண்டும்.

ஹரிகதாம்ருதஸாரத்தில் இந்த பத்யம் இவ்வாறாக விளக்கப்பட்டுள்ளது.

ஒரடு பு³த்தி⁴ய பி³ட்டு லௌகிக
ஹரடெக³ளனீடா³டி³ காஞ்சன
பரட லோஷ்டாதி³க3ளு ஸமவெந்த³ரிது³ நித்யத³லி |
புருட க³ர்ப்பா⁴ண்டோ³த³ரனு ஸ
த்புருட நெந்தெ³னிஸெயெல்லரொளகி³
த்துருடு கர்மவ மாள்பனெந்த³டிக³டிகெ³ நெனெயுதிரு ||(13-30)

ஶ்ரீஹரி இங்கேயே இருக்கிறான். அங்கே என்ன இருக்கிறது?, பிரதிமையே ஶ்ரீஹரி, இந்த கடவுளே கடவுள் என்னும்படியான சிறுமையான (தவறான) புத்தியை விட்டு, லௌகிக அரட்டைகளில் காலத்தைக் கழிக்காமல், தங்கம் வேண்டும், வெள்ளி வேண்டும் என்று பேராசைப்படாமல் இவை அனைத்தும் தற்காலிகமானவை என்று அறிந்து, உலோகம், தேங்காய் ஓடு, தங்கம் இவை அனைத்தும் சமமே என்று அறிந்து, பரமாத்மனை வேண்டு. பிரம்மாண்டத்தையே தன் வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கும் பரமாத்மன் சர்வோத்தமன். சர்வபிராணிகளிலும் இருந்து நீசோச்ச பாவத்தினால், அனைத்து கர்மங்களையும் செய்விக்கிறான் என்று நினைத்து எப்போதும் பரமாத்மனை நினைத்துக் கொண்டிரு என்பது கருத்து.

**பூஜிஸுவ ஸௌபா⁴க்³ய லகுமிகெ³**
**வாஜிவக்த்ரன ஸ்தோத்ரகெ³ய்யுவ**
**நைஜ ஸுக² ப்³ரம்மாதி³ ஸுரரிகெ³ மத்தெ ஹரி நமன**
**பூ⁴ ஜனாதி⁴பராதி³ ஸாத்விக**
**தேஜயுதரிகெ³ மீஸாலிகி³ரெ**
**மாஜத³லெ இத³னரிது¹ நெனெவுதெ³ பரம ஸாத⁴னவு ||115**

லகுமிகெ - ஶ்ரீலட்சுமிக்கு; பூஜிஸுவ ஸௌபாக்ய - (ஶ்ரீஹரியை) பூஜிக்கும் ஸௌபாக்கியம் உள்ளது; ஸுக பிரம்மாதி ஸுரரிகெ - ஸுக மகரிஷி, மற்றும் பிரம்மாதி தேவதைகளுக்கு; வாஜிவக்த்ரன - (குதிரை முகம் கொண்டவனான) ஹயவதனனின்; ஸ்தோத்ரகெய்யுவ - ஸ்தோத்திரம் செய்யும்; நைஜ ஸுக - நிரந்தர சுகம் உள்ளது; மத்தெ - பிறகு; பூ ஜனாதிபராதி - பூமியில் வசிப்பவர்களான; ஸாத்விக தேஜயுதரிகெ - ஸாத்விக குணத்தைக் கொண்டவர்களுக்கு; ஹரி நமன

- ஸ்ரீஹரியை வணங்கும்; மீஸாலிகிரெ - வாய்ப்பு கிடைத்திருக்கிறது; மாஜதலெ - தவறாமல்; இதனரிது நெனெவுதெ - இதனை எப்போதும் சிந்தித்திருப்பதே; பரம ஸாதனவு - மிகச்சிறந்த ஸாதனம் ஆகும்.

பகவந்தனை எப்போதும் சிந்தித்திருக்க வேண்டும் என்பதை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீலட்சுமிக்கு மற்றும் பிரம்மாதி ஸுரர்களுக்கு ஸ்ரீஹரியை ஸ்தோத்திரம் செய்யும் நிரந்தர சுகம் உள்ளது. பிறகு இந்த பூமியில் வசிப்பவர்களான ஸாத்விக குணத்தைக் கொண்டவர்களுக்கு, ஸ்ரீஹரியை வணங்கும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது. இதனை தவறாமல் எப்போதும் சிந்தித்திருப்பதே, மிகச் சிறந்த ஸாதனம் ஆகும்.

இந்த அனுசந்தானத்தினை ஸ்ரீஜகன்னாததாஸர், ஹரிகதாம்ருத ஸாரத்தில் பல பத்யங்களில் சொல்லியிருக்கிறார். அவற்றில் ஒன்றினை இப்போது பார்ப்போம்.

மக்களாடிசுவாக மடதியொ
ளக்கரதி நலிவாக ஹய ப
ல்லக்கி கஜமொதலாத வாஹனவேரி மெரெவாக |
பிக்குவாக ஆகளிசுதலி தே
வக்கிதனயன நெனெவுதிஹ நர
சிக்கனெம தூதரிகெ ஆவாவல்லி நோடிதரு ||(13-1)

**தே3வ தே3வோத்தமனு ஸ்ரீஹரி**
**ஜீவரொளக3திஶ்ரேஷ்ட வாயுவு**
**பா4வஜாரியு வைஷ்ணவோத்தமனெந்து3 கரெஸுவனு |**
**ஸேவகரு மிக்காத தி3விஜரு**
**ஈ வித4தி3 வர தாரதம்யவ**
**பா4வதி3ந்தரிதைது3 பே4த3வ நிருத ஸாதி4புது3 ||116**

ஸ்ரீஹரி - ஸ்ரீஹரியானவர்; தேவ தேவோத்தமனு - ஸர்வோத்தமன் ஆகிறான்; வாயுவு - ஸ்ரீவாயுதேவர்; ஜீவரொளகதிஸ்ரேஷ்ட - ஜீவோத்தமர் ஆகிறார்; பாவஜாரி - மன்மதனை எரித்த ருத்ரர்; வைஷ்ணவோத்தமனெந்து - வைஷ்ணவர்களில் சிறந்தவர் என்று;

கரெஸுவனு - அழைக்கப்படுகிறார்; மிக்காத திவிஜரு - மற்ற அனைத்து தேவதைகளும்; ஸேவகரு - (ஸ்ரீஹரியின்) சேவகர்களே; ஈ விததி - இப்படியாக; வர தாரதம்யவ - சிறந்ததான தாரதம்யத்தினை; பாவதிந்தரிது - மிகுந்த பக்தியுடன் அறிந்து; ஐது பேதவ - ஐந்து பேதங்களை; நிருத - எப்போதும்; ஸாதிபுது - அறிய வேண்டும்.

மத்வ சித்தாந்தத்தின் முக்கிய கோட்பாடுகளான தாரதம்யத்தினை இங்கு சுருக்கமாக சொல்கிறார் ஸ்ரீதாஸர்.

ஸ்ரீஹரியானவர், ஸர்வோத்தமன் ஆகிறான். ஸ்ரீவாயுதேவர் ஜீவோத்தமர் ஆகிறார். மன்மதனை எரித்த ருத்ரர், வைஷ்ணவோத்தமன் ஆகிறார். மற்ற அனைத்து தேவதைகளும் ஸ்ரீஹரியின் ஸேவகர்களே. இப்படியாக சிறந்ததான தாரதம்யத்தினை மிகுந்த பக்தியுடன் அறிந்து, பஞ்ச பேதங்களை எப்போதும் அறிய வேண்டும்.

இதையே ஸ்ரீஜகன்னாததாஸர் ஹரிகதாம்ருதஸாரத்தில் ஒரு பத்யத்தில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

தேவ தைத்யர தாரதம்யவ
நீவிததி திளிதெல்லரொளு ல
க்ஷீவரனெ சர்வோத்தமனு எந்தரிது நித்யதலி |
சேவிசுவ பக்தரி கொலிது சுக
வீவ சர்வத்ரதலி சுகமய
ஸ்ரீவிரிஞ்ச்யாதி வினுத ஜகன்னாதவிட்டலனு ||(29-16)

**க4ளிகெ3 பி3ட3த3லெ ஹம்ஸமந்த்ரவ**
**வளகெ3 பா4ரதிபதியு ஜபிஸுத**
**ஸலெ ஸுயோக்3யகெ3 க3திய ஸல்லிப ஜபத3 நியமவனு |**
**திளியுதனுஸந்தா4ன பூர்வக**
**ஸுலப4தி3ந்த3லி ப2லவ க3ளிஸதெ3**
**ச2லதி3 மணிக3ள ப3ரிதெ3 பெ3ரளலி பிடி3து3 ப2லவேனு ||117**

பாரதிபதியு - பாரதிரமணனான முக்யபிராணர்; களிகெ பிடதலெ - ஒரு நொடிகூட விடாமல்; வளகெ - நமக்குள்; ஹம்ஸமந்த்ரவ ஜபிஸுத - ஹம்ஸ மந்திரத்தை ஜெபித்தவாறு; ஸுயோக்யகெ - ஜீவர்களில் தக்க

யோக்யதையைக் கொண்டவர்களுக்கு; ஸலெ - சிறந்ததான; கதிய - கதியை; ஸல்லிப - கொடுக்கிறான். நியமவனு - இப்படியான நியமங்களை; திளியுத - அறிந்தவாறு; அனுஸந்தான பூர்வக - மேற்கண்ட அனுசந்தானத்துடன்; ஸுலபதிந்தலி - மிகவும் சுலபமாக; பலவ களிஸதெ - தக்க பலன்களைப் பெறாமல்; சலதி - வேகமாக; மணிகள - துளஸி மணிகள; பரிதெ - வெறுமனே; பெரளலி பிடிது - விரல்களில் பிடித்திருந்தால்; பலவேனு - அதனால் என்ன பலன்?

நாம் முக்யபிராணரை வணங்க வேண்டியதன் அவசியத்தை (வாயு ஜீவோத்தமத்வ என்னும் சிந்தனையின் அவசியத்தை) மிகச் சுருக்கமாக இந்த பத்யத்தில் விளக்கியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

பாரதிரமணனான முக்யபிராணர், ஒரு நொடிகூட விடாமல் நமக்குள் ஹம்ஸ மந்திரத்தை ஜெபித்தவாறு, ஜீவர்களில் தக்க யோக்யதையைக் கொண்டவர்களுக்கு சிறந்ததான கதியை கொடுக்கிறான். இப்படியான நியமங்களை அறிந்தவாறு, மேற்கண்ட அனுசந்தானத்துடன் மிகவும் சுலபமாக தக்க பலன்களைப் பெறாமல், வேகமாக துளஸி மணிகளை வெறும் விரல்களில் பிடித்திருந்தால் அதனால் என்ன பலன்?.

ஹம்ஸ மந்திரம் ஜெபிக்கும் வாயுதேவரைப் பற்றி ஹரிகதாம்ருதஸாரத்தில் பல பத்யங்கள் உள்ளன. அவற்றில் ஒன்றினை மட்டும் பார்ப்போம்.

தாஸிகொ[3]ம்பை[3]னூரு ஷ்வாசோ
ஸ்வாஸக[3]ள நடெ3ஸுதலி சேதன
ராஷியொளு ஹக[3]லிருளு ஜாக்[3]ருதனாகி[3] நித்யத[3]லி |
ஈ ஸுமனஸோத்தம்ஸ லேஷா
யாஸவில்லதெ[3] போஷிஸுத மூ
லேஷனங்க்[3]ரி ஸரோஜ மூலத[3]லிப்ப காணிஸதெ[3] ||2

ஸ்ரீவாயுதேவர், அனைத்து ஜீவராசிகளின் இதய கமலத்தில் இருக்கும் மூலேஷ நாமக ஸ்ரீபரமாத்மனின் பாத கமலத்தில் இருந்துகொண்டு, தினமும் ஒரு நாழிகைக்கு 360 ஸ்வாசங்களையும், ஒரு மணி நேரத்திற்கு 900 ஸ்வாசங்களையும் (1 மணி = 2.5 நாழிகை; 360*2 + 180 = 900) ஸ்வாச உஸ்வாஸ ரூபமான ஹம்ஸ மந்திர ஜபத்தை செய்து

செய்வித்து, தான் கொஞ்சம்கூட சோர்வு இல்லாமல், இரவும் பகலும், விழிப்புடன் இருந்து, வேறு யாருக்கும் காட்டிக்கொள்ளாமல், ஜீவராசிகளுக்கு அருள்கிறார்.

**முக்தி ப³யஸுவ நரகெ³ ஸ்ரீஹரி**
**உத்தமோத்தமனெம்ப³ ஞானத³**
**ப⁴க்திபூர்வக ஸ்மரணெயொந்தே³ ஸாகு நித்யத³லி |**
**ப்⁴ருத்ய ப்⁴ருத்யர ப்⁴ருத்யனெந்த³ரெ**
**தத்தளவகொ³ளிஸத³லெ ஸலஹுவ**
**பெத்த ஜனனீ ஜனகரந்த³தி³ தா³ஸஜன போஷ² ||118**

முக்தி பயஸுவ - முக்தியை விரும்புவதான; நரகெ - மனிதர்களுக்கு; ஸ்ரீஹரி - ஸ்ரீஹரியானவர்; உத்தமோத்தமனெம்ப - ஸர்வோத்தமன் என்னும்; ஞானத ஸ்மரணெயொந்தெ - ஞானத்தின், ஸ்மரணை மட்டுமே; பக்திபூர்வக - பக்தி பூர்வகமாக; ஸாகு - போதும்; நித்யதலி - எப்போதும்; ப்ருத்ய ப்ருத்யர ப்ருத்யனெந்தரெ - தாஸரின் தாஸரின் தாஸன் நான் என்றால்; தத்தளவ கொளிஸதலெ - எவ்வித தாமதமும் இல்லாமல்; பெத்த - நம்மைப் பெற்றவர்களான; ஜனனி ஜனகரந்ததி - தாய் தந்தையைப் போல; ஸலஹுவ - அருள்வான்; தாஸஜன போஷ - தாஸர்களைக் காப்பவனான ஸ்ரீஹரி.

ஸ்ரீஹரி ஸர்வோத்தமத்வ ஞானத்தின் முக்கியத்துவத்தை இந்த பத்யத்தில் இவ்வாறு விளக்கியிருக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

முக்தியை விரும்புவதான மனிதர்களுக்கு, ஸ்ரீஹரியே ஸர்வோத்தமன் என்னும் ஞானத்தின் ஸ்மரணை மட்டுமே பக்தி பூர்வகமாக போதும். மேலும், ஸ்ரீஹரியின் தாஸரின் தாஸரின் தாஸன் நான் என்று கூறினால் (அனுசந்தானம் செய்தால்); எவ்வித தாமதமும் செய்யாமல், நம்மைப் பெற்றவர்களான தாய் தந்தையரைப் போல, ஸ்ரீஹரியானவர் வந்து நம்மை அருள்வான்.

ஹரி ஸர்வோத்தமத்வத்தைப் பற்றி ஹரிகதாம்ருதஸாரத்தில் பல பத்யங்கள் இருந்தாலும், ஒன்றை மட்டும் இங்கே பார்ப்போம்.

எரடு³ தீ³க்ஷெக³ளிஹவு பா³ஹ்யா

ந்தரவெனிப நாமத3லி பு3த4ரி
ந்த3ரிது தீ3க்ஷிதனாகு3 தீர்க்க4 த்3வேஷ2க3ள பி3ட்டு |
ஹரியே ஸர்வோத்தம க்ஷராக்ஷர
புருஷபூஜிதபாத3 ஜன்மா
த்3யரவிதூ3ர ஸுகா2த்ம சர்வக3னெந்து3 ஸ்மரிஸுதிரு ||(16-18)

ஹரியே சர்வோத்தமன். க்ஷராக்ஷர புருஷர்களான பிரம்மாதிகளால் பூஜிக்கப்படுபவனான பாத கமலங்களைக் கொண்டவன். பிறப்பு இறப்பு முதலான தோஷங்கள் இல்லாதவன், ஆனந்த ஸ்வரூபன். அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவன் என்று அறிந்து எப்போதும் அவனை வணங்கிக் கொண்டிருப்பதே அக தீட்சை.

**மருத ஶாஸ்த்ரத3 மர்மவரியதெ3**
**ப3ரிதெ3 ஶப்3தா4ர்த்த2க3ள வாதி3ஸி**
**பி3ரது3 பா3வலிக3ளிகெ3 ப3டி3தா3டு3வுது3 கைபி3ட்1டு1 |**
**ஹரிய கு3ணகா3னத3லி சித்தவு**
**கரகி3 தன்னொளு தானு ஸுக2வனு**
**ஸுரிவ ஸர்வோத்க்ருஷ்ட ஸ்தி2தியனு பொந்து3 யத்னத3லி ||119**

மருத ஷாஸ்த்ரத - மத்வ மதத்தின்; மர்மவரியதெ - மர்மங்களை (தத்வ ரகசியங்களை) அறியாமல்; பரிதெ - வெறும்; ஷப்தார்த்தகள - சொற்களை, அதன் அர்த்தங்களை; வாதிஸி - வாதித்து; பிரது பாவலிகளிகெ - விருது, பட்டங்களுக்கு; படுதாடுவுது - அடித்துக் கொள்வதை: கைபிட்டு - விட்டுவிட்டு; ஹரிய குணகானதலி - ஸ்ரீஹரியின் குணங்களைப் பாடுவதில்; சித்தவு கரகி - மனதை நிறுத்தி; தன்னொளு தானு - தனக்குள்ளேயே; ஸுகவனு ஸுரிவ - சுகத்தைப் பெறுவதான; ஸ்ர்வோத்க்ருஷ்ட - மிகச் சிறந்ததான; ஸ்திதியனு - நிலையை; யத்னதலி - மிகவும் முயற்சி செய்து; பொந்து - அடைவாயாக.

மத்வ மத ரகசியங்களை தொடர்ந்து மனனம் செய்ய வேண்டியதன் அவசியத்தை இங்கு விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

மத்வ மதத்தின் மர்மங்களை (தத்வ ரகசியங்களை) அறியாமல், வெறும் அதன் சொற்களை, அதன் அர்த்தங்களை, வாதித்து, விருது / பட்டங்களுக்கு அடித்துக் கொள்வதை விட்டுவிட்டு, ஸ்ரீஹரியின்

குணங்களைப் பாடுவதில், மனதை நிறுத்தி, தனக்குள்ளேயே சுகத்தைப் பெறுவதான, மிகச் சிறந்ததான நிலையை மிகவும் முயற்சி செய்து அடைவாயாக.

இதே விஷயத்தை ஸ்ரீஜகன்னாததாஸர், ஸ்வாச சந்தியில் இவ்வாறு கூறியிருக்கிறார் என்பதை பார்க்கிறோம்.

பெ3ளகி3த்3ஹூஜியு நோள்பரிகெ3 த2ள
த2ளிஸுதலி கங்கொ3ளிஸுவந்த3தி3
தொளெது3 தே3ஹவ நாம முத்3ரெக3ளிந்த3லங்கரிஸி |
ஒலிஸி நித்ய குதர்க்க யுக்திக3
ளலவ போ4த4ர ஷாஸ்த்ர மர்மவ
திளியதி3ஹ நர ப3ரிதெ3 இத3ரொளு ஷங்கிஸித3ரேனு ||(15-22)

நன்றாக கழுவிய சிறிய கழுத்துள்ள பாத்திரம் (சொம்பு) அதை பார்ப்பவர்களுக்கு பளபள என்று ஒளிர்வதைப் போல சரீரத்தை சுத்தம் செய்து 12 நாமங்கள், முத்ரைகளால் அதனை அலங்கரித்து ஸ்ருதி ஸ்ம்ருதிகளை பின்பற்றாமல் வெறும் தந்திரங்களால் ஊகிக்கும் கு-தர்க்கத்தை படித்து ஸ்ரீ பூர்ணப்ரக்ஞரின் (ஸ்ரீமன் மத்வாசார்யரின்) சர்வமூல கிரந்தங்களின் உள் அர்த்தத்தை அறியாத மனிதன் பிரயோஜனம் இல்லாமல் இந்த கிரந்தத்தில் சந்தேகப்பட்டால் என்ன பிரயோஜனம்?

**ஈ ஸுஸம்யஞான ஸாத4ன**
**பா4ஸுவந்த3தி3 தோரி பேளலு**
**ஏஸு காலக1ஸாத்4ய ஸாத்4யவு ஹரி கு3ரு க்ருபெய |**
**லேஶ பொந்தி3த3 மனுஜ மாத்ரகெ3**
**தோ3ஷ ஸம்ஶய ட3ம்ப4 மானித1**
**கே3ஸு பேளிதொ3டே3னு தோரது3 தோ3ஷவித3ரல்லி ||120**

ஈ ஸுஸம்யஞான - இப்படியான யதார்த்த ஞானம்; ஸாதன - ஸாதன மார்க்கமானது; பாஸுவந்ததி - மிகவும் தெளிவாக; தோரி பேளலு - விளக்குவதற்கு; ஏஸு காலகு - எவ்வளவு காலம் ஆனாலும்; அஸாத்ய - முடியாததாகும்; ஹரி குரு க்ருபெய - ஸ்ரீஹரி குருகளின் அருளை; லேஷ - சிறிதாவது; பொந்தித - அடைந்திருக்கும்; மனுஜ மாத்ரகெ - மனிதர்களுக்கு மட்டுமே; ஸாத்யவு - இது சாத்தியம் ஆகும்; தோஷ

ஸம்ஷய - சந்தேகத்துடனான ஞானத்தைக் கொண்ட; டம்ப மானிதகெ - கர்வம் கொண்ட மனிதர்களுக்கு; பேளிதொடேனு தோரது - எவ்வளவு கூறினாலும் தெரியாது; தோஷவிதரல்லி - அவர்களில் தோஷம் இருக்கிறது.

இத்தகைய நிலையை அடைய ஸ்ரீஹரி குருகளின் அருள் கண்டிப்பாக தேவை என்று இங்கு சொல்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

இப்படியான யதார்த்த ஞானத்தை, அதற்கான ஸாதன மார்க்கத்தை மிகவும் தெளிவாக விளக்குவதற்கு எவ்வளவு காலம் ஆனாலும் அது முடியாததாகும். ஸ்ரீஹரி குருகளின் அருள் சிறிதாவது பெற்றிருக்கும் மனிதருக்கு மட்டுமே அது சாத்தியம் ஆகும். சந்தேகத்துடனான ஞானத்தைக் கொண்ட, கர்வம் கொண்ட மனிதர்களுக்கு, இது எவ்வளவு கூறினாலும் தெரியாது. அவர்களில் தோஷம் இருக்கிறது.

**பு3த்3தி4பூர்வக ஞானப4க்திய**
**ஷுத்3த4த3னுப4வதி3ந்த3 காணதெ3**
**வித்3ய பாண்டி3த்யக3ள மெரெஸித3ரேனு அத்4வரதி3 |**
**மத்4வ வல்லப4 தா3ஸரங்க்4ரிகெ3**
**பி3த்3து3 நமிஸதெ3 ஒத்3து3 மத3வனு**
**தித்3தி3 மனதொ3ளகா3த்மஷுத்3தி3ய மார்க்க3 திளியத3லெ ||121**

புத்திபூர்வக - புத்தி பூர்வகமாக; ஞான பக்திய - ஞான பக்தியின்; ஷுத்ததனுபவதிந்த - யதார்த்த அனுபவத்தினால்; காணதெ - பார்க்காமல்; அத்வரதி - வைராக்கியத்துடன்; மத்வ வல்லப தாஸரங்க்ரிகெ - ஹரிதாஸரின் பாதங்களில்; பித்து நமிஸதெ - விழுந்து வணங்காமல்; மதவனு ஒத்து தித்தி - கர்வத்தினை அடக்கி, (மனதினை) திருத்தி; மனதொளகெ - மனதில்; ஆத்மஷுத்திய - ஆத்ம ஷுத்தியின்; மார்க்க திளியதலெ - வழியைக் காணாமல்; வித்ய பாண்டித்யகள மெரெஸிதரேனு - எவ்வளவு கல்விகளைக் கற்றால்தான் என்ன?.

பிம்போபாஸனைக்கு தக்க வழிகளை கண்டுபிடிக்காமல், மக்கள் எதையெல்லாம் செய்கிறார்கள் என்று நாம் செய்யக்கூடாத விஷயங்களை இங்கு பட்டியலிடுகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

புத்தி பூர்வகமாக, ஞான பக்தியுடன், யதார்த்த அனுபவத்தினால் பார்க்காமல், வைராக்கியத்துடன் ஹரிதாஸர்களின் பாதங்களில் விழுந்து வணங்காமல், கர்வத்தினை அடக்கி மனதினை திருத்தி, மனதில் ஆத்ம ஷுத்தியின் வழியைக் காணாமல் - பண்டிதர்கள் எனப்படுபவர்கள் எவ்வளவு கல்விகளைக் கற்றால்தான் என்ன?.

கரதலி ஜபமணி பாயலி மந்த்ரவு
அரிவெ முஸுகு மோரெகெ ஹாகி
பர ஸதியர குண மனதலி ஸ்மரிஸுத
பரம வைராக்யஷாலி எந்தெணிஸி.. (உதர வைராக்யவிது)

என்று இந்த பாடலில் ஸ்ரீபுரந்தரதாஸர் வைராக்யசாலி என்று வேடம் போடுபவர்கள் செய்யும் நாடகங்களை பட்டியல் இட்டிருப்பதையே இந்த பத்யத்திலும் ஸ்ரீதாஸர் கூறியிருக்கிறார். இவற்றை நாம் செய்யக்கூடாது என்பது கருத்து.

**மடி³யு மெய்லிகெ³ எம்ப³ விதி⁴யிம்**
**ஸட³க³ரத³ ஆசரணெ தோர்ப்பனு**
**ஒட³லொளட³கி³ஸி ஹொலெயரந்திருதிர்ப்ப ஷட்³ரிபுவ |**
**ஒடெ³ய கிருஷ்ணன நெனெயத³லெ பி³ரு**
**நுடி³ய மெய்லிகெ³ நுடி³வ நாலிகெ³**
**கடு³கெடி³ப மொத³லனெய மெய்லிகெ³ து³க்க²வித³ர ப²ல ||122**

ஒடெய கிருஷ்ணன நெனெயதலெ - தலைவனான ஸ்ரீகிருஷ்ணனை நினைக்காமல்; மடியு மெய்லிகெ - மடி, விழுப்பு; எம்ப விதியிம் - என்னும் விதிகளின்படி; ஸடகரத - மிக்க மகிழ்ச்சியுடன்; ஆசரணெ - ஆசார விதிகளை; தோர்ப்பனு - செய்பவன்; ஷட்ரிபுவ - அரிஷட்வர்க்கங்களை; ஒடலொளடகிஸி - தனது உடலில் அடக்கி வைத்துக் கொண்டு; ஹொலெயரந்திருதிர்ப்ப - கீழானவனைப் போல இருக்கிறான்; மொதலனெய மெய்லிகெ - (இதுவெ) முதலாம் விழுப்பு ஆகும்; கடுகெடிப - மிக கடுமையான (பிறரை கெடுப்பதான); பிரு நுடிய - கெட்ட வார்த்தைகளை; நுடிவ நாலிகெ - பேசும் நாக்கானது; மெய்லிகெ - விழுப்பு ஆகும்; துக்கவிதர பல - இதன் பலனாக துக்கமே கிடைக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணனை எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பதே மடி என்பதான உயரிய கருத்தினை இங்கு ஸ்ரீதாஸர் கூறுகிறார்.

தலைவனான ஸ்ரீகிருஷ்ணனை நினைக்காமல், மடி, விழுப்பு என்னும் விதிகளின்படி மிக்க மகிழ்ச்சியுடன் ஆசார விதிகளை செய்பவன், அரிஷட்வர்க்கங்களை தனது உடலில் அடக்கி வைத்துக்கொண்டு, கீழானவனைப் போல இருக்கிறான். இதுவே முதலாம் (கடுமையான) விழுப்பு ஆகும். பிறரை கெடுப்பதான மிகக் கடுமையான கெட்ட வார்த்தைகளை பேச்சும் நாக்கானது விழுப்பு ஆகும். இதன் பலன் துக்கமே ஆகும்.

பட்டெய நீரொளகித்தி ஒணகிஸி
உட்டு கொண்டரெ அது மடியில்ல
ஹொட்டெயொளகின காம க்ரோத மத மத்ஸர
பிட்டு நடெதரெ அது மடியு ||
என்று ஸ்ரீபுரந்தரதாஸர் மற்றும் பிறகு ஸ்ரீவிஜயதாஸர்களே முதலான பல ஹரிதாஸர்கள் பாடியுள்ள மடி பற்றிய விஷயங்களையே இந்த பத்யத்தில் ஸ்ரீதாஸர் விளக்கியிருக்கிறார்.

**ஜனன மரண ப்ரவஹ காரண**
**வெனிபனாதி3ய ஸ்வாபி4மானவு**
**க்ஷண பி3ட3தெ3 மனெமாடி3 மாடு3வ மடி3ய கெடி3ஸுதலி |**
**தெணிஸுதிரலதெ3 ஶாஶ்வதத3 ப3ஹு**
**க4னதரத3 மெய்லிகெ3யு எனிபுது3**
**பி3னகு3 மானவனித3னு த்யஜிஸதெ3 மடி3ய மாடே3னு ||123**

ஜனன மரண ப்ரவஹ - பிறப்பு இறப்பு சுழற்சிக்கான; காரணவெனிப - காரணம் எனப்படும்; அனாதிய - அனாதி அனந்தனான ஸ்ரீஹரியின்; ஸ்வாபிமானவு - பக்தியை; க்ஷண பிடதெ - ஒரு நொடியும் விடாமல்; மனெமாடி - செய்தவாறு; மாடுவ மடிய - அதன் மூலமாக செய்யப்படும் மடியை; கெடிஸுதலி - கெடுத்தவாறு; தெணிஸுதிரலு - அதனை நிறுத்தினால் (தடுத்தால்); அதே - அதுவே; ஷாஷ்வதத - நிரந்தரமான; பஹு கனதரத - மிகவும் கடுமையான; மெய்லிகெயு - விழுப்பு; எனிபுது - எனப்படுகிறது; பினகு மானவனிதனு - கீழான மனிதன் இதனை (மேற்கூறிய கெட்ட பழக்கத்தை) ; த்யஜிஸதெ - விடாமல்; மடிய மாடேனு - மடி செய்து என்ன பலன்?

பக்தியின் முக்கியத்துவத்தை இங்கு விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

பிறப்பு இறப்பு சுழற்சிக்கான காரணம் எனப்படும் அனாதி அனந்தனான ஸ்ரீஹரியின் மேலான பக்தியை ஒரு நொடியும் விடாமல் செய்தவாறு, அதற்காக செய்யப்படும் மடியை கெடுத்தால் / நிறுத்தினால், அதுவே நிரந்தரமான / மிகக் கடுமையான விழுப்பு எனப்படுகிறது. இத்தகைய கெட்ட பழக்கத்தை ஒரு மனிதன் விடாமல், தான் மடி செய்தால்தான் என்ன பலன்?.

ஹரிஸ்மரணெ மாடோ நிரந்தர
பரகதிகெ இது நிர்தாரா - நோடோ
என்பது போன்றதான பற்பல கீர்த்தனைகளில், தொடர்ச்சியான பக்தியின் அவசியத்தை / முக்கியத்துவத்தை பல ஹரிதாஸர்கள் பாடியுள்ளனர். அதையே இங்கு சொல்லியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

**இரளு தி$^{3}$வ பர்யந்த ஸ்ரீஹரி**
**ஸ்மரணெ மடி$^{3}$ விஸ்மரணெ மெய்லிகெ$^{3}$**
**அரியத$^{3}$லெ இத$^{3}$ன்னெல்ல காலதி$^{3}$ ப$^{3}$ரிதெ$^{3}$ ப$^{4}$வணெயலி |**
**எரகி$^{3}$ஸுத சஞ்சலத$^{3}$ மனவிரெ**
**ஸரிது$^{3}$ போகு$^{3}$வுதி$^{3}$த$^{3}$ர ஸாத$^{4}$ன**
**மருளெ மத்ஸரிஸத$^{3}$லெ ஸ்தி$^{2}$ரத$^{3}$லி ஹரிய ஸ்மரிஸுதிரு ||124**

இரளு திவ பர்யந்த - இரவும் பகலுமாக (எப்போதும்); ஸ்ரீஹரி ஸ்மரணெ - ஸ்ரீஹரியின் ஸ்மரணையே; மடி - மடி எனப்படுகிறது; விஸ்மரணெ - அவனை சிந்திக்காதிருப்பது; மெய்லிகெ - விழுப்பு ஆகும். இதன்னெல்ல அரியதலெ - இதனை அறியாமல்; காலதி - எல்லா காலமும்; பரிதெ - வெறுமனே; பவணெயலி எரகிஸுத - சம்சாரத்தில் விழுந்து; ஸஞ்சலத மனவிரெ - சஞ்சலமான மனம் இருந்தால்; இதர ஸாதன - அனைத்து ஸாதனங்களும்; ஸரிது போகுவுது - வீணாகப் போகும்; மத்ஸரிஸதலெ - (மற்றவர்களைப் பார்த்து) பொறாமைப்படாமல்; மருளெ - மயங்காமல்; ஸ்திரதலி - திடமாக; ஹரிய ஸ்மரிஸுதிரு - ஸ்ரீஹரியை நினைத்துக் கொண்டிரு;

எது மடி, எது மெய்லிகெ என்பதை இந்த பத்யத்தில் விளக்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

இரவும் பகலுமாக எப்போதும் ஸ்ரீஹரியின் ஸ்மரணையே மடி ஆகும். அவனை சிந்திக்காதிருப்பது விழுப்பு ஆகும். இதனை அறியாமல் அனைத்து காலங்களிலும் வெறுமனே சம்சாரத்தில் விழுந்து, சஞ்சலமான மனதினை கொண்டிருந்தால், நாம் செய்யும் அனைத்து சாதனைகளும் வீணாகப் போகும். மற்றவர்களைப் பார்த்து பொறாமைப்படாமல் இருந்து, எதிலும் மயங்காமல், திடமான மனதுடன் ஸ்ரீஹரியை நினைத்துக் கொண்டிரு.

ஸ்ரீவிஜயதாஸர் தமது மடி ஸுளாதியில் ஒரு மிகப்பெரிய பட்டியலையே கொடுத்திருக்கிறார். அதைப் பார்த்து எது மடி, எது மெய்லிகெ என்பதை அறியலாம். அதையே இந்த பத்யத்திலும் சுருக்கமாக ஸ்ரீதாஸர் சொல்லியிருக்கிறார்.

காமக்ரோததலி திருகலு மடி அல்ல
காமன பளகக்கெ ஸோலலு மடி அல்ல
தாமஸ வ்ருத்தியலி இத்தரெ மடியல்ல
ஹேமத பயகெயலி சரிஸலு மடியல்ல (மடி ஸுளாதி)

**நித்ய ஸ்னானவு மடி3யத3ல்லவெ**
**உத்தமாம்ப3ர மடி3யத3ல்லவெ**
**மத்தெ கோ3பீசெந்த3னத3 லேபனவு மடி3யல்லெ |**
**ஹ்ருத்ஸ்த ஹரிக3வதா3னவெந்த3ரி**
**து3த்தமன நுடி3 நுடி3கெ3 நெனெயுவ**
**ஸத்வபா4வனெ மடி3யு க3ட3பி3டி3 வ்யர்த்த2 மடி3கா3கி3 ||125**

நித்ய ஸ்னானவு மடியதல்லவெ - நித்ய ஸ்னானம் செய்தால், அது மடியல்ல; உத்தமாம்பர மடியதல்லவெ - மிகச் சிறந்ததான ஆடையை உடுத்தினால் அது மடியல்ல; மத்தெ கோபீசெந்தனத - பிறகு, கோபிசந்தனத்தினை; லேபனவு - பூசிக்கொண்டால்; மடியல்ல - அதுவும் மடியல்ல; ஹ்ருத்ஸ்த - இதயத்தில் இருப்பவனான; ஹரிகெ - ஸ்ரீஹரிக்கு; அவதான - அவை அனைத்தும் அலங்காரங்கள்; எந்தரிது - என்று அறிந்து; உத்தமன - ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியை; நுடி நுடிகெ - ஒவ்வொரு வார்த்தையிலும்; நெனெயுவ - நினைக்கும்; ஸத்வபாவனெ - சிந்தனையே; மடியு - மடி ஆகும்; மடிகாகி - மடிக்காக; கடபிடி வ்யர்த்த - கெடுபிடி தேவையற்றது.

முந்தைய பத்யத்தின் தொடர்ச்சியாகவே இந்த பத்யமும் இருக்கிறது.

நித்ய ஸ்னானம் செய்தால், அது மடியல்ல. மிகச் சிறந்ததான ஆடையை உடுத்தினால் அது மடியல்ல. பிறகு கோபிசந்தனத்தினை பூசிக் கொண்டால், அதுவும் மடியல்ல. இதயத்தில் இருப்பவனான ஸ்ரீஹரிக்கு அவை அனைத்தும் அலங்காரங்களே ஆகும் என்று அறிந்து, ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியை ஒவ்வொரு வார்த்தையிலும் நினைக்கும் சிந்தனையே மடி ஆகும். இத்தகைய மடிக்கு எவ்வித கெடுபிடிகளும் தேவையில்லை.

**ஹுட்டு மெய்லிகெ$^{3}$ ஸாவு மெய்லிகெ$^{3}$**
**நட்ட நடு$^{3}$விலி இத$^{3}$ர கொ$^{3}$ட$^{3}$விய**
**பி$^{3}$ட்டவனெ மடி$^{3}$வந்த கிருஷ்ணன ஸ்மரணெக$^{3}$தி$^{4}$காரி |**
**விட்டலன நாமவனு வத$^{3}$னதொ$^{3}$**
**ளிட்டு மரெயதெ$^{3}$ நிஷ்டெயிரலதெ$^{3}$**
**அட்டஹாஸத$^{3}$ மடி$^{3}$யு மெய்லிகெ$^{3}$ மாதெ$^{1}$ மெய்லிகெ$^{3}$யு ||126**

ஹுட்டு மெய்லிகெ - பிறப்பும் விழுப்பு; ஸாவு மெய்லிகெ - இறப்பும் விழுப்பு; நட்ட நடுவிலி - நடுவில் இருக்கும் இந்த வாழ்க்கையில்; இதர - இந்த விழுப்பினைப் பற்றிய; கொடவிய பிட்டவனே - கவலையை விட்டவனே; மடிவந்த - மடிவந்தன் ஆகிறான்; அவனே, கிருஷ்ணன - ஸ்ரீகிருஷ்ணனின்; ஸ்மரணெகதிகாரி - ஸ்மரணைக்கு அதிகாரம் பெற்றவன்; விட்டலன நாமவனு - ஸ்ரீவிட்டலனின் பெயரை; வதனதொளிட்டு - எப்போதும் வதனத்தில் வைத்து; மரெயதெ - மறக்காமல்; நிஷ்டெயிரலு - பக்தி இருந்தால்; அதே - அதுவே; அட்டஹாஸத மடியு - சரியான மடியாகும்; மெய்லிகெ மாதெ மெய்லிகெயு - விழுப்பு என்று சொல்வதே விழுப்பாகும்;

மடி விழுப்புகளின் விளக்கங்கள் மேலும் தொடர்கின்றன.

பிறப்பும் விழுப்பு; இறப்பும் விழுப்பு; நடுவில் இருக்கும் இந்த வாழ்க்கையில் இந்த விழுப்பினைப் பற்றிய கவலையை விட்டவனே, மடிவந்தன் ஆகிறான். அவனே ஸ்ரீகிருஷ்ணனின் ஸ்மரணைக்கு அதிகாரம் பெற்றவன். ஸ்ரீவிட்டலனின் பெயரை எப்போதும் வதனத்தில் வைத்து மறக்காமல் பக்தியைக் கொண்டிருந்தால், அதுவே சரியான மடியாகும்.

**அருஹிதெ$^3$னு ஹரிதா$^3$ஸ பா$^4$வத$^3$**
**பரிய ஹிரியரு தோரித$^3$ந்த$^3$தி$^3$**
**கரெகரெய ப$^4$வனீகி$^3$ பொரெவுத$^3$கிது$^3$வெ ஹெத்$^3$தா$^4$ரி |**
**ப$^3$ரிதெ$^3$ பா$^3$ஹ்யாசார ப$^2$டபட**
**கெரகி$^3$ மருளாக$^3$த$^3$லெ ஸாத$^4$ன**
**வரிது$^1$ கௌ$^3$ப்யதி$^3$ ஹருஷபடு$^3$தலி நெலெயகாணுவுது$^3$ ||127**

ஹிரியரு தோரிதந்ததி - பெரியவர்கள் கூறியதைப் போல; ஹரிதாஸ பாவத பரிய - ஹரிதாஸ ஸாகித்யத்தின் வழியை; அருஹிதெனு - கூறினேன்; கரெகரெய - துன்பமான; பவனீகி - சம்சார சுழற்சி நீங்கி; பொரெவுதகெ - காப்பதற்கு; இதுவே ஹெத்தாரி - இதுவே மிகச்சிறந்த வழி; பரிதெ - (இதை விட்டுவிட்டு) வெறும்; பாஹ்யாசார - புற செயல்களை; படபட கெரகி மருளாகதலெ - திரும்பத்திரும்ப செய்து, அதில் மயங்காமல்; ஸாதனவரிது - தங்களின் ஸாதனைகளை அறிந்து; கௌப்யதி - ரகசியமாக; ஹருஷபடுதலி - மகிழ்ந்து; நெலெய காணுவுது - தன் இலக்கினை அடைய வேண்டும்.

இந்த தீர்க்க கிருதியை முடித்தவாறு, ஶ்ரீரமாகாந்த விட்டலதாஸர் நம் இலக்கினை (முக்தியை) அடையும் வழியினை இங்கு சொல்கிறார்.

பெரியவர்கள் கூறியதைப் போல, ஹரிதாஸ ஸாகித்யத்தின் வழியை கூறினேன். துன்பமான சம்சார சுழற்சி நீங்குவதற்கு இதுவே மிகச்சிறந்த வழியாகும். இதை விட்டுவிட்டு, வெறும் புறச் செயல்களை திரும்பத்திரும்ப செய்து, அதில் மயங்கிவிடாமல், தங்களின் ஸாதனைகளை அறிந்து, ரகசியமாக மகிழ்ந்து தன் இலக்கான முக்தியை அடைய வேண்டும்.

**ஶப்$^3$த$^3$மாத்ர ஞானவில்லதெ$^3$**
**ஶூத்$^3$த$^4$பா$^4$வதி$^3$ நுடி$^3$த$^3$ நுடி$^3$க$^3$ளு**
**மத்$^3$ கு$^3$ருக$^3$ளந்த:கரணபூ$^1$ரித கருணப$^3$ல ப$^2$லவு |**
**உத்$^3$த$^4$விஸிப$^3$ஹ தரணி அருணன**
**உத்$^3$த$^4$ரிஸி குள்ளிரிஸதி$^3$ர்தொ$^3$டெ**
**ஒத்$^3$து$^3$ திமிரவ பெ$^3$ளகுமாட$^3$லு ஶக்த தானஹனெ ||128**

தான் இதுவரை கூறியது அனைத்தும் தம் குருகளின் / ஸ்ரீஹரியின் கருணையே ஆகும் என்பதை இங்கு சொல்லி பக்தியுடன் வணங்குகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

ஷப்தமாத்ர - வெறும் சொற்களை மட்டுமே நான் கூறினேன்; ஞானவில்லதெ - அதை சொல்வதற்கான ஞானமும் எனக்கு இல்லை; ஷுத்தபாவதி - மனதில் சுத்தமான பக்தி பாவனைகளுடன்; நுடித நுடிகளு - நான் இங்கு கூறிய சொற்கள் (பத்யங்கள்); மத் குருகளந்த:கரணபூரித - நம்முடைய குருகளின் அந்தர்யாமியான ஸ்ரீஹரியின்; கருண பல பலவு - கருணையின் பலமே / அதனுடைய பலனே ஆகும்; உத்தரிஸி குள்ளிரிஸதிர்தோடெ - அத்தகைய பாரதி ரமண முக்யபிராணாந்தர்கதனான ஸ்ரீஹரி, நம்முடைய மனதில் அமர்ந்து, நமக்கு அருள்வது (எப்படி இருக்கிறது என்றால்); உத்தவிஸிபஹ - ஒளிர்ந்து வருவதான; தரணி - சூரியன்; அருணன - கிரணங்களானது; திமிரவ - இருட்டினை; ஒத்து - அடக்கி; பௌகுமாடலு - வெளிச்சம் தருவதைப் போல; ஷக்த தானஹனெ - ஸ்ரீஹரியானவன் இருக்கிறான்.

நம் மனதில் ஸ்ரீஹரியானவர் எப்போதும் இருந்து நமக்கு அருள்கிறார் என்பதை ஹரிகதாம்ருதஸாரத்தில் பல பத்யங்களில் ஸ்ரீஜகன்னாததாஸர் விளக்கியிருக்கிறார் என்பதை அறிகிறோம்.

**தா3ஸனெம்பு3வ ப3லுஹூ எனகி3தெ3**
**தா3ஸதா3ஸர சரண தா3ஸ்யத3**
**மீஸலின ஆ பா4க்3ய என்னது3 தா3ஸ பத3தூ4ளி**
**பூ4ஷணவு ஶிரமுகுட எனக3து3**
**ஏஸு புண்யத3ராஶி ஒத3கி3தோ**
**தா3ஸவம்ஶதி3 தந்து3 என்னனு த4ன்யனெனிஸித3ரு ||129**

தாஸனெம்புவ - ஹரிதாஸன் என்னும்; பலுஹூ எனகிதெ - (கர்வம்) சாமர்த்தியம் எனக்கு இருக்கிறது; தாஸதாஸர - ஹரிதாஸர்களின்; சரண தாஸ்யத - சரணத்தை அடைவதற்கு; மீஸலின - தனிப்பட்டதான (special); ஆ பாக்ய - அந்த பாக்கியம்; என்னது - எனக்கு கிடைத்திருக்கிறது; தாஸ பததூளி - தாஸர்களின் பாததூளியானது; பூஷணவு - ஆபரணம்; எனகது ஷிரமுகுட - எனக்கு அது தலைக்கிரீடம் ஆகும்; ஏஸு புண்யதராஷி - எவ்வளவு புண்ணியங்களின் கூட்டம்;

ஒதகிதோ - வந்து சேர்ந்ததோ; என்னனு - என்னை; தாஸவம்ஷதி தந்து - ஹரிதாஸ வம்சத்தில் நான் வந்து; என்னனு - என்னை; தன்யனெனிஸிதரு - தன்யன் என்றனர்.

தன்னுடைய குருகளை வணங்கியவாறு, இந்த ஹரிதாஸ ஸாகித்யத்திற்கு தான் வந்து ஹரிதாஸன் ஆனது மிகப்பெரிய பாக்கியம் என்று தனது மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

ஹரிதாஸன் என்னும் கர்வம் / சாமர்த்தியம் எனக்கு இருக்கிறது. ஹரிதாஸர்களின் சரணங்களின் தாஸ்யத்தை அடைவதற்கு தனிப்பட்டதான அந்த பாக்கியம் எனக்கு கிடைத்திருக்கிறது. அத்தகைய தாஸர்களின் பாததூளியானது, எனக்கு அதுவே தலைக்கிரீடம் ஆகும். இதனால் எவ்வளவு புண்ணியங்களின் கூட்டம் எனக்கு வந்து சேர்ந்ததோ, அதனால் நான் இந்த ஹரிதாஸ வம்ஸத்தில் வந்து தன்யன் ஆனேன்.

ஸ்ரீவிஜயதாஸர், ஸ்ரீவேணுகோபால விட்டலதாஸர், ஸ்ரீவ்யாஸ விட்டலர் ஆகியோரில் வந்த ஹரிதாஸ பரம்பரையில் வந்த ஸ்ரீதந்தெமுத்து மோகன விட்டலதாஸர் (பரமப்ரிய ஸுப்பராய தாஸர்) அவர்களிடமிருந்து 'ரமாகாந்த விட்டலா' என்று அங்கிதமும், ஹரிதாஸ தீக்ஷையையும் பெற்றவர் நம் ஸ்ரீதாஸர். இத்தகைய சிறப்பு வாய்ந்த பரம்பரையில் வந்ததை நினைத்து அது தனக்கான மிகப்பெரிய பாக்கியம் என்று இந்த பத்யத்தில் கூறி மகிழ்கிறார்.

**அரித1வனு நானல்ல கவனவ**
**ப3ரெவ மதி மொத3லில்ல இனிதி1ரெ**
**ப3ரெத3வனு நானெந்து3 பேளுவ மாது ஸல்லுவுதெ3? |**
**நரஹரியு ப்ரேரிஸித3 தெரெதொ3ளு**
**விரசிஸிதெ3னீ பத்3யமாலெய**
**கருணிஸலு கு3ரு பி3ம்ப3 ஸ்ரீ தந்தெ3 முத்து3மோஹனனு ||130**

அரிதவனு நானல்ல - நான் எதையும் அறிந்தவன் அல்ல; கவனவ பரெவ மதி - இந்த பத்யங்களை எழுதும் அறிவு; மொதலில்ல - எனக்கு இல்லை; இனிதிரெ - இப்படியிருக்கையில்; பரெதவனு நானெந்து - இதை எழுதியவன் நான் என்று; பேளுவ மாது - நான் கூறினால்;

ஸல்லுவுதெ - அது சரியாகுமா? நரஹரியு ப்ரேரிஸித தெரெதொளு - ஸ்ரீஹரியின் ஆணைப்படி; விரசிஸிதெனு - இயற்றினேன்; ஈ பத்யமாலெய - இந்த பத்யமாலாவை; குரு பிம்ப - குரு அந்தர்கதனான; ஸ்ரீதந்தெ முத்துமோஹனனு - ஸ்ரீதந்தெ மோகன விட்டலன்; கருணிஸலு - அருளினான்;

இந்த பத்யத்தை தன்னுடைய குர்வந்தர்கத ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

நான் எதையும் அறிந்தவன் அல்ல. இந்த பத்யங்களை எழுதும் அறிவும் எனக்கு இல்லை. இப்படியிருக்கையில், இதை எழுதியவன் நான் என்று நான் கூறினால் அது சரியாகுமா?. ஸ்ரீஹரியின் ஆணைப்படி இயற்றினேன். இந்த பத்யமாலாவை குரு அந்தர்கதனான ஸ்ரீதந்தெ முத்துமோஹனனு அருளினான்.

**தா3ஸத3ர்பண நாமதி3ந்தி3து**
**ஸூஸூவந்த3தி3 முத3தி3 கருணிஸி**
**தா3ஸ கு3ருகு1லதிலகரென்னனு தரலு பிரிதா3கி3 |**
**தே3ஶதொ3ளகி3து3 பா4ஸவாயது**
**தோ3ஷலோபக3ளெணிஸத3லெ ஸம்**
**தோஷதி3ம் ஸ்வீகரிஸி ஹரிஸலி தா3ஸ ப்ரேமிக3ளு ||131**

தாஸ குருகுலதிலகரு - தாஸரான முக்யபிராணர்; ஸூஸூவந்ததி - மிகவும் (மட்டற்ற); முததி - மகிழ்ச்சியுடன்; கருணிஸி - அருளி; என்னனு தரலு - என்னை ப்ரேரணை செய்ய; தாஸதர்பண - ஹரிதாஸ தர்பண; நாமதிந்திது - என்னும் பெயரில் இந்த கிருதி; தேஷதொளகிது - நாட்டில் இந்த கிருதி; பிரிதாகி - மிகவும் பெரியதாக; பாஸவாயது - பரவியது; தோஷலோபகளனு - இந்த கிருதியில் உள்ள குற்றம் குறைகளை; எணிஸதலெ - எண்ணாமல்; தாஸ ப்ரேமிகளு - ஹரிதாஸ ஸாகித்யத்தில் ஈடுபாடு கொண்டவர்கள்; ஸந்தோஷதிம் - மிகவும் மகிழ்ச்சியுடன்; ஸ்வீகரிஸி - இதனை ஏற்றுக் கொண்டு; ஹரிஸலி - பரவச் செய்யட்டும் (ஆதரவு அளிக்கட்டும்).

ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்ததை அடுத்து, முக்யபிராணருக்கு இதனை சமர்ப்பித்து தனது தன்யதையை காட்டுகிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

தாஸரான முக்யபிராணர், மிகவும் மகிழ்ச்சியுடன் அருளி என்னை ப்ரேரணை செய்ய, ஹரிதாஸ தர்பண என்னும் பெயரில் இந்த கிருதி, மிகவும் பெரியதாக இந்த நாட்டில் பரவியது. இந்த கிருதியில் உள்ள குற்றம் குறைகளை எண்ணாமல், ஹரிதாஸ ஸாகித்யத்தில் ஈடுபாடு கொண்டவர்கள், மிகவும் மகிழ்ச்சியுடன் இதனை ஏற்றுக் கொண்டு இதற்கு ஆதரவு அளிக்கட்டும்.

**ஶ்ரீ ஸமீரர மதத$^{3}$ ஸாரவ**
**வாஸுதே$^{3}$வன ஒலுமெ ப$^{4}$யஸுவ**
**தா$^{3}$ஸகூட$^{1}$ஸ்த$^{2}$ரிகெ$^{3}$ பேள்து$^{3}$து$^{3}$ வினய பா$^{4}$வத$^{3}$லி |**
**தோ$^{1}$ஷதோர்புது$^{3}$ ப$^{4}$க்தவ்ருந்த$^{3}$கெ$^{1}$**
**ராஶி வித்$^{3}$யவ கலிது வாத$^{3}$தி$^{3}$**
**க்லேஶபடு$^{3}$தலி காது$^{3}$வரிகி$^{3}$து$^{3}$ பே$^{3}$ஸரவு ஸஹஜ ||132**

வாஸுதேவன - ஸ்ரீவாஸுதேவனின்; ஒலுமெ பயஸுவ - தரிசனத்தை (அருளை) விரும்பும்; ஸ்ரீஸமீரர மதத ஸாரவ - ஸ்ரீவாயுதேவரின் மதத்தின் ஸாரத்தை; தாஸகூடஸ்தரிகெ - ஹரிதாஸ கூடத்தவர்களுக்கு; வினய பாவதலி - மிகவும் பக்தி மரியாதையுடன்; பேள்துது - இதனை சொல்ல வேண்டும்; பக்தவ்ருந்தகெ - அந்த பக்த கூட்டத்திற்கு; தோஷ தோர்புது - மிகுந்த மகிழ்ச்சி உண்டாகிறது; ராஷி வித்யவ கலிது - அதிகமான கல்வியைக் கற்று; வாததி - வாதத்தில்; க்லேஷபடுதலி - மிகவும் கஷ்டப்பட்டு; காதுவரிகிது - போட்டி போடுபவர்களுக்கு; பேஸரவு - வெறுப்பு (உண்டாவது); ஸஹஜ - சகஜமான விஷயமே.

இந்த ஹரிதாஸ தர்பண கிருதியை அனைத்து ஸ்ரீஹரி பக்தர்களுக்கும் எடுத்து சொல்ல வேண்டும். அதனால், அவர்களுக்கு மிக்க மகிழ்ச்சியே உண்டாகும் என்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டலதாஸர்.

ஸ்ரீவாஸுதேவனின் தரிசனத்தை (அருளை) விரும்பும், ஸ்ரீவாயுதேவரின் மதத்தின் ஸாரத்தினை, ஹரிதாஸ கூடத்தவர்களுக்கு மிகவும் பக்தி மரியாதைகளுடன் இதனை சொல்ல வேண்டும். இதனால், அந்த பக்த கூட்டத்திற்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாகிறது. அதிகமான கல்வியைக் கற்று வாதங்களில் ஈடுபட்டு, மிகவும் கஷ்டப்பட்டு போட்டி போடுபவர்களுக்கு இதனால் வெறுப்பு உண்டாவது சகஜமான விஷயமே.

**பாமரனு அத்யல்ப நா ஸூ**
**க்ஷேம கோருத1 ப4க்தஸ்தோ1மகெ**
**கைமுகி3து3 பி3ன்னவிஸி பே3டு3வெனெல்ல காலத3லி |**
**ப்ரேமதி3ந்த3லி ஹிரிய தா3ஸரு**
**நேமிஸித3 ஸத்ஸம்ப்ரதா3யவ**
**பூ4மியலி ஸஜ்ஜனரு பாலிஸி மான்யராகு3வுது3 ||133**

நா - நான்; பாமரனு - எதுவும் அறியாத பாமரன்; அத்யல்ப - மிகச் சிறியவன்; ஸூக்ஷேம தோருத - அனைவரின் நலன்களையும் விரும்பி; பக்தஸ்தோமகெ - பக்தர்களின் குழுவினரிடம்; கைமுகிது பின்னவிஸி - கை குவித்து மரியாதையுடன்; எல்ல காலதலி - அனைத்து காலங்களிலும்; பேடுவெனு - வேண்டுகிறேன்; ஹிரிய தாஸரு - மூத்த (நமக்கு முந்தைய) ஹரிதாஸர்கள் ப்ரேமதிந்தலி - மிகவும் அன்புடன்; நேமிஸித - நமக்குக் கொடுத்த; ஸத்ஸம்ப்ரதாயவ - நல்ல ஸம்பிரதாயத்தினை; ஸஜ்ஜனரு - ஸஜ்ஜனர்கள்; பூமியலி - இந்த பூமியில்; பாலிஸி - பின்பற்றி; மான்யராகுவுது - தன்யர் ஆகவேண்டும்.

நம் முன்னோரான ஹரிதாஸர்கள் நமக்குக் காட்டிக் கொடுத்த வழியில் நாமும் செல்ல வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

நான் எதுவும் அறியாத பாமரன். மிகச் சிறியவன். அனைவரின் நலன்களையும் விரும்பி, பக்தர்களின் குழுவினரிடம் கை குவித்து மரியாதையுடன் அனைத்து காலங்களிலும் வேண்டுகிறேன். நமக்கு முந்தைய ஹரிதாஸர்கள் மிகவும் அன்புடன் நமக்குக் கொடுத்த நல்ல ஸம்பிரதாயத்தினை ஸஜ்ஜனர்கள் இந்த பூமியில் பின்பற்றி தன்யர் ஆகவேண்டும்.

**ஸூலப4வெனிபீ1 தா3ஸ த3ர்பண**
**நலிவ மனதொ3ளக3ரிது படி2ஸலு**
**களெது3 மலினவ ஹறிய தோர்புத3 அந்தரங்க3த3லி |**
**ச2லவ மாட3த3லென்ன பி3ன்னப1**
**ஸலிஸி ஸிரிவரனொலிமெ படெ3யுத**
**இளெயொளகெ3 ஸஜ்ஜனரு மெரெயலி தா3ஸரெந்தெ3னிஸி ||134**

ஸுலபவெனிப - மிகவும் எளிமையானதான; ஈ தாஸ தர்பண - இந்த ஹரிதாஸ தர்பண கிருதி; நலிவ - அலைபாயும்; மனதொளு - மனதைக் கொண்டவர்கள்; அரிது படிஸலு - தெரிந்து படித்தால்; மலினவ களெது - தோஷங்களைப் போக்கி; அந்தரங்கதலி - மனதின் அந்தரங்கத்தில்; ஹரிய தோர்புது - ஸ்ரீஹரியைக் காட்டுகிறது; சலவ மாடதலெ - என் மேல் வெறுப்பு காட்டாமல்; என்ன பின்னப ஸலிஸி - என்னுடைய வேண்டுகோளை ஏற்று; ஸிரிவரனொலிமெ - ஸ்ரீஹரியின் தரிசனத்தை; படெயுத - பெற்று; ஸஜ்ஜனரு - ஸஜ்ஜனர்கள்; தாஸரெந்தெனிஸி - ஹரிதாஸர் என்று சொல்லிக்கொண்டு; இளெயொளகெ - இந்த பூமியில்; மெரெயலி - சஞ்சரிக்கட்டும்;

இந்த ஹரிதாஸ தர்பண கிருதியை படிப்பதன் பலனாக ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர் சொல்வது என்ன என்பது இந்த பத்யத்தில் தெரிகிறது.

மிகவும் எளிமையானதான இந்த ஹரிதாஸ தர்பண கிருதி, அலைபாயும் மனதைக் கொண்டவர்கள் தெரிந்து படித்தால், அவர்களுடைய தோஷங்களைப் போக்கி, மனதின் அந்தரங்கத்தில் ஸ்ரீஹரியை காட்டுகிறது. என் மேல் வெறுப்பு காட்டாமல் என்னுடைய வேண்டுகோளினை ஏற்று, ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெற்று, ஸஜ்ஜனர்கள் ஹரிதாஸர் என்று சொல்லிக் கொண்டு இந்த பூமியில் சஞ்சரிக்கட்டும்.

**தா$^{3}$ஸ த$^{4}$ர்மத$^{3}$ கோ$^{1}$ஶவிது$^{3}$ கம**
**லேஶ கருணதி$^{3}$ ப$^{3}$ரெயிஸித$^{3}$ உப**
**தே$^{3}$ஶ மாதுக$^{3}$ளார்த்த ப$^{4}$க்தரிகி$^{3}$ஷ்ட ஸல்லிஸலி |**
**லேஶப$^{4}$க்தி விரக்தி ஞானவ**
**ஆஶிபரிகெ$^{3}$ ரமேஶ த$^{3}$யத$^{3}$லி**
**தா$^{1}$ஸு தா$^{1}$ஸிகெ$^{3}$ த்ராஸு கொட$^{3}$த$^{3}$லெ போஷிஸுத்திரலி ||135**

தாஸ தர்மத - ஹரிதாஸ தர்மத்தின்; கோஷவிது - அகராதி இது ஆகும்; கமலேஷ - ஸ்ரீஹரி; கருணதி பரெயிஸித - கருணையுடன் அருளி எழுத வைத்தான்; உபதேஷ மாதுகள - இந்த உபதேச பேச்சுக்களின்; அர்த்த - விஷயம்; பக்தரிகெ - பக்தர்களுக்கு; இஷ்ட ஸல்லிஸலி - அவர்கள் விரும்பியதை கொடுக்கட்டும்; பக்தி விரக்தி ஞானவ - ஞான பக்தி விரக்திகளை; லேஷ - சிறிதளவு; ஆஷிபரிகெ - வேண்டுபவர்களுக்கு; ரமேஷ - ஸ்ரீஹரி; தாஸு தாஸிகெ - ஒவ்வொரு

மணித்துளிக்கும் (எப்போதும்); த்ராஸு கொடதலெ - கஷ்டத்தைக் கொடுக்காமல்; தயதலி - கருணையுடன்; போஷிஸுத்திரலு - காத்துக் கொண்டிருக்கட்டும்.

இந்த கிருதியின் பலன்களை மேலும் தொடர்ந்து சொல்கிறார் ஸ்ரீரமாகாந்த விட்டல தாஸர்.

இந்த கிருதியானது, ஹரிதாஸ தர்மத்தின் அகராதி ஆகும். ஸ்ரீஹரி கருணையுடன் அருளி, என்னை இதனை எழுத வைத்தான். இந்த உபதேச பேச்சுக்களின் விஷயம் பக்தர்களுக்கு அவர்கள் விரும்பியதை கொடுக்கட்டும். ஞான பக்தி விரக்திகளை சிறிதளவு வேண்டுபவர்களுக்கு, ஸ்ரீஹரி எப்போதும் நிரந்தரமாக கொடுத்து, கருணையுடன் காத்துக் கொண்டிருக்கட்டும்.

**ஸந்தி$^{3}$ரலு ப$^{3}$ஹுதா$^{3}$ன்ய க$^{3}$த$^{1}$ஶக$^{1}$**
**ஒந்து$^{3}$ ஸாவிரதெ$^{3}$ண்டு$^{1}$ நூரர**
**முந்தெ$^{3}$ அரவத்ததி$^{4}$கவாகி$^{3}$ஹ வருஷவித$^{3}$ரல்லி |**
**குந்த$^{3}$த$^{3}$லெ ஸம்பூர்ணகெ$^{3}$ய்ஸித$^{3}$**
**ப$^{3}$ந்து$^{4}$ரத$^{3}$ பத்$^{3}$யக$^{3}$ள மணிஸர**
**கந்த$^{3}$ரதொ$^{3}$ளர்ப்பிபேனு ஸ்ரீ ரமாகாந்த$^{1}$ விட்ட$^{2}$லகெ$^{3}$ ||136**

பஹுதான்ய - பஹுதான்ய ஆண்டு; ஸந்திரலு - முடிந்திருக்க; கதஷக - ஷக ஆண்டு; ஒந்து ஸாவிரதெண்டு நூரர - 1800; முந்தெ அரவத்ததிகவகிஹ - 60; வருஷதல்லி - இந்த ஆண்டில்; குந்ததலெ - எவ்வித குறை / தோஷங்களும் இன்றி; ஸம்பூர்ணகெய்ஸித - முடித்த; பந்துரத - அழகான; பத்யகள - இந்த பத்யங்களின்; மணிஸர - மாலையை; ஸ்ரீரமாகாந்த விட்டலகெ - ஸ்ரீரமாகாந்த விட்டலனுக்கு; கந்தரதொளு - அவனுடைய கழுத்தில்; அர்ப்பிபேனு - அர்ப்பிக்கிறேன்.

இந்த கிருதியை முடித்த ஆண்டினை இவ்வாறு சொல்கிறார் சக ஆண்டு 1860. அதாவது கிபி 1938. இந்த ஆண்டில் இந்த கிருதியை எழுதி முடித்திருப்பதாக சொல்கிறார் ஸ்ரீதாஸர். பஹுதான்ய என்று சொல்வதும் சரியாக 1938க்கு பொருந்தி வருகிறது என்பதை அறிகிறோம். இதனை தன் பிம்பமூர்த்தியான ஸ்ரீரமாகாந்த விட்டலனுக்கு சமர்ப்பிக்கிறார்.

பஹுதான்ய ஆண்டு முடிந்திருக்க, ஷக ஆண்டு 1860ம் ஆண்டில், எவ்வித குறை / தோஷங்களும் இன்றி, முடித்த இந்த பத்யங்களின் மாலையை ஸ்ரீரமாகாந்த விட்டலனுக்கு, அவனுடைய கழுத்தில் அர்ப்பிக்கிறேன்.

**மங்க3ளம் ஸ்ரீ லகுமிலோலகெ3**
**மங்க3ளம் ஸ்ரீ வாயுபிதனிகெ3**
**மங்க3ளம் தா3ஸோஹமெம்ப3ர நிருத பொரெவனிகெ3 |**
**மங்க3ளம் கு3ருவந்த1ரங்க3கெ3**
**மங்க3ளம் நிஜ தா3ஸப்ரீயகெ3**
**மங்க3ளவ பாடு3வெனு ஸ்ரீ ரமாகாந்த விட்டலகெ3 ||137**

ஸ்ரீலகுமிலோலகெ - ஸ்ரீலட்சுமியின் தலைவனுக்கு; ஸ்ரீவாயுபிதனுக்கு - ஸ்ரீவாயுதேவரின் தந்தைக்கு; தாஸோஹமெம்பர - தாஸோஹம் என்பவர்களை; நிருத பொரெவனிகெ - எப்போதும் காப்பவனுக்கு; குருவந்தரங்ககெ - குருவின் அந்தர்யாமியாக இருப்பவனுக்கு; நிதாஸப்ரீயகெ - தாஸர்களை எப்போதும் விரும்புபவனுக்கு; மங்களம் - மங்களம் உண்டாகட்டும்; ஸ்ரீரமாகாந்த விட்டலகெ - ஸ்ரீரமா காந்த விட்டலனுக்கு; மங்களவ பாடுவெனு - மங்கள கோஷம் செய்கிறேன்.

ஹரிதாஸ தர்பண என்னும் இந்த கிருதியின் கடைசி பத்யத்தினை ஸ்ரீஹரிக்கு, தன்னுடைய பிம்பமூர்த்திக்கு மங்களம் பாடியவாறு முடித்து வைக்கிறார்.

ஸ்ரீலட்சுமியின் தலைவனுக்கு, ஸ்ரீவாயுதேவரின் தந்தைக்கு, தாஸோஹம் என்பவர்களை எப்போதும் காப்பவனுக்கு, குருவின் அந்தர்யாமியாக இருப்பவனுக்கு, தாஸர்களை எப்போதும் விரும்புபவனுக்கு, மங்களம் உண்டாகட்டும். ஸ்ரீரமா காந்த விட்டலனுக்கு மங்கள கோஷம் செய்கிறேன்.

**[பல ஸ்ருதி #1]**
**ஓது3வவரிகெ3 மோத3 தருவுது3**
**பா3தி4ஸுவ யமபா3தெ4 களெவுது3**
**பது3மநாப4ன பாத3 ப4ஜனெகெ3 மனஸு திருகு3வுது3 |**
**பே4த3வெணிஸதெ3 கேளுவவரிகெ3**
**ஸாத4னத3 ஹெத்3தா3ரி ஸிகு3வுது3**

**ஸ்ரீத$^3$னொலிமெகெ$^3$ 'தா$^3$ஸ த$^3$ர்பண' ஸுலப$^4$ ஸாத$^4$னவு ||1**

ஓதுவவரிகெ - (இந்த கிருதியை) படிப்பவர்களுக்கு; மோத தருவுது - மகிழ்ச்சியைக் கொடுக்கிறது; பாதிஸுவ யமபாதெ களெவுது - பாதிப்பதான யம பயத்தைப் போக்குகிறது; பதுமனாபன - ஸ்ரீஹரியின்; பாத பஜனெகெ - பாதங்களை வணங்குவதில்; மனஸு திருகுவுது - மனம் விரும்பிச் செல்கிறது; பேதவெணிஸதெ - வர்ணாசிரம பேதம் இல்லாமல் (யாராக இருந்தாலும்); கேளுவவரிகெ - இதனை கேட்பவர்களுக்கு; ஸாதனத - அவர்களின் ஸாதனையின்; ஹெத்தாரி ஸிகுவுது - வழி புலப்படுகிறது; ஸ்ரீதனொலிமெகெ - ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெறுவதற்கு; தாஸ தர்பண - ஹரிதாஸ தர்பண என்னும் கிருதி; ஸுலப ஸாதனவு - மிகச் சுலபமான ஸாதனம் ஆகும்.

ஹரிதாஸ தர்பண என்னும் கிருதியின் பல-ஸ்ருதியை எழுதியவர் ஸ்ரீதிருமலேஷ ஹரிவிட்டல தாஸர் (திரு.ஜெயஸிம்மா) அவர்கள். இவர் ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாஸரிடம் அங்கிதம் பெற்று, பல ஆண்டுகளாக ஹரிதாஸ ஸாகித்ய சேவை செய்து வருபவர். பற்பல ஹரிதாஸர்களின் வாழ்க்கை வரலாறு, அவர்களின் கிருதிகளின் தொகுப்பு, ஹரிதாஸ ஆராதனைகள் என தொடர்ந்து ஸாதனை செய்து வருபவர். 137 பத்யங்களைக் கொண்ட இந்த ஹரிதாஸ தர்பணத்திற்கு, அதே பாமினி ஷட்பதியில் மூன்று பத்யங்களில் பல ஸ்ருதியை இயற்றியிருக்கிறார் ஸ்ரீதிருமலேஷ ஹரிவிட்டல தாஸர்.

பல ஸ்ருதியின் இந்த முதல் பத்யத்தில், இந்த கிரந்தத்தைப் படிப்பதனால் உண்டாகும் பலன்களைக் கூறுகிறார்.

ஹரிதாஸ தர்பண என்னும் இந்த கிருதி, படிப்பவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. அவர்களுக்கு வரக்கூடியதான யம பயத்தினை போக்குகிறது. ஸ்ரீஹரியின் பாதங்களை வணங்குவதில் அவர்களது மனம் விரும்பிச் செல்கிறது. வர்ணாசிரம பேதங்கள் இல்லாமல், இதனை யார் கேட்டாலும், அவர்களின் ஸாதனையின் வழி புலப்படுகிறது. ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெறுவதற்கு, ஹரிதாஸ தர்பண என்னும் இந்த கிருதி, மிகச் சுலபமான ஸாதனம் ஆகும்.

பிம்பரூப தரிசனம் பெறுவதற்கான வழியையும், அந்த தரிசனத்தையும் பெற்றுத் தருவதாக இந்த கிருதி இருக்கிறது என்பது கருத்து.

**[பல ஸ்ருதி #2]**
**எஷ்2டு ஸுந்த3ர எஷ்டு ஸொக3ஸிது3**
**எஷ்2டு ஸரள மத்தெஷ்டு ஸரஸவு**
**எஷ்2டு தோடித3ரஷ்டு தும்பு3வ ப4க்திரஸ பா4வ**
**நிஷ்2டெயிந்த் ஹரி தா3ஸ த3ர்பண**
**து1ஷ்2ட மனத3லி ஓதி3 கேளலு**
**இஷ்2டமூருதி கிருஷ்ணராயனு த1ட்ட1னொத3கு3வனு ||2**

எஷ்டு ஸுந்தர - எவ்வளவு அழகானது; எஷ்டு ஸொகஸிது - எவ்வளவு மகிழ்ச்சி (மகிழ்ச்சியை தருகிறது); எஷ்டு ஸரள - எவ்வளவு ஸரளமாக இருக்கிறது; மத்தெஷ்டு ஸரஸவு - மேலும் எவ்வளவு இனிமையாக இருக்கிறது; எஷ்டு நோடிதரஷ்டு - எவ்வளவு பார்க்கிறோமோ அவ்வளவு; பக்திரஸ பாவ தும்புவ - மனதில் பக்திரஸ பாவம் நிரம்புகிறது; நிஷ்டெயிந்த - மிகவும் பக்தியுடன்; ஹரிதாஸ தர்பண - ஹரிதாஸ தர்பண என்னும் இந்த கிருதியை; துஷ்ட மனதலி - நல்ல மனநிலையில்; ஓதி கேளலு - படித்தால் / கேட்டால்; இஷ்டமூருதி - நம் இஷ்ட தெய்வமான; கிருஷ்ணராயனு - ஸ்ரீகிருஷ்ணன்; தட்டனொதகுவனு - உடனடியாக வந்து தரிசனம் அளிக்கிறான்.

பல ஸ்ருதியின் இந்த இரண்டாம் பத்யத்தில், இந்த ஹரிதாஸ தர்பணத்தின் வடிவமைப்பு, இதில் என்ன உள்ளது என்பதை விளக்கியிருக்கிறார் ஸ்ரீதிருமலேஷ ஹரிவிட்டல தாஸர்.

இந்த ஹரிதாஸ தர்பணமானது, படிப்பதற்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருகிறது. மிகவும் ஸரளமான, இனிமையாக இருக்கிறது. எவ்வளவு படிக்கிறோமோ அவ்வளவுக்கு, மனதில் பக்திரஸ பாவம் நிரம்புகிறது. இந்த கிருதியை மிகவும் பக்தியுடன், நல்ல மன நிலையில் படித்தால் / கேட்டால், நம் இஷ்ட தெய்வமான ஸ்ரீகிருஷ்ணன், உடனடியாக வந்து அருள்கிறான்.

**[பல ஸ்ருதி #3]**
**து3ரித1 தூ3ரவு ஹருஷ காரண**
**ஸாரதர ஹரிதா3ஸ த3ர்பண**

**த$^{4}$ரெகெ$^{3}$ ஸ்ரீ ரமாகாந்த தா$^{3}$ஸரு மாடி$^{3}$து$^{3}$பகார |**
**ஹரிய தா$^{3}$ஸரு அரிது$^{1}$ படி$^{2}$ஸலு**
**திருமலேஶ ஹரி விட்டலராயனு**
**கரவ பிடி$^{3}$யுத கரெது$^{3}$கொள்ளுவ தன்ன புரதொ$^{3}$ளகெ$^{3}$ ||3**

துரித தூரவு - (இந்த கிருதியை படிப்பதால்) கஷ்டங்கள் விலகுகின்றன; ஹருஷ காரண - மகிழ்ச்சி கிடைக்கிறது; ஸாரதர - (ஹரிதாஸ ஸாகித்யத்தின்) ஸார ரூபமான; ஹரிதாஸ தர்பண - ஹரிதாஸ தர்பண என்னும் இந்த கிருதியை இயற்றி; ஸ்ரீரமாகாந்த தாஸரு, தரெகெ - இந்த பூமிக்கு; மாடிதுபகார - மிகப்பெரிய உதவியை செய்திருக்கிறார்; ஹரிய தாஸரு - அனைத்து ஹரிதாஸர்களும்; அரிது படிஸலு - இதனை அறிந்து படித்தால்; திருமலேஷ ஹரி விட்டலராயனு - தாஸரின் பிம்பரூபியான திருமலேஷ ஹரி விட்டலன்; கரவ பிடியுத - அத்தகையவர்களின் கைகளைப் பிடித்து; தன்ன புரதொளகெ - தன் இருப்பிடத்திற்கு; கரெதுகொள்ளுவ - அழைத்துக் கொள்கிறான்;

மூன்றாம் மற்றும் கடைசியான இந்த பல-ஸ்ருதியில், ஸ்ரீதாஸருக்கு நன்றியைக் கூறி முடிக்கிறார் ஸ்ரீதிருமலேஷ ஹரிவிட்டல தாஸர்.

ஹரிதாஸ தர்பண என்னும் இந்த கிருதியைப் படிப்பதால், கஷ்டங்கள் விலகுகின்றன. மகிழ்ச்சி கிடைக்கிறது. ஹரிதாஸ ஸாகித்யத்தின் ஸார ரூபமான இந்த கிருதியை இயற்றி, ஸ்ரீரமாகாந்த தாஸர், நமக்கு மிகப்பெரிய உதவியை செய்திருக்கிறார். அனைத்து ஹரிதாஸர்களும் இதனை அறிந்து படித்தால், (தாஸரின் பிம்பரூபியான) ஸ்ரீதிருமலேஷ ஹரி விட்டலன், அவர்களின் கைகளைப் பிடித்து, அவர்களை தன் இருப்பிடத்திற்கு அழைத்துக் கொள்கிறான். முக்தி கிடைக்கிறது என்பது கருத்து.

***

அஸ்மத் குர்வந்தர்கத பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீஜகன்னாத கேசவ ப்ரியதாம்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**.

***